உ

சிவமயம்.

அருணந்தி சிவாசாரியர் அருளிச்செய்த

# சிவஞானசித்தியார் சுபக்கம் மூலமும்,

இதற்கு

திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து

திராவிட மாபாடிய கர்த்தராகிய

## மாதவச் சிவஞானயோகிகள்

உரையைத்தழுவி

திருவாவடுதுறை ஆதீன சைவப்பிரசாரகர்

தூத்துக்குடி

பொ. முத்தையபிள்ளை எழுதிய

## பொழிப்புரை முதலியனவும்.

---


இவை

ஷை பொ. முத்தையபிள்ளையால்

மதுரை விவேகபாநு அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப் பெற்றன.

**1914.**

விலை] —— [ரூ 1—8—0

# பொருளடக்கம்.

1. முகவுரை.
2. உரிமையுரை.
3. நூலாசிரியர் வரலாறு.
4. அவதாரிகையின் அகராதி.
5. விஷய அகராதி.
6. இயல் அகராதி.
7. அதிகார அகராதி.
8. பாட்டு முதற்குறிப்பு அகராதி.
9. உரைப்பாயிரம்.
10. நூல்.
11. பிழை திருத்தம்.

உ

கணபதி துணை.

# முகவுரை.

---

இந்நில வுலகத்துள்ள மக்கள்யாவரும் அறம் பொருள் இன்பம் வீடென்னும் உறுதிப் பொருள்கள் நான்கனுள் ஒவ்வொன்றையேனும் அன்றி ஒருங்கேனும் எய்தப்பெற்று இன்புறுதலில் மிக்க விருப்பத்தினையும் முயற்சியினையும் உடையா ரென்பது, அவரவர் அநுபவ வாயிலாக வுணரத்தக்க தொன்றாம். இவ்வுறுதிப் பொருள்க ணான்கனுள் முதலிறுதியொழித்து இடைப்பட்ட இரண்டனைப் பெற அவாவுவார் இவ்வுலகின் மிகப் பலராவர். முதற்கண் உள்ளதனைப்பெற விரும்புவார் சிலராவர். இம்மூன்றனையும் ஒருவி, யிறுதிக்கண்ணுள்ள வீட்டினை விழையும் உண்மையறிஞர் சிலரினுமிகச் சிலரேயாவர். இந்நால்வகைப் பொருள்களானும் பெறப்படும் பயன்களை யாராயுங்கால், பொருளுமின்பமுமுறையே இம்மை மறுமையினும், இம்மையினும் நின்றொழிதலானும், அறம் இருமையுமுதவி வீட்டுக்குச் சாதனமாக நிற்றலானும், வீடு தன்னை யெய்தப் பெற்றாரைப் பிறப்பிறப்புத் துன்பம் இரித்துப் பேரின்புறுத்த வல்லதாகலானும் இறுதியதாகிய வீட்டினையே உண்மை யறிவுடையார் ஒருதலையாவெய்த விரும்புவ ரென்பதும், அதற்குரிய சாதனங்களைப் பெறுதற்குத் தக்க முயற்சிகளையே மேற்கொள்ளுவா ரென்பதும் போதரும். அச்சாதனங்களுண் முக்கியமானவை, தத்தஞ்சமய நூலுணர்ச்சியும், அந்நூனெறியுணர்ந்தாங் கொழுகுதலுமேயாம். அங்ஙனமாயின், நமக்குரிய சமயம்யாது? அதன்கட்கூறப்படும்பொருள்களெவை? அவற்றை விளக்கும் நூல்களெவை? என்றின்னோரன்ன ஆராய்ச்சியை மேற்கொள்ளுவேமாயின், உயர்ந்த மகாஞானிகளாற் றெளிந்து நிச்சயிக்கப்பட்ட பரம்பொருளாகிய சிவபிரானை வழிபாடுசெய்யும் நம்மனோர்க்கு உரியசமயம் சைவசமயம் என்பதும், அதன்கட் டெளியப்பட்ட பொருள்கள் அநாதியாகவுள்ள

எண்ணிறந்த ஆன்மாக்களை அநாதியே பற்றிநிற்கு மூலமலமாகிய ஆணவ அழுக்கைக் கழீஇச் சிவப்பேறுதவிப் பேரின்புறுத்துங்கருணையே காரணமாக, அவ்வவற்றின் கன்மங்களுக்கு ஈடாகத்தநுகரண புவன போகங்களைஅளித்து இயங்கி யியக்கியும், அறிவித் தறிந்தும் விளங்குகின்ற சிவபரம்பொருளாகிய பதியும், அப்பதியாலறிவிக்க அறிந்தும், கன்மப்பயனை நுகர்ந்தும், சார்ந்ததன் வண்ணமாந் தன்மை யெய்தப்பெற்றுள்ள எண்ணிறந்த ஆன்மாக்களாகிய பசுக்களும், அவை, தம் உண்மைநிலையுணர்ந்து தலைவனுகிய சிவபிரானைத் தரிசித்து இன்புறுதற்குத் தடையாக அநாதியே பற்றி நிற்கின்ற ஆணவமும், அதனை யொழித்தற்குப் போந்த கன்மமாயைகளும் ஆகிய பாசங்களும் என்னும் இம்முத்திறத்தனவா மென்பதும், இவ்வுண்மைகளைப் பொதுவகையானுஞ் சிறப்புவகையானும் ஐயந்திரிபறச்செவ்வனே விளக்கி நிலைப்படுத்து நூல்கள் வேதசிவாகமங்களும், அவற்றின் வழிப்போந்த வடமொழி தென்மொழிக்கண் உள்ள பிறநூல்களுமா மென்பதும் பெரியோர்களால் நன்கு தெளியப்பட்டனவாம்.

ஆயின், வேதத்தின்கண், பற்பல தேவர்களுக்குத் தலைமை கேட்கப் படுதலானும், பலபல சமயக் கொள்கைகளுங் கூறப்படுகின்றமையானும் தலைவர் யாவர்? எக்கொள்கை உண்மையாகச் சிறந்தது? என்னும் ஐயப்பாடு எய்துமாலோவெனின்; அஃதொழித்தற்கே வேதம் பொது நூலாயதென்க. உலகத்துள்ள மக்கள் பலதிறப்பட்ட அறிவினையும், கொள்கையினையு முடையாராகலின், அவ்வெல்லாரையுங் காக்கவேண்டு மென்னுங் கருணை வள்ளலாகிய சிவபெருமான், அவ்வவர் தகுதிக்கேற்பப் பற்பல கருத்துக்கள் தோன்ற வேதங்களை யருளிச்செய்தார். அவ்வேத ஆராய்ச்சியுடையார் பலரும், கீழ்க்கண்ட தத்துவங்களையே பரம்பொருளென முன்னர்க்கண்டு பின்னர் அவையனைத்தும் அழிதன் மாலையவென் றொருவி மேற்சென்று சென்று முடிவில், தனக்கொப்பாரு மிக்காருமில்லாத சிவபிரானையே பரம்பொருளெனத் தெளிதற்குரிய சிவாகம நெறி நின்று அப்பெருமான் றிருவடிநீழல் எய்தி யின்புறுவாராதலின், பக்குவமிக்க ஆன்மாக்களின் பொருட்டு அருளப்பட்டனவாகிய சிவாகமங்கள், சிறப்பு நூல்களாகும். இதனால் வேதங்களிற்

பிற தேவர்களுக்குக் கூறப்படுந்தலைமை உபசாரமென்பதும், சிவபிரானுக்குக் கூறப்படுந்தலைமை யுண்மையென்பதும் வெளியாம். இவ்வுண்மை, வேதங்களில் உபசாரமாகக் கூறப்பட்ட சமயங்களுக்கெல்லாம் வழிநூலாசிரியர்கள் பிறதேவர்கள் இருடிகளாகவிருப்ப, அவ்வேதங்களை யருளிச்செய்த முதலாசிரியராகிய சிவபிரானே உண்மையாகக் கூறப்பட்ட சைவசமயத்தைப் போதிக்குஞ் சிவாகமங்களுக்கு ஆசிரியராக வுள்ளமையின், சிறிதும் ஐயமின்றித்தெளியலாம். இவ்விஷயமெல்லாம் தத்துவஞானிகளாகிய சைவாசிரியர்கள் இருமொழிக்கண்ணும் தருக்க நெறிபிறழாமல் அருளிச்செய்த சைவநூல்களின் மிகவிளக்கமாக வுணரலாம்.

இனி, சைவவுண்மைகளை யறிவுறுத்துந் தமிழ்நூல்கள், சமயகுரவர்களருளிச் செய்தனவும், சிவபரத்துவ மொன்றனையே கூறுவனவுமாகிய தேவார முதலிய வேதங்களும், சந்தான குரவர்களருளிச் செய்த சிவஞானபோத முதலிய பதினன்கு சாத்திரங்களும் பிறவுமாகிய ஆகமங்களுமாம். இப்பதினன்கனுள் ஒன்றும், நம்மனோர்தவப் பேற்ருல், தமிழ்நாட்டில், திருவெண்ணெய் நல்லூரில், சைவவேளாண் மரபில் அவதரித்தருளிய ஸ்ரீ மெய்கண்டதேவர் அருளிச் செய்ததுமாகிய சிவஞான போதமே முப்பொருள்களைத் தெளிவுறுத்துஞ் சித்தாந்த சைவநூல்களுட் சிறந்த முதனூலாகும். அது, சூத்திரங்களாகவும், வார்த்திகப் பொழிப்பாகவும் அருளிச் செய்யப்பட்டிருத்தலான், அந்நூண்பொருள்களை விரிவாக விளக்கி யாவருக்குந் தெளிவுறப் போதிக்க வேண்டுமென்னுங் கருணையே காரணமாக, அம்முதனூலாசிரியராகிய ஸ்ரீ மெய்கண்டதேவர் மாணுக்கரும், அந்தணர் குலத்தி லவதரித்தவருமாகிய ஸ்ரீ அருணந்தி சிவாசாரியார் சிவஞானசித்தியார் என்னும் வழிநூலை யருளிச் செய்தார்கள். அந்நூல், பரபக்கம், சுபக்கம் எனவிருபகுதித்தாக, பரபக்கத்தில், புறப்புற முதலிய சமயங்களை, அவ்வச்சமயப் பார்வையாற் கண்டித்தும், சுபக்கத்திற் சித்தாந்தப் பார்வையால் ஏனைச்சமய வாதிகள் ஆசங்கைகளை மறுத்துச் சித்தாந்தசைவவுண்மைகளைப்புலப்படுத்தி நிரூபணஞ்செய்தும் அமிழ்தினு மினியமதுரம் பழுத்தொழுகுஞ் செய்யுள்வடிவினதாக யாக்கப்பட்டுள்ளது. சுபக்கப்பகுதி கடவுள் வாழ்த்துள்பட 328

செய்யுட்களையுடையதாகும். இது, முதனூன் முறைப்படி பன்னிரு சூத்திரப் பிரிவாகவுள்ளது: ஒவ்வொரு சூத்திரக் கருத்துக் களையும் சில பலசெய்யுட்களால் இவ்வாசிரியர் விளக்கியிருக்கின்றனர்

இந்நூலினுள்ள முன்னாறு சூத்திரங்கள் பொதுவதிகாரம் எனவும், பின்னாறு சூத்திரங்கள் சிறப்பதிகாரமெனவும் பெயர்பெறும்: அவை மும்மூன்று சூத்திரங்களையுடைய இயல்களாகப் பகுக்கப் பட்டு முறையே, பிரமாணவியல், இலக்கணவியல் எனவும், சாதன வியல், பயனியலெனவும் பெயர் பெறும். பிரமாண வியலினுள்ள மூன்று சூத்திரங்கள் முறையே பதியுண்மை, பாசவுண்மை, பசு வுண்மைகளையும், இலக்கண வியலினுள்ள மூன்று சூத்திரங்கள் பசு விலக்கணம், பாசவிலக்கணம், பதியிலக்கணங்களையும், சாதன வியலி னுள்ள மூன்று சூத்திரங்கள், சாதிக்கும் பொருளதியல்பும், சாதிக் கப்படும் பொருளதியல்பும், சாதிக்கு முறையும், பயனியலி னுள்ள மூன்று சூத்திரங்கள், பாசக்ஷயமும், சிவப்பேறும், அப்பே ற்றையுடைய சீவன் முத்தர் செயலுங் கூறுவனவாம். இம்முறைகள் முதனூற்குள்ளவாறேஇந்நூற்கும்அமைந்துள்ளன. இந்நூலினுள்ள செய்யுட்களெல்லாம் அழகிய செவ்விய சுருங்கிய சொற்களாற் றொ டுக்கப்பட்டனவாய் விழுமிய இனிய ஓசை யுடையனவாய், ஆயுந் தோறும், ஆயுந்தோறும் மேன்மேற்கிளைக்கு நுண்பொருட் பெரு க்கத்தை யுடையனவாயுள்ளன.

இப்பெருமை நோக்கியன்றே? பெரியாரும்,

> "பாரினுள்ள நூல்களெல்லாம் பார்த்தறியச் சித்தியிலே
> யோர்விருத்தப் பாதிபோ தும்" எனவும்,
>
> "பாதிவிருத் தத்தாலிப் பார்விருத்த மாகவுண்மை
> சாதித்தார் பொன்னடியைச் சாருநா ளெந்நாளோ"

எனவும் பாராட்டிப் போற்றுவா ராயினர்.

இத்தகைய மாட்சிமிக்க சிவஞான சித்தியார் சுபக்கத்துக்கு ஸ்ரீ மறைஞான தேசிகர், ஸ்ரீ சிவாக்கிரயோகியார், ஸ்ரீ ஞானப்பிர காசர், ஸ்ரீ சிவஞானயோகியார், ஸ்ரீ நிரம்பவழகியார், ஸ்ரீ சுப்பிர

மணிய தேசிகர் ஆகிய இவ்வறுவர்களாலும் சிற்சில கருத்து வேறுபாடுகளுடன் தனித்தனி செய்யப்பட்டவுரைகள் வெளிப்பட்டிருக்கின்றன இன்னும் வெளிப்படாத வேறுரைகளிருப்பினுமிருக்கலாம். வெளிவந்த இவ்வுரைகளுள் ஸ்ரீசிவாக்கிரயோகியாருரையும், ஸ்ரீசிவஞானயோகியாருரையும், அதனைப் பதப்பொருளோடு வைத்தாராய் தற்குபகாரமாக ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் செய்த வுரையும் மிக உபயோகங்களாக வுள்ளன. ஏனையவுரைகளினும் ஆங்காங்குச் சிற்சில நயங்களைக் காணலாம். பல செய்யுட்களில், ஸ்ரீசிவஞான யோகிகள் கொண்டுகூட்டு வேறுபட்டிருக்கும். அது பொருணயங்கருதியதாகும் ஸ்ரீ ஞானப்பிரகாசர் உரைசித்தாந்த சைவத்துக்கு முரணாகச்சிவசம வாதம் போதிப்பதாகலின், அது பொருந்தாதென நியாயவாயிலாக எடுத்து ஸ்ரீ சிவஞான யோகிகளாற் கண்டிக்கப் பட்டுள்ளது. ஏனையவை பெரும்பாலுந் தம்முண் மாறுபாடுடையனவாகா.

இவ்வுரைகள், பெரும்பாலும் வடசொற்களானும், உயர்ந்த செந்தமிழ்ச் சொற்களானும் எழுதப் பட்டிருக்தலானும், சிற்சில விஷயங்கள் வேறு சைவநூல்களிற் றெளிந்து கொள்ளுமாறு சுருங்கக் கூறுதலானும், வடமொழிப் பயிற்சியும் தமிழிற் பேரிலக்கிய இலக்கணவாராய்ச்சியு மின்றிச் சிற்றிலக்கிய இலக்கணந் தெரிந்த ஏனையோரும் எளிதில் விஷயங்களையுணர்ந்து கொள்ளும் வண்ணம் முன்னோர் கருத்துக்கு மாறுபாடின்றி, திருவாவடுதுறை யாதீன சைவப்பிரசாரகராகிய தூத்துக்குடி ஸ்ரீ பொ.முத்தையபிள்ளையவர்கள் புதியதாக ஒருரை யெழுதி முடித்திருக்கின்றனர். இவ்வுரைப் பிரதி யொன்று என் பார்வைக்கு அனுப்பினார்கள். ஆங்காங்குச் சிற்சில செய்யுட்களுக்கு விசேடமாக எழுதப்பட்ட வுரைக்குறிப்புக்களைப் பார்த்தேன். ஒவ்வொரு செய்யுட்களின் தலைப்பில் அச்செய்யுளின் கருத்துறு பொருளைத் தெரித்துக் காட்டும் வாக்கியங்களுள்ளன. செய்யுளின் பின் ஸ்ரீ சிவஞான சுவாமிகள் கருத்துப்படி கொண்டுகூட்டுத் தனித்தனியே எழுதப்பட்டுள்ளது; இது, கற்பார்க்கு, செய்யுள் இவ்வாறு அந்நுவயஞ் செய்யப்பட்டதென்று இலகுவினுணர்தற்குபயோகமாம். இவ்வுரை, ஸ்ரீசிவஞானசுவாமிகள் பொழிப்புரையையும், ஸ்ரீசுப்பிரமணிய தேசிகர் பதவுரையையும் சிறிதும் பிறழாமல் எடுத்து விளக்கமான எளிய சொற்றொ

டைகளால் எழுதப்பட்டுள்ளது. ஸ்ரீசிவஞானசுவாமிகள் மிகச்சுருக்கமாக வரைந்த சில விஷயங்கள் இதன்கண் விளக்கப்பட்டிருக்கின்றன. சிவஞான போதமாபாடியம் சிற்றுரைகளின் ஆராய்ச்சியிற் கண்ட சில விஷயங்களும் ஆங்காங்கு இதன்கட் காணலாம். இவ்வுரை, பெரும்பான்மை முன்னுரை யாசிரியர்கள் கருத்தைத் தழுவிச் சிறுபான்மை விளக்க விசேடங்களை யுடையதாயினும் அரிய விஷயங்கள் எளிய நடையில் விளக்கப்படுதல், கற்பார்க்கு மிக உபயோகமாதலின், இதுவுந் தமிழ்நாட்டார்க்குப் பயன்படு மென்பது என் கருத்து.

இவ்வுரை யாசிரியராகிய ஸ்ரீ பொ. முத்தையபிள்ளையவர்கள், தம் பாலப்பருவ முதல் சிவஞானபோத முதலிய சைவசாத்திரங்களை இடைவிடாது ஆராய்ந்து தமிழ் நாட்டிலுள்ள சபைகளிலும் பிறவிடங்களிலும் சைவசித்தாந்த சம்பந்தமான பல அரிய உபந்யாஸங்கள் செய்து வருகின்றனர். உபந்யாசஞ் செய்யுங்கால், எடுத்துக் கொண்ட விஷயத்துக்கு இயைபில்லாதவற்றிற் பிரவேசியாமல் மேற் கொண்ட விஷயத்தைத் தொகை வகை விரிகளால் விளக்கி நூற் பிரமாணங்களை இன்றியமையாத விடங்களிற் காட்டி விளக்கமான செஞ்சொற் சிறப்புடன் இறுதியிற் றொகையுரை யுரைத்து முடித்துக் காட்டுவதில் மிக்க திறமை வாய்ந்தவர்.

திருவாவடுதுறை யாதீனத்தில் இப்பொழுது மஹா ஸந்நிதானமாக எழுந்தருளி யிருப்பவர்களும், வரையாது கொடுக்கும் வள்ளன்மையும், கூர்ந்த அறிவும், தேவார முதலிய தமிழ் மறைகளில் நுணுகிய ஆராய்ச்சியும், உடையவர்களும் ஆகிய ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிகரவர்கள், இவ்வுரையாளராகிய பிள்ளையவர்களின் சைவசித்தாந்த நூலாராய்ச்சியையும், உபந்யாஸ ஆற்றலையுங் கண்டு மகிழ்ந்து தம் ஆதீனத்துச் சைவப்பிரசாரகராக இருந்து பற்பல நகரங்களினும் சைவசித்தாந்த உபந்யாசங்கள் புரிந்து வரும்படி கட்டளையிட்டருளினார்கள். பிள்ளையவர்களும் அக்கட்டளையை மிக்க சிரத்தையுடன் ஏற்று நடாத்தி வருகின்றனர். இவர்களுக்கு மேன் மேலும் ஓங்கும் வண்ணம் சிவஞானச் செல்வத்தையும், இன்னோரன்ன ஞானசாத்திர வாராய்ச்சியிலும், உரை யெழுதுவதிலும்,

உபந்யாசஞ் செய்வதிலும் மிகுந்த விருப்பத்தையும் முயற்சியையும், நீண்டவாணாளையும் பிறநலன்களையும் பரம கருணாநிலயமாகிய சிவபிரான் அருளிக் காப்பாராக.

இவ்வுரையை திராவிடமா பாடிய கர்த்தராகிய ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள் திருவடித்தாமரைமலர்கட்கு உரிமைப்படுத்தியிருப்பதால் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்தின் மீதும் ஸ்ரீ மாதவச்சிவஞான யோகிகள் மீதும் இப்பிள்ளையவர்கள் கொண்டுள்ளமெய்யன்பு தெற்றென விளங்கும். இந்நூலாசிரியர் சரித்திரமும், அவதாரிகையின் அகராதியும், விசேடவுரையிற் கண்ட விஷய அகராதியும், செய்யுண் முதற் குறிப்பு அகராதியும் ஆகிய இவைகள் கற்பவர்க்குப் பெரிதும் உபகாரமா மென்பதொருதலை.

சிவதருமமும், சைவசித்தாந்தமும், தமிழ் மொழியும்,
நீடுவாழ்க.

மகிபாலன் பட்டி.
5—7—14.

இங்ஙனம்,
மு. கதிரேசன்.

உ

சிவமயம்.

# உரிமையுரை.

---

தென்மொழியும் வடமொழியுந் தேர்ந்துபரம் பொருள்சிவமென் றதனைச் சாரு, நன்மையெனும் வீடருளுந் துறைசைநமச் சிவாயகுரு நற்றாள் பேணி, வன்மலவே ரைக்கெடுத்துச் சிவஞான பாடியஞ்செய் தருளும் வள்ளல், சின்மயமாஞ் சிவஞான முனிவரிரு திருவடிகள் சிந்தை செய்வாம்.

சைவசித்தாந்த சாத்திரங்கள் பலவற்றுள்ளும் பல அரிய விஷயங்களைத் தன்னுட் கொண்டு விளங்குவது சிவஞான சித்தியாரென்னும் நூலேயாம். இதற்கு முதனூலாகிய சிவஞானபோதத்தில் குறிப்பால் உணரக்கிடந்த பல விஷயங்கள் இச்சிவஞான சித்தியாரில் தெளிவாய் விளக்கப்பட்டிருக்கின்றன. இந்நூலுக்கு ஆறு ஆசிரியர்கள் உரையருளிச் செய்திருக்கின்றனர். அவ்வுரைகளுள் தருக்க முறை இலக்கண முறைகளோடு சொல்நயம் பொருள் நயம் தோன்ற விளங்குவது ஸ்ரீ மாதவச்சிவஞான யோகிகள் உரையேயாம். இவ்வுரை பொழிப்பாயிருந்தமையால் அதனை அநுசரித்து ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகரவர்கள் பதவுரை யருளிச் செய்தார்கள். திருவருட்டோன்றலாகிய இச்சிவஞான யோகிகள் திரு அவதாரஞ் செய்திலரேல் சித்தாந்த சைவச் செந்நெறி இதுவெனத் திகைப்பின்றித் துணிந்து கூற எவர்க்கும் இயலாதென்பது என் அபிப்பிராயம். இவர்கள் பல அரிய பெரிய விஷயங்களை சிவஞானபோதமாபாடியத்தில் விரிவாக அருளிச் செய்திருக்கின்றமையால் சிவஞான சித்தியாருக்கு சுருக்கமான பொழிப்புரை அருளிச் செய்தார்கள் போலும். சித்தியாரில் சுருக்கமாகக் கூறியுள்ள பல விஷயங்கள்

ஷ்யத்தில் தெளிவாகக் காணலாம். ஸ்ரீ சிவாக்கிரயோகிகளும் அநேக விஷயங்கள் சித்தியார் உரையில் அருளிச் செய்திருக்கின்றார்கள்.

ஸ்ரீ மாதவச்சிவஞான யோகிகள் திருவடியைச் சிரமேற்கொண்டு அவ்வுரைகளையும் பிறநூல்களையும் என் சிற்றறிவிற் கெட்டியவாறு ஆய்ந்த பொழுது தோன்றிய கருத்துக்களைத் திரட்டிப் பலருக்கும் உபயோகமாகும் வண்ணம் இவ்வுரை எழுதி அச்சிற்பதிப்பித்தேன். இதில் தவறு காணப்படின் அது என் சிற்றறிவின்பால் நிகழ்ந்ததாகும். அதனைப் பொறுத்தருளும்படி பெரியோர்களைப் பிரார்த்திக்கின்றேன். நயம் காணப்படின் அது ஸ்ரீமாதவச்சிவஞானயோகிகள் திருவருட்பெருக்கால் விளங்கியதாகும். ஆதலால் இவ்வுரையை ஸ்ரீமாதவச்சிவஞான யோகிகள் திருவடித்தாமரைகட்குச் சமர்ப்பிக்கின்றேன்.

இங்ஙனம்

பொ. முத்தையர்.



D

உ

சிவமயம்.

# நூலாசிரியர் வரலாறு.

## அருணந்தி சிவாசாரியர்.

பொன்னாடதனினுஞ் சிறந்த தென்னாடதனுள் நடுநாட்டில் திருத்துறையூர் என்னுந் திவ்ய தலத்தில் ஆதிசைவப் பிராமணர் குலத்தில் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளின் மாமனாராகிய ஸ்ரீ சடங்கவி சிவாசாரியருடைய இருபத்தொன்றாவது பரம்பரையில் சாலிவாகன சகாப்தம் ௧௧௱௫-ல் அதாவது இற்றைக்கு ௬௬௨ வருடங்கட்குமுன் சிவாகமப்பொருள் இனிது விளங்குதற்பொருட்டு ஒருவர் அவதாரஞ் செய்தார். இவர் ஆதிசைவ மரபிற்கேற்றவாறு வேதாகமங்களில் வல்ல பெரியோரால் சாதகன்மம், நாமகரணம் முதலியன செய்யப்பெற்று காயத்திரி மந்திரமும் உபதேசிக்கப் பெற்றனர். பின்னர் பொதுநூலாகிய வேதத்தின் கன்மகாண்டம், பத்தி காண்டம், ஞானகாண்டங்களையும் வேதாங்கமாகிய கற்பம், சிக்ஷை முதலியவற்றையுங் கற்று அதன்பின்னர் சிறப்புநூலாகிய காமிகம் முதலிய இருபத்தெட்டுச்சிவாகமங்களின் சரியை, கிரியை, யோகம், ஞானமென்னும் நான்கு பாதப்பொருள்களையும் நன்கு கற்றனர். அம்மட்டோ! தமிழினும் மிக வல்லுநராய்த் தமிழ்நூல்களுங்கற்றனர். இவ்வாறு சகல ஆகமங்களினும் வல்லுநராயிருக்குஞ் சிறப்புநோக்கி இவருக்கு சகலாகம பண்டிதரென்னுந் திருநாமம் பெரியோரால் இட்டு வழங்கப்பெற்றது.

இவ்வாறு சகல கலையினும் வல்லுநராய் விளங்கும் நாளில் பொய்ச்சமயமாகிய புறச்சமய இருள் நீங்கவும் மெய்ச்சமயமாகிய சைவசமய ஒளி மேலிடவுங்கருதி சகல ஆகமங்களையும் சகடத்தின்மேல் ஏற்றிக்கொண்டு சிதம்பரம், திருவண்ணாமலை, காசி, நேபாளம் முதலிய பல இடங்களினுஞ் சென்று தருக்கமுறையில்

எவருந் தன் கிழடங்க சைவஸ்தாபனஞ் செய்வாராயினர். செய்யுங்கால் தம்முடைய அருளுபதேசத்தைக் கடைப்பிடித்து சைவ நெறியில் ஒழுக விருப்பமுடையராய் வரும் பக்குவருக்கு சிவாகம விதிப்படி தீட்சைபுரிந்து அவருடைய மும்மல அழுக்கைப் போக்குவர்.

இவருடைய மாணுக்கர் பலருள் திருப்பெண்ணகடத்தில் வசிக்கும் பரம்பரைச்சைவவேளாளகுலதிலகராகிய அச்சுதகளப்பாளரும் ஒருவர். இவருக்குப்பிள்ளைப் பேறின்மையால் தம் ஆசிரியரையடைந்து அக்குறையை விண்ணப்பஞ் செய்தனர். அதனைக் கேட்ட சகலாகம பண்டிதர் தமிழ்வேதமாகிய தேவாரத்திருமுறையைத் திவ்ய ஆதனத்தி லெழுந்தருளச்செய்து அர்ச்சனை தீபதூப ஆராதனைகள் சமர்ப்பித்து அத்திருமுறையில் கயிறுசாத்தும்படி கட்டளையிட்டனர். உத்தரவின்படி அச்சுதகளப்பாளர் திருமுறையை நமஸ்கரித்து கயிறு சாத்தினர். திருஞானசம்பந்த சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய திருவெண்காட்டுப் பதிகத்துள்

பேயடையா பிரிவெய்தும் பிள்ளையி னோ டுள்ளநினை
வாயினவே வரம்பெறுவ ரையுறவேண் டாவொன்றும்
வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையா ரவர்தம்மைத் தோயாவாந் தீவினையே.

என்னும் திருப்பாசுரம் உதயமாயிற்று. அப்பாசுரத்தின் பொருளை சகலாகம பண்டிதர் உற்று நோக்கி மிக மகிழ்வெய்தி அச்சுதகளப்பாளரை திருவெண்காட்டில் வசிக்கும்படி உத்தரவு செய்தனர். அவர் அவ்வாறே வசித்து அங்கே உள்ள சோமசூரிய அக்கினி தீர்த்தங்களில் முழுகி சுவேதவனப்பெருமானைவணங்கி ஓர் பிள்ளையைப்பெற்றனர்.

அப்பிள்ளையார் இரண்டு வயதில் பரஞ்சோதி முனிவரால் சிவஞானபோதம் உபதேசிக்கப்பெற்று மெய்கண்டதேவர் என்னுந் தீட்சாநாமத்தையும் ஆசாரியரால் பெற்று பலருக்கும் சிவஞானபோத உபதேசஞ்செய்வாராயினர். செய்துவரும்நாளில் சகலாகம பண்டிதர் அவ்வரலாற்றைக் கேள்வியுற்று தம்முடைய மாணுக்கராகிய இவர் நம்மை வந்து பார்க்கவில்லையே யென்றெண்ணி ஆசி

னும் நாம் அவரைப் பார்ப்போமென்று அவரிருக்குமிடஞ் செல்ல விரும்பி அக்கருத்தை திருவெண்ணெய்நல்லூர் வாசிகளாகிய தம் மாணாக்கர்கட்குத் தெரிவித்தனர்.

அதனைக்கேட்ட திருவெண்ணெய் நல்லூரார்தம் குலகுருவின் வரவுநோக்கி மிக மகிழ்வெய்தி நகரமெங்கும் அலங்கரித்தனர். ஆகமங்கள் ஏற்றிய சகடைகளுடனும் விருதுகளுடனும் சகலாகம பண்டிதர் திருவெண்ணெய்நல்லூரை நோக்கிச் சென்றனர். நகரை அடுத்துவரும்பொழுது அங்குள்ளாரனைவரும் எதிர்வந்து வணங்கி சிவாகமப்பொருளை உபதேசிப்பதற்காக திரு அவதாரஞ் செய்த அரிய எம் குருநாத! தேவரீரது நல்வரவால் நாங்கள் உய்ந்தோம் உய்ந்தோம் என்று பலவாறு துதித்து திருவெண்ணெய்நல்லூருக்கு அழைத்துச் சென்றனர். சென்றதும் வீதிவலம் வந்து திருக்கோயிலையடைந்து சுவாமிதரிசனஞ் செய்து திருமடம்போய்ச்சேர்ந்தனர். சேர்ந்தபின்னர் மாணாக்கர்கள் அனைவரும் வணங்கி திருவமுது செய்வித்தனர். சிவபெருமான் றிருவடிக்கமலத்திற் பதிந்த சிந்தையை உடைய மெய்கண்டதேவர் தம்குலகுருவாகிய சகலாகம பண்டிதரைப் பார்க்கவில்லை.

சகலாகமபண்டிதர் மெய்கண்டதேவர் வாராமையை உணர்ந்து நாமேபோய்ப் பார்ப்போமென்றெண்ணி அவரிருக்குமிடஞ் சென்று உலாவிக்கொண்டுநின்றார். நிற்குங்கால் மெய்கண்டதேவர் தம் மாணாக்கருக்கு சிவஞானபோதம் பாடஞ்சொல்லிக்கொண்டிருக்கின்றார். பாடத்தில் ஆணவமலத்தின் தன்மையைப்பற்றி ஆராயத் தொடங்குஞ் சமயமாயிருந்தது. உலாவிக்கொண்டிருந்த சகலாகம பண்டிதர் மெய்கண்டதேவரை நோக்கி ஆணவமலத்தின் இலக்கணம் என்னையென்று வினவினர். மெய்கண்டதேவர் தம்முடைய சுட்டுவிரலால் சகலாகமபண்டிதரைச் சுட்டிக்காட்டினர். உடனே சகலாகமபண்டிதர் நானென்னுமுனைப் போடு வணங்காதிருக்கும்படிசெய்ததே ஆணவமலத்தின் இலக்கணமென உணர்ந்து மெய்கண்டதேவரை வணங்கினார். வணங்கவே தங் குருமரபிற்கு முதற்குருவாகிய நந்திதேவர் திருநாமத்தையே இச்சகலாகம பண்டிதருக்குச் சூட்ட வெண்ணி அருணந்தியென தீக்ஷாநாமஞ்சூட்டி

சிவஞானபோதத்தையும் உபதேசித்து மனவாசகங்கடந்தார் சிற்றம்பலநாடிகள் முதலான நாற்பத்தொன்பது மாணாக்கருள் முதல் மாணாக்கராக ஏற்றருளப்பெற்றனர்.

இவ்வாறு மெய்கண்ட தேவருடைய அருளுபதேசம் பெற்ற அருணந்தி சிவாசாரியர் திருப்பெண்ணாகடத்தில் வேதியர்குலத்தில் அவதரித்த மறைஞானசம்பந்த சிவாசாரியாருக்கு சிவஞான போதப் பொருளை உபதேசிக்க சிவஞானபோதத்திற்கு ஓர் விருத்தியுரையாக இனியதமிழ்ச் செய்யுளால் சிவஞான சித்தியாரென்னு நூலும். பாசலட்சணங்களைப் பகுத்து வினாவிடையாகஇருபா இருபஃது என்னும் நூலும் அருளிச் செய்தனர்.

இவ்வாறு உலகோபகாரமாக இருபெரும் நூல்களை அருளிச் செய்து நெடுங்காலம் சிவானந்த நிட்டையில் வீற்றிருந்து திருத்துறையூரென்னும் பதியில் புரட்டாசி மாதத்து பூரநட்சத்திரத்தில் சின்மயானந்த சிவசொரூபத்தில் இரண்டறக் கலந்தனர்.

நூலாசிரியர் வரலாறு முற்றுப்பெற்றது.

---

# அவதாரிகையின் அகராதி.

---o---


| அவதாரிகை. | பக்கம். |
|---|---|
| அகங்காரதத்துவமும் அதன் இயல்பும் அது மூத்திறப்படுமெனலும் | ௧௧௨ |
| அகப்பூசையே விசேடமெனல் ... ... | ௨௭௭ |
| அகலியை முதலிய பிரமாணமெல்லாம் சாபமும் அருளுமேயன்றி வினைப் பயன்அன்று என்பார்க்கு வினைப்பயன்தருதலும் இறைவன் சாப அருளேயாமெனல் ... ... | ௧௦௨ |
| அசுத்தமாயாகாரியத்தைத் தொகுத்துக்கூறல் ... ... | ௪௧ |
| அஞ்ஞானமும் புத்திதத்துவமும் அவற்றின் இயல்பும் | ௧௧௧ |
| அத்துவசுத்தியே சிறந்ததென்பதும் இவ்வத்துவசுத்தியால் ஆணவம்கன்மமாகிய ஏனைய மலங்களும் சுத்தியாமென்பதும் | ௨௨௯ |
| அந்தக் காணங்களைச்செலுத்தும் அக்காங்களின் அதிதெய்வங்கள் இவை எனலும் பதினைந்தும் கூடியவிடத்து ஆன்மா அறிதலைச் செய்யுமெனலும் யோகப்பயிற்சியுடையார்க்கு இப்பதினைந்தின் உண்மை விளங்குமெனலும் ... ... ... | ௧௫௧ |
| அந்தக் காணங்களை உடனின்று செலுத்தும் அக்காங்கள் இவை எனலும் அவ்வக்காங்களைச் சேர்த்து நோக்கிற் பிரணவமாமெனலும் இப்பிரணவத்தின் உண்மை நால்வகை வாக்குக்களை உற்று நோக்க வல்லார்க்கு விளங்குமெனலும் ... | ௧௫௪ |
| அந்தக்காணங்கள் கருவி எனலும் ஆன்மா இவற்றின் வேறெனலும் ஆன்மாவை யறியும் ஞானம் பசுஞானமெனலும் சிவஞானம் அதனினும்வேறெனலும் ... ... | ௧௫௦ |
| அந்தக் க(ர)ணமுதலிய பதினைந்தும் சுட்டியறியப்படுதலின் அவை ஆன்மாவின் வேறெனல் ... ... | ௧௫௨ |
| அந்தரியாக பூசைக்குவேண்டிய பூசாதிரவியங்கள் சேகரிக்குமுறையும் இப்பூசை அவசியம் வேண்டுமெனலும் | ௨௭௯ |
| அரசன் செயலும் வேதாகமங்களின் வழியேயாதலின் அச்செயல் இறைவன் அருள்வழியே என்பதும் இறைவன்செயலைக்குறிப்பிப்பதென்பதும் ... ... | ௯௩ |
| அரனுடைய சத்தி ஒவ்வொன்றே பிரமனாதியோரிடத்து நிற்றலால் அரனே முதலெனலும் அவ்வரனுக்குப் பிரமனாதியோர் இன்றியமையாது வேண்டப்படுவரெனலும் ... ... | ௯௩ |

அராகதத்துவமும் காலமுதலிய ஐந்திேனுடுங் கூடியபுருடதத்துவமும் ௧௦௯
அருவமாகிய மாயையினின்று உருவந்தோன்றுதென்னும் மாயாவாதியை மறுத்தல். ... ... ௪௨
அஃவத் தெய்வமே பலன்கொடுக்கும் என்பாரை மறுத்தல் ௮௯
அறமும் சிவபெருமானிடத்து அன்பில்லாது செய்யின் பாவமாமெனலும் பாவமும் சிவபெருமானிடத்துஅன்போடுசெய்யின் அறமாமெனலும் ௯௨
அறியப்படும்பொருள் அழிதற்றன்மைபற்றி அசத்தெனல் ௧௯௫
அறியப்படும்பொருள் அனைத்தும் வேறாகச் சுட்டியறியப்படுதலால் அசத்தெனல் ... ... ௧௯௫
அறியாத பொருள் வினைசெய்வானுல் அறியப்படாமையால் உண்டென்றல் பொருந்தாதெனல் ... ... ௧௯௬
அனுமானத்தின் அடங்கும் பிற அளவைகளின் இலக்கணம் ௧௯
அனுமான அளவையை உபயோகிக்குமிடத்து உண்டாகுங் குற்றங்களின் பாகுபாடு ... ... ... ௨௦
ஆகமப்பிரமாணம் மூன்றின் இலக்கணம் ௨௦
ஆணவமலம் கன்மமலமென்னும் நோயைத்தீர்த்து சிவத்தை அடைவித்தற்கு தூலசூக்குமஉடம்புகளை மருந்தாக இறைவனுற்றரப்படுமெனல் ௧௦௬
ஆணவமலத்தின் இலக்கணம் ... ... ௧௩௨
ஆணவமலம் அநாதியாதலால் பற்றறக் கழியாதென்பாரைமறுத்தல் ௨௯௬
ஆணவமலம் உயிர்க்குக்குணமென்பாரை மறுத்தல் ௧௩௫
ஆணவமலம் கெடுமென்பதற்கு உவமைகூறி ஏனைப் பெத்தரிடத்திருத்தலினுல் நித்தத்திற் கிழுக்கில்லை எனல் ௨௯௬
ஆணவமலம் மாயாமலங்களின் வேற்றுமையை விளக்கி ஆணவமலத்தின் தன்மை உயிரின் உணர்வைத் தடுத்தலாமெனல் ௧௩௪
ஆன்ம இலக்கணம் சித்தாந்தநெறிப்படி இதுவெனல் ௧௬௩
ஆன்மா அசித்தென்பாரையும் சித்தசித்தென்பாரையும் சுத்தசித்தென்பாரையும் மறுத்தல் ... ... ௧௫௯
ஆன்மா அந்தக் கரணங்களைக்கூடி ஐந்தவத்தைப்படுமெனல் ௧௪௯
ஆன்மா அருவமென்பாரை மறுத்தல் ... ... ௧௫௬
ஆன்மா அருவுருவமென்பாரை மறுத்தல் ௧௫௬
ஆன்மா அறிவுடைப்பொருளாதலின் அதுவே தன்னைச்செலுத்திக்கொள்ளும் இறைவன் வேண்டாமென்பாரை மறுத்தல் ௧௮௬
ஆன்மா ஆகாசம்போல் அருவமாமென்பாரை மறுத்தல் ௧௫௮
ஆன்மா உடம்பகத்து ஏகதேசமாய் நிற்குமென்பாரை மறுத்தல் ௧௬௧
ஆன்மா உடம்பளவாக நிறைந்து நிற்குமென்பாரை மறுத்தல் ௧௬௧
ஆன்மா உருவப்பொருளென்பாரை மறுத்தல் ௧௫௫

ஆன்மா ஐந்தவத்தையிற் போக்குவரவு புரிதலை அரச வுவமையின்வைத்து விளக்கல் ... ... ... கஎசு

ஆன்மா ஐந்துகோசங்களிற் கட்டுப்பட்டுப் போக்குவரவு செய்து நிற்கு மெனல் ... ... கசூஅ

ஆன்மா ஐந்துகோசங்களினும் வேறென்பதை அநுபவத்தால் வலியுறுத் தல் ... ... ... கஎஉ

ஆன்மா சந்திரன்போல அநுவுருவமென்பாரை மறுத்தல் கநிஎ

ஆன்மா தூலசரீர சூக்குமசரீரங்களைப் பொருந்தி ஐந்தவத்தைப்படுமுறைமை ... ... ... கசூரு

ஆன்மா தன்னைச்செலுத்தி உடனாய் நிற்கும் முதல்வனை யறியமாட்டா தெனல் ... ... ... கஅசு

ஆன்மாக்களைச் செலுத்துதல் கன்மமேயன்றி முதல்வன் அன்றென் பாரை மறுத்தல் ... ... கஅரு

ஆன்மா பஞ்சகோசங்களினும் நிற்கு முறைமை கசூஎ

ஆன்மா பஞ்சகோசங்களினும் வேறெனல் கசூக

ஆன்மா பஞ்சகோசங்களின் வேறென்றல் கூடா தென்பாரை மறுத் தல் ... ... ... கஎ0

ஆன்மா பரசரீர மூன்றனையும் பொருந்து முறைமை. கசூச

ஆன்மா பரமாணு வென்பாரை மறுத்தல். கசூ0

ஆன்மா பிரமமாகாதெனல். ... ... கருங

ஆன்மா முதல்வனின்வேறாய் அநாதியே அணவமலத்தில் மறைந்துநிற்கு மெனல் ... ... கஎங

ஆன்மா முதல்வன்போல வியாபகப்பொருளென்பாரை மறுத்தல் கசூஉ

ஆன்மா விஞ்ஞானமயகோச ஆனந்தமயகோசங்களே என்பாரை மறுத் தல் ... ... ... கஎ0

ஆன்மாவின் அறிவு மாயாகாரியத்தால் ஏகதேசப்படுவதாயிற்றென்பாரை மறுத்தல். ... ... கசூரு

ஆன்மாவின் முன் கரணந்தொழிற்படு மென்பதற்குக் கூறும் காந்த உவமை பொருந்தாதெனல் ... ... கருசு

ஆன்மாவிற்கு அறிவிச்சை செயல்களாகிய மூன்றும் இன்றெனவும் ஆன்ம சந்நிதியில் கரணங்கட்கே [illegible]பாரை மறுத்தல் கருசு

ஆன்மாவிற்கு தத்துவங்களே அ[illegible]ணும் இறைவன் வேண்டாமென்பாரை மறுத்தல் கஅஎ

இச்சாஞானக்கிரியா சத்திகள் சிவனுக்கும் உண்மையால் சிவன் சிவனை ஒப்பாகானெனல் ... ... ... கூகூ

இதம் அகிதங்களை இறைவன் பொருந்தி அறிதற்கு ஏது கருணையே யெனல் ... ... ... அஉ
இந்திரியக்காட்சி மானதக்காட்சிகளினிலக்கணம் ருஙி
இருமலம் மாயாகாரியமும் திரோதாயி சத்தியும் எனலும் ஐந்து மலமும் உயிர்க்குப்பந்தஞ் செய்யுமெனலும் கடுஎ
இருவகை அனுமானங்களின் இலக்கணம் ருஎ
இருவினையாவது முயற்சியென்பதும் அதுவே காமிய மலமென்பதும் அதற்கு மூலம் உண்டென்பதும் கூஅ
இலயபோக அதிகார அவத்தைகட்கு ஏதுவாய் நின்ற ஆதாரங்கள் சிவ தத்துவங்களெனலும் அவற்றின் இயல்பும் சுஎ
இறைபணி நிற்றல் இவ்வாறெனலும் அவர் செயலை இறைவன் தன்செய லென ஏன்று கொள்வனெனலும் அதுபற்றி நடுவு நிலைமைக்குக் குறையாகா தெனலும் ... ... ... உஅசு
இறைபணியில் நில்லாதார் செய்யுங் கிரியாயோகங்களால் பிறப்பு அறா தெனல் ... ... ... உஅஎ
இறைபணியில் நின்றாலன்றி இந்திரியங்களின் வழிப்பட்டுச் செல்லும் பாதந்திரம் நீங்குதலில்லையெனல் ... உஅகு
இறைபணியில் நின்றோர் இந்திரியங்களோடு கூடினும் பற்றற்றிருப்ப ரென்பதை உவமை முகத்தால் விளக்கல் உஅஅ
இறைவனாற் கூட்டப்படும் வினைப்பயனாகிய அக்கட்டளை நல்லனவாயின் அறமாயும் தீயனவாயின் பாவமாயும் இருதிறப்படுமெனல் அஎ
இறைவனாற் செய்யப்படும் அநுக்கிரகம் நிக்கிரகமாகிய இரண்டும்கருணை யேயெனல் ... ... ... அ௩
இறைவனாற்றலால் ஒரு சூக்கும உடம்பே பலதூல உடலாய் மாறுதலி னால் சற்காரியவாதத்திற் கிழுக்கில்லை யென உவமை முகத்தால் விளக்கல் ... ... ... ௱௩
இறைவனுக்கு அத்துவாக்களும் வடிவமென்று உபசரித்துரைக்கப்படு மெனல் ... ... ... சுக
இறைவனுக்கு அத்துவாக்களுள்ளும் மந்திரவடிவம் சிறந்ததென்பதற்கு ஏதுக்கூறல் ... ... ... சுக
இறைவனுக்கு அருவங்கொள்ளுதலும் அருவுருவம் கொள்ளுதலும் பொ ருந்ாதெனல் ... ... ... ருஉ
இறைவனுக்கு அருவத்திருமேனியும் அருவுருவத்திருமேனியும் உண்டு, அவையுங் கருணைமய யெனல் ... ... சு0
இறைவனுக்கு உருவங்கொள்ளுதலால் மாறுதலையடைந்து அழிவெய்து தலாகிய குற்றம் இன்றெனல் ... ... ருந

இறைவனுக்கு உருவங்கொள்ளுதல் பொருந்தாது, அருவங்கொள்ளுதலே பொருந்துமெனல் ... ... ௫௧
இறைவனுக்கு உருவத்திருமேனியுண்டு, அதுகொண்டு நம்மிலொருவனுதலில்லை யெனல் ... ... ௫௦
இறைவனுக்கு ஐந்தொழிலால் யாதொரு பயனுமின்றெனலும் அருட்பெருக்கால் அவ்வாறு செய்தல் இயல்பேயாமெனலும் ௧௯௨
இறைவனுக்கு உருவத் திருமேனி உண்டேல் நம்மில் ஒருவனுமேயெனவினுதல். ... ... ... ௪௯
இறைவனுக்குத் தனுவுண்டாகவே வாக்கு மனாதீதனென்றல் பொருந்தாதென்பரை மறுத்து பொருந்துமெனல் ௫௫
இறைவனுக்கு மந்திர வடிவுள்ளும் பஞ்சப்பிரம மந்திர வடிவம் சிறந்ததெனல் ... ... ௬௨
இறைவன் அதிசூக்கும ஐந்தொழிற்குப் பயன் உயிர்போக மோட்சங்களை அடைதலாமெனல் ... ... ௧௯௧
இறைவன் அத்துவிதமாய் நின்று காட்டிக் காணும் உபகாரத்தைச் சிந்தித்து அன்புசெய்தலினுல் மலம் நீங்கிச்சிவாநுபவம் உண்டாமெனல் ௨௯௧
இறைவன் உபகாரத்தைப்பக்குவரேயன்றி அபக்குவர் அறியாரெனல் ௩௦௦
இறைவன் உருவங் கொள்ளுதலாற் போந்த பயன் ... ௫௪
இறைவன் உருவத்திருமேனி கொள்ளாமலே இத்தொழிலனைத்துஞ் செய்யக் கூடாதோ வென்னும் ஐயத்தை நீக்கி உருவத்திருமேனி இன்றியமையாது வேண்டப்படுமெனல் ... ௫௯
இறைவன் உயிர்களோடு அத்துவிதமாய் நின்று கன்மத்துக் கேற்ப மாயையினின்றும் பிரபஞ்சத்தைத் தோற்றுவிப்பனெனல் ௭௨
இறைவன் உயிர்களோடு கலந்து உடனுய் நிற்பினும் வேறுவனென உவமை முகத்தாற் கூறல் ... ... ௭௪
இறைவன் உயிர்கள் மாட்டு வைத்த அருளினுல் தான் நினைந்த வடிவங் கொள்ளுதலால் கன்மத்தால் வடிவங் கொள்வார்க்குப் போல குறறமின்றெனல் ... ... ௫௩
இறைவன் உயிர்க்கு அறிவித்தலால் உயிர் போலும் பந்தம் அடையானெனல் ... ... ௧௮௯
இறைவன் உயிர்க்கு அறிவித்தலால் விகார மெய்தா னெனல் ௧௯௦
இறைவன் கலந்து நிற்றல் தனது சத்தியால் வினையின் பயனுகிய இன்பதுன்பங்களை உயிர்க்கு ஊட்டுதற் பொருட்டெனல் ௭௫
இறைவன் குருவாகி வந்து உணர்த்துவ னெனல் ௨௧௦
இறைவன் கொள்ளும் உருவத்திருமேனியின் பேதங்களும் அவற்றின் றெழில்களும் இவை யெனல் ... ௫௬

இறைவன் தடத்த இலக்கணமாய் நிற்பினும் அதனைப் பொருந்தாது சொரூபஇலக்கணமாய்நிற்பனெனஅவ்விலக்கணத்தைத்தொகுத்துக் கூறல் ... ... ... எக
இறைவன் உருவத்திருமேனிகளின் தொழில்களின் பயன் இவையெனல் ருஎ
இறைவன்திருமேனிகளும் அவற்றின் றொழில்களும் உயிர்களின் பொருட்டேயென்பதை அநுபவத்தில் வைத்துக்காட்டல் ருஅ
இறைவன் திருமேனி கொள்ளுதல் உயிரின் பொருட்டாதலால் அசிந்திதனே யெனல் ... ... ருஎ
இறைவன் தொழிலுக்கு வேடம் உறுதியாய் வேண்டப்படுமெனல் ருகூ
இறைவன் தொழில் மறம், வீண், தன் நயம் என்னுங் குற்றங்களுட்படாது அருளே யெனல் ... ... சஎ
இறைவன் பிறர் அறிவிக்க வேண்டாது தானே தூலஞ் சூக்குமம் அதிசூக்கும மென்னும் ஐந்தொழிலைச் செய்வனெனல் கஅஎ
இன்ப துன்பங்கட்குக் காரணம் முயற்சியே யென்பாரை மறுத்தல் எஎ
இன்ப துன்பங்கள் இயல்பே யன்றி வினையின் பயன் அன்றெனக் கூறும் உலோகாயதரை மறுத்தல் ... எகூ
ஈசுவர அவிகாரவாதி பரிணாமவாதி அயிக்க வாதிகள் கூறும் முத்திகளை மறுத்தல் ... ... ௩0க
ஈசுவர அவிகாரவாதி முதலியோர் கூறும் ஆசங்கைகளை மறுத்து சித்தாந்தத்தை வலியுறுத்தல் ... ... ௩0ச
உடம்பாட்டுச் சொல் எதிர்மறைச் சொற்களினிலக்கணம் ககூ
உடல் இடம் குறி உணர்வு மாறினும் உயிர் ஒன்றேயென உவமை முகத்தால் விளக்கல் ... ... கூஎ
உண்மைச் சமயமும் அதன் இலக்கணமும் உண்மை நூலும் இவையெனல் ... .. உ௩ச
உத்தமஜாதியிற்பிறக்கினும் வாழ்வினாகிய செருக்கும்வறுமையாலாகிய சிறுமையும்நீங்கிசைவசமயத்தைச்சாரல்மிகஅரிதெனலும், அதனினும் சித்தாந்த நெறியினால் சிவனை வழிபடுவோரே வீடுபெறுவரெனலும் கசஎ
உத்தம நாட்டில் உத்தம ஜாதியில் மானுடராய்ப் பிறத்தல் வேண்டப்படுமெனலும், வேண்டப்படுதற்குக் காரணம் உணர்ச்சிவிசேடமெனலும் கச0
உயிர் இறைவனைவிட்டு பெத்த முத்தி இரண்டினும் தனித்து நிற்றல் இல்லை எனல் ... ... உகூஅ
உயிர் உடம்பு அன்றென்பதை பிணமாய்க் கிடத்தலினும் உறக்கத்தினும் உணரப்படாமையின் வைத்து விளக்கல் கசகூ
உயிர் ஐந்து மலங்களினால் பிறந்திறந்து உழலு மெனல் க௩அ
உயிர்ஐம்பொறிகளன்றென்பதை ஒவ்வொன்றையே அறிதலினும்ஒன்றையொன்று அறியாமையினும் தமையறியாமையினும் வைத்துவிளக்கல் கசகூ

உயிர்கட்கு வினைப்பயன்களைத் தருதலே யன்றி பாவ புண்ணியங்களை பகுத்தறிவதற்கு வேதாகமங்களையும் நரக சுவர்க்கங்களையும் சிவ பெருமானே தந்தருளுவனெனல் ... ௬௨
உயிர் சூனியம் தூலவுடம்பு ஐம்பொறிசூக்குமஉடம்பு பிராணவாயுபிரமம் சமுதாயம் என்னும் எழும் அல்ல, இவற்றின் வேறாய்க் காணப்படும் உடலின் கண் உண்டெனல் ... ௧௬௪
உயிர் பிராணவாயு அன்றென்பதை அப்பிராணவாயு நிற்கும் போதும் கருவிகள் நில்லாமையில் வைத்து விளக்கல் ... ௧௬௭
உயிர் பூமி நரக சுவர்க்கங்களில் போகம் அனுபவித்தற்குரிய சரீர இயல்பு கூறல் ... ... ... ௬௬
உலகந் தோன்றி நின்றொடுங்குதலின் ஒருகருத்தாவை யுடைய தெனல் ... ... ௨௨
உலகாயதர் மதம் பற்றி வந்து நின்று போவதை வலியுறுத்துதல் ௨௩
எல்லாப்பிரமாணங்களும் மூன்றி லடங்கு மெனல் ௧௨
என்னுடைய ஆன்மா என்பதற்குப் பொருள் கூறல் ௧௭௧
ஏகனாய் நிற்றல் இறைபணி நிற்ற லென்னும் இருதிறத்தானும் மும்மலங்களும் நீங்குமெனல் ... ... ௨௮௧
ஏகனாய் நின்றாலன்றி யான் எனது என்னும் செருக்கறுத்தல் இல்லை எனல் ... ... ௨௮௩
ஏது மூன்றின் பெயரும் இலக்கணமும் ... ௧௮
ஐந்தவத்தைகளும் சகலத்தில் கீழாலவத்தை மேலாலவத்தை என இருதிறப்படு மெனல் ... ... ௧௭௬
ஐந்தவத்தையினும் சிவதத்துவம் ஐந்தும் நின்று செலுத்துமுறைமை ௧௭௮
ஐந்தவத்தையுள் ஒவ்வொரு அவத்தைக்குரிய தத்துவங்களுந் தானங்களும் இவை எனல் ... ... ௧௭௫
ஐந்து கோசங்களை ஆன்மாவென வேதத்துட் கூறியதும் ஆகு பெயரால் எனல் ... ... ௧௭௨
ஒரு உடலை விட்டவுடன் பிறிதோர் உடலை எடுக்கினு மெடுக்கும் எடுக்காது கற்போற் கிடக்கினுங் கிடக்கு மெனல் ... ௬௬
ஒரு சூக்கும உடலினின்று பல தூல உடம்பு தோன்றி அழிதற்கு உவமை ... ... ௧௦௪
ஒருவரை வழிபட மற்றொருவர் பலன் தருதல் கூடுமென்பதை உவமை முகத்தால் விளக்கல் ... ... ௮௬
ஒன்றைப்பற்றி அதுவாய் நிற்கு முயிர் முன்பற்றியதை விட்டு பிறிதொன்றை இறைவனருளையாற் பற்றி அதுவாய் நிற்கு மெனல் ௧௦௨

## அவதாரிகையின் அகராதி.


ஒருடம்பு கெடாது பிறிதோருடம்பாய் மாறும் மயிர்க்குட்டி முதலிய உவமை கெட்டுத் தோன்று மென்பதனோடு பொருந்தா தென்பார்க்கு அகலியைமுதலிய உவமைகூறி உடல்மாறுமென்பதை வலியுறுத்தல் கOக

கடவுளின் தடத்த வடிவம் அருவம், அருவுருவம், உருவமெனல் சகூ

காணங்கடத்தற்கு உபாயம் இதுவெனல் ... உகூக

கன்மமே யன்றி இறைவனில்லை என்னும் மீமாம்சகர் மதம்பற்றி இதம் அகிதம் என்னும் முயற்சி இறைவனால் என்றுகொள்ளப்பட்டுஇன்ப துன்பப்பலனை இறைவன் தருவனெனல் ... அக

கன்ம இந்திரியங்கள் இவை என்பதும் அவற்றின் தொழில்கள் இவை என்பதும் காட்டல் ... ... ககச

காரண அவத்தை கேவல சகல சுத்த மென மூன்று உண்டெனலும் அவற்றின் பொது இயல்பு இவை யெனலும் ... களகூ

கால தத்துவமும் அதன் இயல்பும் ... கOஅ

கெட்ட இடத்தில் பலன் தருந்தழை முதலியன பிறிதோரிடத்தில் பலன் தரும் வினைக்கு உவமையாகாதெனலும், அக்கினியில்சாய்ச்சிய இரும்பில் சுவறிக்கெட்டநீர் பிறிதோரிடத்தில் பலன்தராததுபோல்கெட்ட வினை பிறிதோரிடத்தில் பலன் தராதெனலும் ... அரு

கேட்டலாகிய ஞானத்தின் முறையும், அதன்கண் நிகழும் அனுபவமும் உருக

கேவலத்தின் சிறப்பியல்பு இதுவெனல் ... கஅக

சகலத்தில்மத்தியாலவத்தை ஐந்துண்டெனலும், சுத்தத்திலும்ஐந்தவத்தை உண்டெனலும் ... ... களஎ

சகலத்தின் சிறப்பியல்பு இதுவெனல் ... கஅஉ

சத்தியிற் காணப்படுதல் தனக்காமாறு உவமை முகத்தாற் கூறல் எO

சத்தியும் சிவமுமாகிய தான் முதலென்றதனை பிரத்தியட்சமாகிய அனுபவத்தில்வைத்து விளக்கி முதல்வனுக்குரிய பொது விலக்கணத்தைத் தொகுத்துக்கூறல் ... ... எO

சபீச தீட்சைக்கு அதிகாரி இவரெனலும், அத்தீட்சையின் இலக்கணம் இதுவெனலும், அதுசாதிகாரதீட்சைஎன்று சொல்லப்பட்டுசமயமுதலிய நான்காய் விளங்குமெனலும், இத்தீட்சையுடையார்சாதகர் ஆசாரியரென இருதிறப்படுவரெனலும், இத்தீட்சையும் உலகதருமிணி சிவதருமிணியென ஆச்சிரமபேதம்பற்றி இருதிறப்படுமெனலும் உஉO

சப்தாதி தன்மாத்திரை ஐந்தும் அவற்றினியல்பும் இத்தன்மாத்திரையைந்தும் மனம் புத்தி அகங்காரம் மூன்றும் ஆக எட்டும் புரி அட்டக சரீரமெனலும் ... ... ககரு

சன்மார்க்கமாகிய ஞானத்தின் இலக்கணமும் அதன் பயனும் ௨௪௫

சாதார தீட்சை நோக்க முதலாக பலவிதப்படு மெனலும், அவற்றுள் அவுத்திரி சிறந்ததெனலும், அது ஞானவதி கிரியாவதியென இருவகைப்படு மெனலும், அவ்விரண்டுந் தனித்தனி நிர்ப்பீசம் சபீச மென நாலுவகைப்படு மெனலும் ... ... ... ௨௧௬

சாந்தியாதீத கலையில் அடங்கும் அத்துவாக்களின் தொகை ... ௨௨௭

சித்தாந்த நெறியில் நிற்பவர்க்கு சிவபெருமான் அந்தச் சென்மத்திலேயே முத்தி தந்தருளுவனெனல் ... ... ... ௨௩௭

சிந்தித்தலாகிய ஞானத்தின் முறையும் அதன்கணிகழும் அனுபவமும் ௨௫௩

சிருட்டியாதி பல சத்திகள் உளவெனவே அச்சத்திகளை யுடைய சத்தன் பலவா மெனப்பட்டு அநேகேசுவர வாதமாகாதா என்பாரை மறுத்து அரன் ஒருவனே யெனல் ... ... ... ௯௪

சிருட்டி முதலிய ஐந்து தொழில்களும் அருளே யெனல் ௪௮

சிவகரணமாய் நின்ற விடத்துச் சிவனைக் காணக்கூடுமென்றிக் கரணங்கடந்த விடத்துச் சிவனைக் காண்பனென்பது பொருந்தா தென்பாரை மறுத்தல் ... ... ... ... ... ௨௫௯

சிவ சத்தி ஒன்றே சிறப்பு வகையாய்த் தொழிற் படுதலா லுண்டாம் பயன் ... ... ... ௯௫

சிவ சத்தியின் சொரூபங் கூறல் ... ... ... ௯௪

சிவசமமாதல் ஆன்மாவுக்கில்லை என்பது ... ... ௩௦௩

சிவ சமவாதி கூறும் முத்தியை மறுத்தல் ... ... ௩௦௨

சிவத்தைப் பொருந்தினவர் பழைய வாசனையால் கரணங்களைக் கூடநேரில் உபாயத்தினால் வாசனையை நீக்க வேண்டு மெனல் ... ௨௬௨

சிவத்தைப் பொருந்தினவன் கரணங்களில் மீளவரினும் இழுக்கில்லை என்பாரை மறுத்தல் ... ... ... ... ௨௬௧

சிவபிரானிடத்தில் முற்றுணர்வு முதலிய குணங்கள் உளவென்பதற்கு எதுக்கள் இவை யெனல் ... ... ... ௨௩௮

சிவபெருமானை வழிபடுதற்குரிய இடங்கள் இவை யெனல் ௯௧

சிவபேத மேழற்கும் பராசத்தியாகிய ஒருத்தியே சத்திபேத மேழாய் நிற்பளெனல் ... ... ... ... ௧௨௭

சிவமும் சத்தியு மெனப்பிரித் தெண்ணப்படினும் அவ்விரண்டும் பிரிப்பின்றி நாயகன் நாயகி பாவமாய் நிற்கு மெனல் ... ௧௨௮

சிவமும் சத்தியும் நாயகன் நாயகி பாவமாய் நிற்பினும் சிவன் பிரமசாரியும் சத்தி கன்னிகையுமா மெனல் ... ... ௧௨௯

சிவம் அறியப்படும் பொருளாகவும் அறியப்படாத பொருளாகவு மின்றிச் சித்துச் சத்தாய் நிற்கு மெனல் ... ... ௧௩௯

சிவானுபமுடைய முத்தருக்குச் சிவமே யன்றி பிற பொருள் தோன்றா தெனல் ... ... ... ... ... உகூரு

சிவானுபமுடையார்க்கு ஆணவ மலம் பற்றறக் கழியுமெனல் உகூச

சிவாலயத்தைச் சிவனெனக்கண்டு வழிபடுமுறை... ... ... ருகO

சிவோகம் பாவனை நிலைப்பதற்கு பஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரிக்க வேண்டுமெனல் ... ... ... உஎரு

சிறப்பியல்பு பொதுவியல்பின் இலக்கணம் ... ... கச

சீவன் முத்தர் இயல்பு இவ்வாறெனல் ... ... ருOசு

சீவன் முத்தன் சிவனடியாரிடத்து அன்புடையனாகவும் ஏனைய அறிவில்லாரிடத்து வெறுப்புடையனாகவும் இருக்க வேண்டுமெனல் ருOஎ

சுத்தசிவனே சுத்த மாயா தத்துவங்களில் ஒன்பது பேதமாய் நின்று தொழிற் செய்வனெனல் ... ... ... கஉச

சுத்தத்தின் சிறப்பியல்பு இதுவெனல் ... ... கஅஉ

சுத்தமாயா காரியமே மந்திரேசுவரர் முதலிய அபரமுத்தர்களின் தனுகரணாதிகளெனல் ... ... ... சO

சூக்கும உடம்புக்கு மூலம் அசுத்தமாயையென்றும் தூல சூக்கும உடல்கள் சிவத்தைச் சார்தற் பொருட்டு அஞ்ஞான காலத்தில் உளவாமென்றுங் கூறல் ... ... ... ... கOரு

சூக்கும சித்தாவதற்கும் தூல சித்தாவதற்கும் காரணம் இவையெனல் உOஅ

சூக்கும வாக்கின் இலக்கணம் ... ... ... ருஅ

செயல் யாவும் செய்யப்படுகின்ற பொருளிற் கிடந்து பலன்றருமென்பாரையும் மறுத்து வினைப்பலன் றருதற்கு இறைவன் வேண்டுமெனவும் தருதல் அவன் கடமையெனவும் கூறல் ... ... அசு

செய்தவர் மனத்தில் வினை கிடந்து வேறிடத்திற் பலன்றருதலால் இடவேற்றுமை கொண்டு தழை உவமை பொருந்தாதென்றல் கூடாதென்பாரை மறுத்தல் ... ... ... ... அரு

சைவநெறி சரியை முதல் நான்கு வகைப்படுமெனலும், அவற்றின்பயன் பதமுத்தி பரமுத்தி என இருதிறப்படுமெனலும் ... உருஅ

சொரூபசிவம் சுத்த தத்துவங்களைப்பற்றிய வியாபார பேதத்தால் இலய போக அதிகாரமென்னும் அவத்தை எய்தினும் அவை சத்தியிற் காணப்படலால் விகாரி ஆகானெனல் ... ... சுசு

ஞான குருவின் அருளாலன்றி சிவபிரான் திருவடியை அடைதல் கூடாதெனல் ... ... ... ... ... ருகஉ

ஞானகுருவை வழிபட்டவர்க்கு உண்டாம் பயன் இதுவெனல் ... ருகஉ

ஞான நிட்டையில் நிலை பெறுதார் அந்நிட்டையில் நிலைத்தற்குச் செய்யும் உபாயம் ... ... ... ... ... உருஅ

ஞான நிட்டையில் முயல்பவரின் பெருமை ... ... ... உருஅ
ஞான நிட்டையுடையோர் எத்தொழிலைச் செய்யினும இறைவன் திருவடியை விட்டுப் பிரியாரெனல் ... ... ... உருகூ
ஞானிக்கு நால்வகை வழிபாடும் கூடுமெனலும் ஏனையோர்க்கு தன்னிலைமைக்கு மேம்பட்ட வழிபாடு கூடாதெனலும் ஞானியே யாவர்க்கும் குருவாவரெனலும் சிவாலயமும் சிவனடியாரும் அக்குருவின் வேறன்மையும் ... ... ... ... ௩௧௧
ஞானேந்திரிய கன்மேந்திரியங்கள் புறக்கருவியும் மனமுதலிய நான்கும் அகப்புறக்கருவியும் கலைமுதலியன அகக்கருவியுமாம் முறைமை கக௫
ஞானேந்திரியங்க ளிவையென்பதும் அவற்றின் விடயங்களிவையென்பதும் கக௪
ஞானம் நான்குவகைப்படுமெனலும் ஞானத்திற்கு வராமல் ஓதல் முதலியவற்றினின்று சரீரம் நீங்கினவர் கதி இதுவெனலும் உ௪எ
ஞானயாகமே முத்தியைத்தருமெனலும் கன்மமுதலிய நான்கு யாகங்களும் போகத்தைத்தருமெனலும் ... ... ... உ௪௬
தடத்தசிவம் மூன்றாயினும் சொரூபசிவம் ஒன்றே. அதுவே தடத்தசிவமாயும் தடத்தசிவத்தின் அவத்தைக்கேதுவான ஆதாரமாயும் நிற்குமெனல் ... ... ... ... ... ௬௬
தண்டித்தலுங் கருணையே என்பதை உவமைமுகத்தாற் கூறல் அ௩
தத்துவங்கள் உயிரைப் பொருந்துவதற்குக் காரணம் உயிர்கட்கு கன்மமலம் ஆணவமலங்களைப் போக்குதற் பொருட்டெனல் க௩க
தத்துவங்கள் ஒடுங்குமுறை இவ்வாறெனலும் ஒடுக்குங் கடவுளர் இவரெனலும் ... ... ... ... ... கஉஉ
தத்துவம் தூலம் சூக்குமம் அதிசூக்குமம் என முத்திறப்படுமெனலும் தத்துவங்களைப் பொருந்திய அணுபக்கசம்புபக்கத்து அதிதெய்வங்கள் அவ்வத்தத்துவப்பெயர்களைப் பெறுமெனலும் யாவையும் தத்துவத்தில் வைத்துக் காணவேண்டுமெனலும் ... ... கஉ௨
தத்துவம் முப்பத்தாறும் சுத்தம் சுத்தாசுத்தம் அசுத்தமென மூவகையாகவும் பிரேரககாண்டம் போககாண்டம் போக்கியகாண்டம் என மூன்று காண்டமாகவும் இருக்குமெனல் ... ... கஉக
தத்துவம் முப்பத்தாறும் மூவகை இயல்பையுடையன வெனல் கஉ0
தத்துவா தீதனுகிய பரசிவனை அறிபவன் தத்துவஞானியெனல் க௩0
தருங்கால் தருபவன் இலயபோக அதிகாரத்துட்பட்டு துடக்குற்றும் துடக்குறுவானல்லனெனல் ... ... ... ௪௪
தருபவன் எதில்நின்று தருவனென விறைவுதல் ... ௪உ
தருபவன் ஒருவன் வேண்டுமெனல் (உலகாயதர்மதம்பற்றி) ... உச, உ௫

தருபவன் ஒருவன் வேண்டுமெனல் (மீமாம்சகர் மதம்பற்றி) ௩௩-௩௪
தருபவன் தருமுறையைத் தொகுத்துக்கூறுதல் ... ௩௫
தருபவன் நிராதாரமாய் நின்று தருவனெனல் ... ௪௩
தன் வேதனைக்காட்சி யோகக்காட்சிகளின் இலக்கணம் ௪௪
தாசநெறியாகிய சரியையினிலக்கணமும் அதன் பயனும் ... ௨௪௦
தானமும் சிவஞானிகளுக்குக் கொடுக்கில் முத்திக்கேதுவாமெனல் ௨௪௬
தானம் முதலியன பசுபுண்ணியமெனலும் சரியை முதலிய மூன்றும் பதி புண்ணியமெனலும் இம்மூன்றும் ஞானத்தைப் பயப்பித்து முத்தியைத் தருமெனலும் ... ... ... ௨௪௮
திவ்விய தேகத்தோடு இருத்தலே முத்தியென்பாரை மறுத்தல் ௨௪௪
தீட்சை சாதார தீட்சை நிராதார தீட்சை என இருவகைப்படுமெனலும் சாதார தீட்சைக்குரியார் சகலரும் நிராதார தீட்சைக்குரியார் பிரளயாகலரும் விஞ்ஞானாகலருமெனலும் ... ௨௩௯
தீட்சை செய்யும் ஆசிரியன் சிவமெனலும் செய்யும் விதமாகிய அத்துவசுத்தி இவ்வாறெனலும் ... ... ... ௨௨௨
தெளிதலாகிய ஞானத்தின் முறையும் அதன்கணிகழும் அனுபவமும் ௨௫௪
தேவபோகத்தை மானுடனாகவும் மானுடபோகத்தைத் தேவனாகவும் அனுபவித்தல் கூடாதாகலின் உடல்மாறுமெனவலியுறுத்தல் ௧௭௦
தேவர்க்கும் மனிதர்க்கும் அவரவர்க்குரிய வடிவமாறினும் உறுப்புக்களும் அங்கங்களும் மாறாவாகலின் உடல் மாறுமென்றல் பொருந்தாதென்பாருக்கு மயிர்க்குட்டி முதலியன வண்டு முதலியனவாய் மாறும் பிரத்தியட்சங்காட்டி உடல் மாறுமென வலியுறுத்தல் ௧௭௩
தோழநெறியாகிய யோகத்தினிலக்கணமும் அதன் பயனும் ௨௪௬
நரகமேயன்றிச் சுவர்க்கமும் மருந்தெனல் ௬௫
நல்வினையினுள்ளும் சிறந்ததாகிய கடவுள் வழிபாடு தத்தம் மதத்திற்கேற்றவாறு செய்யினும் சிவபெருமானே பலன்றருவனெனல் ௮௪
நிட்டையாகிய ஞானத்தின் முறையும் அதன்கண் நிகழும் அனுபவமும் ௨௫௫
நியதி, கலை, வித்தை என்னுந்தத்துவங்களினியல்பு ... ௧௦௬
நிருவிகற்ப முதலிய காட்சி நான்கின் இலக்கணம் ... ௯௩
நிர்ப்பீச தீட்சைக்கு அதிகாரி இவரெனலும் அத்தீட்சையின் இலக்கணமும் அது நிரதிகாரதீக்கையெனச்சொல்லப்பட்டு சமயம் விசேடம் நிருவாணமென மூன்றாய் விளங்குமெனலும் ... ௨௧௮
நிவிர்த்தி பிரதிட்டை என்னும் கலைகளுள் அடங்கும் அத்துவாக்களின் தொகை ... ... ௨௨௬
பக்க மூன்றின் பெயரும் இலக்கணமும் ... ௯௭

பசுஞான பாசஞானங்கட்கு தானே பிரகாசித்தலும் பிறிதொன்றைப் பிரகாசப்படுத்துதலும் இல்லாமையை அனுபவத்தில்வைத்து விளக்கல் ௨௬௮
பசுஞானம் பாசஞானங்களால் சிவனை அறியக்கூடாமைக்கு ஏது ௨௬௭
பஞ்சாக்கரத்தால் இதயத்தில் இறைவனைப் பூசிக்குமுறை ௨௭௪
பதிசூக்கும சித்தும் பசு தூலசித்துமாய் நிற்றலால் பசுவைப் பாசம் பற்றுமெனலும் அப்பற்றுதல் அநாதியெனலும் பதிபசு பாசத்திற்கு உவமையும் ... ... ... ௨௦௭
பதிஞானத்தால் சிவனை அடைதல் கூடும் எனலும் அப்பதி ஞானத்தில் நிலைபெற ஒட்டாது செய்யும் வாசனையைக் கெடுக்கும் உபாயங்கள் இவையெனலும் ௨௬௪
பதிஞானம் பிரபஞ்ச வைராக்கியத்தாலுண்டாமெனல் ௨௭௦
பதிபாசம் இரண்டனையும் ஆன்மா அறியுமெனலும் அவ்விரண்டனையும் அறியும் முகத்தால் ஆன்மா தன்னையறியுமெனலும் ... ௨௦௬
பரம்பொருளை அப்பொருளின் அருளால் ஆன்மா பிரிப்பின்றி நின்று அறியுமெனல் ... ... ... ௧௯௮
பரம்பொருள் அநிர்வசனமுமன்று மனம் வாக்குகட்கு எட்டுவதும் அன்றெனல் ... ... ... ௧௯௭
பலஉயிர்களோடும் ஒரு இறைவன் கலந்து உடனாய் நிற்பனென உவமை முகத்தாற் கூறல் ... ... ௭௩
பலதூல உடம்பு தோன்றி ஒடுங்குவதற்கு ஒரு சூக்கும உடம்பு வேண்டப்படுமென உவமை முகத்தால் விளக்கல் ... ௧௦௪
பலன் தருபவன் சிவபெருமானே யாதலின் சிவபெருமானை வழிபடுதலே சிறப்பாகிய அறமெனல் ... ... ௯௦
பாசஞானம் பசுஞானம் பதிஞானங்களின் இலக்கணம் ௨௬௫
பாசத்தைப் பதி அறியாது பதியைப் பாசமறியாதெனல் ௨௦௫
பாசப்பற்றுடையார் பற்றுவிடற்கு சிவனடியாரைச் சிவனெனவே துணிந்து வழிபடவேண்டு மெனல் ... ... ௩௦௧
பாடாணவாத ஞானமும் பேதவாதஞானமும் பசுஞானமே யெனலும் பதிஞானத்தாலன்றிப் பசுத்துவவாதனை நீங்காதெனலும் ௨௬௬
பாவத்தின் பலனைப்புசிப்பித்துத் தீர்ப்பது புண்ணியஞ் செய்வதின் பொருட்டுப்போல புண்ணியத்தின் பலனைப் புசிப்பித்துத் தீர்ப்பது மலநிவர்த்தியின் பொருட்டெனல் ... ... ௯௪
பிரத்தியட்ச முதலிய மூன்றின் இலக்கணம் ... ௧௩
பிரத்தியட்ச முதலிய மூன்றின் பாகுபாடும் அவற்றானளக்கப்படும் பொருளின் பாகு பாடும் ... ... ௧௪

# அவதாரிகையின் அகராதி.


பிரபஞ்ச வைராக்கியம் நிலைப்பதற்கு சிவோகம் பாவனைசெய்ய வேண்டு மெனல் ... ... ... ௨௭௧

பிரித்தறிய முடியாத நிலையில் ஒன்றாதலும் வேறாதலும் உடனாதலும் உள வென்பதற்கு எதுக்கூறல் ... ... ௨௦௧

புத்தர் மதம் பற்றி ஈறுமாகி மருவுவித்திடுமெனல் (இதில்உலகந்தோன்றி ஒடுங்குதற்குக் காரணமும் முத்தொழிலால் இறைவனுக்கு விகார மின்றெனலும் விளங்கும்) ... ... ௪௪-௪௫

புத்திரநெறியாகிய கிரியையி னிலக்கணமும் பயனும் ௨௪௦

புறச்சமயத் தெய்வங்கள் பிரகிருதி மாயாதத்துவம் அசுத்தமாயா தத்துவங்களில் நிலைபெறுமெனலும் அகச்சமயத் தெய்வமாகிய இலயபோக அதிகார சிவபேதங்கள் சுத்தமாயா தத்துவத்தில் நிலைபெறு மெனலும் சுத்தசிவம் முப்பத்தாறுதத்துவங்களையுங்கடந்து நிற்குமெனலும் ௧௨௪

புறச்சமயநெறி முதல் படி முறையான் மேம்பட்டு சைவத்தை அடைந்தவர்க்கு அத்துவசுத்தி எய்துதற்குரிய பருவம்உண்டாமெனலும் சைவ நெறியும் சரியை முதல் நான்குவகைப்படுமெனலும் ௨௩௧

புறச்சமய நெறிமுதல் பல வேறுவகைப்பட்ட நெறிகளின் பயனாகிய முத்தியின் இலக்கணமும் சைவமுத்தியினிலக்கணமும் ௨௩௨

புறப்பூசையும் ஆன்ம சுத்திக்கு அங்கமெனலும் அதனைச்செய்யுமுறையும் ௨௭௬

பூதங்களின் அடையாளங்களும் அதிதெய்வங்களும் கூறி அவை பஞ்ச கலைகட்கும் உளவெனல் ... ... ௧௧௬

பூதங்களின் வடிவும் நிறமும் பீசாக்கரமும் ... ௧௧௬

பூதங்களின் குணமுந் தொழிலும் ... ... ௧௧௮

பூதங்கள் தோன்றுமுறையும் அவற்றின் குணங்கள் ஒன்றற்கொன்று ஏற்றமாயிருக்குமெனலும் பூதங்களின்காரியங்கள் தாத்துவிகங்களாகிய அங்கமாகவும் பூதங்கள் அங்கியாகவும் இருக்குமெனலும் ௧௧௯

பைசந்தி வாக்கின் இலக்கணம் ... ... ௩௭

பௌராணிகர் மதம் பாஞ்சராத்திரமதம் இரண்ய கற்பமதம் பற்றி ஈறுமாகி மருவுவித்திடுமெனல், (இதில் முத்தொழிலும் சங்கார காரணன் ஒருவனுக்கே உண்டு; அவனால் பிரமவிட்டுணுக்களும் சங்கரிக்கப்படுவர் எனவிளங்கும்) ... ... ௪௫-௪௬

மத்திமை வாக்கின் இலக்கணம் ... ... ... ௩௬

மனமும் சித்தமும் அவற்றினியல்பும் ஞானேந்திரியமும் கன்மேந்திரியமும் ... ... ... ... ... ௧௧௩

மலமாகிய ஆணவ கன்மங்களைப் பிறிதொருமலமாகிய மாயையினாற் றீர்ப்பதற்கு உவமை ... ... ... ... ௧௦௭

மலம் நீங்கிய உயிரின் அறிவால் சிவனை அறியக்கூடு மென்னும் சிவசம வாதியை மறுத்தல் ... ... ... ... ௨௦
மாயாமலத்தைத் தவிர ஆணவமலம் வேறில்லை யென்பதற்குக் கூறும் உவமை பொருந்தாதெனல் ... ... ௧௫௪
மாயையின் இலக்கணம் ... ... ௧௦௮
மாயையே ஆணவமல மென்பாரை மறுத்தல் ... ... ௧௫௫
மானுடர் மானுடராகவும் மிருகம் மிருகமாகவும் இவ்வாறே பிறவும் பிறப்பதன்றி ஒரு பிறவியிலிருந்து மற்றொரு பிறவி வாரா தென்பாரை மறுத்தல் ... ... ... ... ௧௦௦
மானுடப் பிறவியினுள்ளும் உத்தம நாட்டில் உத்தம சாதியில் உத்தம சமயத்திற் பிறத்தல் அரிதெனல் ... ... ௧௫௯
மானுடப் பிறவியே அரிதெனல் ... ... ௧௫௯
மும்மலங்களும் உயிரைப் பந்தப்படுத்துதல் நெல்லிற்கு முளை தவிடு உமி போலெனலும் வேறு இருமலம் உண்டெனலும் ... ௧௫௯
முயற்சியால் வினையும் வினையால் முயற்சியும் வித்தும் மரமும் போலா மெனல் ... ... ... ௭௯
முயற்சியானது செயல் வகையால் அனுபவமாயும் யான் செய்தேனென்னுங் கருத்து வகையால் மேல்வினைக்கு வித்தாயும் இருதிறப்படு மெனல் ... ... ௮௧
முயற்சியின் பயன் மேல்வினையும் முன் வினைப்பயனை அனுபவிக்கச்செய்வினையுமென இருதிறப்படுமெனல் ... ... ௭௮
முயற்சியின்றி வினைப்பயன் அனுபவித்தல் கூடாதென்பதும் வினைப்பயனை அனுபவிப்பதற்கான முயற்சி மேல்வினைக்கு வித்தா மென்பதும் ... ... ... ... ௮௦
மூலப் பிரகிருதியும் குணதத்துவமும் குணதத்துவத்தி னியல்பும் ௧௧௦
யோகபாவனையால் இறைவனைக் காணக்கூடு மென்பாரை மறுத்து அவனருளால் காண வேண்டுமென்பதை வலியுறுத்தல் ... ௧௯௯
வந்துகின்று போவது (மீமாம்சகர் மதம்பற்றி) இதில் உடல் உலகம்போல அழியாதென்பாரையும், அழியினும் ஒருசேர அழியாதென்பாரையும், காலமே கடவுளென்பாரையும் மறுத்தல் விளங்கும் ௨௮, ௨௯
வருமுறை. (உலோகாயதச் சார்புபற்றி) இதில் உலகம் அவ்வச் சார்பிற்றோன்று மென்பாரையும், அநிருவசனப் பொருள் தோன்று மென்பாரையும், உண்மாய் இல்லையுமாயுள்ள பொருள் தோன்று மென்பாரையும் மறுத்தல் விளங்கும் ... ... ௨௬, ௨௭
வருமுறை (தார்க்கிகர் மதம்பற்றி) இதில் அணுகாரணவாதம் மறுக்கப்படுகின்றது ... ... ௨௯, ௩௦, ௩௧, ௩௨, ௩௩

வறுமையாலுண்டாஞ் சிறுமை நீங்குதற்குச் செல்வரைப் பின்பற்றி வாழ்தல் பயனில்லையென்றெண்ணுதல் உபாயமெனல் ... கசரு
வாக்கு நான்கும் சிவதத்துவம் ஐந்திலிருக்குமெனல் ருஅ
வாக்கை இன்றி எவர்க்கும் அறிவுண்டாகாதெனல் சo
வாழ்விலாகிய மையலை நீக்குதற்கு அதிகாரஞ்செய்வோர் தாம் சும்மாயிருத்தலைநோக்கி தம்மைப்பிணமெனக்கருதுதலும் உபாயமெனல் கசஉ
வாழ்விலாகிய மையலை நீக்குதற்கு சரீரநிலையாமையை நோக்குதல்உபாயமெனல் ... ... ... கசக
வாழ்விலாகிய மையலை நீக்குதற்கு விடயங்களை அறியும் அறிவும் வாழ்க்கையும் நிலையுடையனவல்லவென அறிதலும் உபாயமெனல் கசக
வித்தை சாந்தியென்னுங்கலைகளுள் அடங்கும் அத்துவாக்களின்தொகை உஉஎ
வினைசெய்வதாகிய உயிரொன்றும் அவ்வினை நிகழ்தற்குரிய துணைகள் ஏழும் ஆக எட்டு முதல் நிலைகளும் சிற்றறிவுடையதும் சடமுமாதலின் முற்றறிவுடைய முதல்வனுக்கு வினைப்பயனைக் கூட்டுவித்தல் கடமை எனல் ... ... ... அஎ
வினையானது தொடர்ச்சியாய் இறைவனாணையால் உயிர்க்கு பலவேறு வகைப்பட்ட உடல்களைத் தோற்றுவிக்கும் எனல் ... கூகூ
வினையே பலன்தருமென்பாரை மறுத்து இறைவனே தரவேண்டும் கெட்டுப் பலன்தருதல் எவ்விடத்துஞ் செல்லாது எனல் ... அச
வீடுபேற்றிற்குச் சிறந்தசாதனம் ஞானமேயன்றிப் பிறிதில்லையெனல் உகூo
வேதம் பொதுநூலும் ஆகமம் சிறப்புநூலும் சித்தாந்தமும் எனல் உருசு
வேதாகமங்களின் விதியிற் றவறினரைத் தண்டித்தற்கும் அவ்விதியில்ஒழுகினரை வாழ்வித்தற்கும் அரசனை உவமையாகக்கூறல் கூரு
வேதாகமங்கள் முதனூலெனவும் ஏனையநூல்களெல்லாம் வழிநூல் சார்புநூல்களாய் முதனூலில் அடங்குமெனவும் ... உருகூ
வைகரிவாக்கின் இலக்கணம் ... ... ருசு
வைத்தியன் மருந்தாலும் பிராயச்சித்தத்தாலும் நோயைத் தீர்ப்பதுபோல இறைவனும் நரகசுவர்க்க முதலிய பலவாற்றானும் வினைநோயைத் தீர்ப்பன் எனல் ... ... ... கூகூ

அவதாரிகையின் அகராதி முற்றிற்று.



# விசேடவுரையிற்கண்ட விஷய அகராதி.




| | பக்கம். |
|---|---|
| அகரம் | 74 |
| அங்கம் | 55 |
| அசபை | 243 |
| அதிசூக்கும ஐந்தொழில் | 18[illegible] |
| அத்துவா | 223 |
| அத்துவா ஆறும் இருவகைப்பிரபஞ்சம் | 224 |
| அத்துவாக்கள் வியாபகம் | 228 |
| அத்துவாககளால் கன்மம் வருதல் | 223 |
| அத்துவிதம் | 20[illegible] |
| அத்துவித திருட்டாந்தத்தின் பேதம் | 2 |
| அந்தக் கரணங்களின் தோற்றுமுறை தொழிற்படுமுறை வேறுபாடு | 112 |
| அபிடேகம் | 221 |
| அருத்தாபத்தி | 12 |
| அவுத்திரி | 218 |
| அனுகதம் | 243 |
| அன்னமயகோசம் | 167 |
| ஆக்கினை | 243 |
| ஆணவமலத்தின் மறைப்பு | 132 |
| ஆதனம் | 244 |
| ஆனந்த மயகோசம் | 167 |
| ஆன்மா அணுவென்றதன் கருத்து | 160 |
| ஆன்மா சூக்குமவடிவம் | 275 |
| இத்தை விளைவித்தன்மலம் | 297 |
| இபமம் | 244 |
| இரகசியம் | 247 |
| இராகம் | 133 |

| | பக்கம். |
|---|---|
| இராசதகுணம் | 111 |
| இருவினையொப்பு | 48 |
| இன்மை | 12 |
| உடம்பு மூவகை | 96 |
| உணர்ச்சி மூவகை | 18 |
| உபாங்கம் | 56 |
| உவமை | 12 |
| எண்குணங்கள் | 278 |
| ஐதீகம் | 12 |
| ஐந்து தொழில்களை முத்தொழிலாகக் கூறல் | 48 |
| ஐந்தெழுத்தின் பொருள் | 274 |
| ஐந்தெழுத்துத் தூலவடிவம் | 275 |
| ஒடுக்கமுறை | 36 |
| ஒன்பது பேதந் தோன்றுமுறை | 125 |
| ஒன்பது பேதத்திற்கு உதாரணம் | 126 |
| ஒன்பதுபேதம் மூன்று திருமேனி | 127 |
| கலை | 223 |
| கவலை | 133 |
| காட்டும் உபகாரம் காணும் உபகாரம் | 299 |
| காமிகம் | 219 |
| காயவுவமை திகிரி உவமைகளின் வேற்றுமை | 289 |
| காரணகாரிய அவத்தை | 180 |
| காரணகாரிய வேற்றுமை | 31 |
| காரண சரீரம் | 38 |
| கேவலத்தில் ஐந்தவத்தை | 180 |
| சகசம் | 12 |

சகலர் 214
சகலரில் மூவர் 214
சத்தாதி வேற்றுமை 116
சத்தி அதிசூக்குமவடிவம் 275
சத்தி அதிட்டிதகலை 225
சத்தியின் சொரூபதடத்தம் 65
சத்திகலை 224
சத்திநிபாதம் 215
சந்நிதி 190
சந்நிதி மாத்திரையால் தோன்றுதல் 252
சந்திரகலைஉவமைவேறுபாடு 105
சந்திரன் அருவுருவம் 53
சபீசம் 218
சமயதீட்சை 219
சமயாசார கன்மம் 221
சமாதி 244
சம்பவம் 12
சற்காரியவாதம் 196
சாக்கிரமுதலியஐந்தவத்தை 166
சாக்கிரத்தில் ஐந்தவத்தை 178
சாங்கம 55
சாதாரதீட்சை 216
சாதிகாரதீட்சை 221
சாத்துவிக குணம் 111
சாந்திராயணம் 247
சாமீபம் 239
சாம்பவம் 218
சாயுச்சியம் 240
சாரூபம் 239
சாலோகம் 239
சித்துச்சத்தி னிலக்கணம் 194
சிவதத்துவம் இறைவனுடைய வியாபாரத்திற்கு இடமும் இறைவனுக்கு வடிவமும் 68
சிவம் சத்தியெனப் பிரித்த தன் கருத்து 128
சிவரூப முதலிய நான்கு 305
சுத்தத்தில் ஐந்தவத்தை 181
சுவாதிட்டானம் 243
சூக்கும ஐந்தொழில் 188
சூக்குமசித்து 164
சூசிகடாகநயம் 15
செயப்படுபொருளும் வினைமுதலும்ஒன்றுமாறில்லை 25
ஞானவதி கிரியாவதி 218
தத்துவம் 223
தமம் 41
தரம் 41
தனுகரணபுவனபோகம் 108
தாபம் 133
தாமதகுணம் 111
தாரணை 244
தியானம் 244
திருவடி 233
திருவடி அடைதலென்றதன் பொருள் 233
திரோதான சத்தியின்பேதம் 225
துரியாதீதத்தில் பிராணவாயுவின் காவல் 175
தூல ஐந்தொழில் 188
தூலசரீர தத்துவம் (௨0) 118
தூலசித்து 164
தூலம் 41
தேரைச்செலுத்துதல் 168
தோற்பாவையை யாட்டுதல் 168
தோற்றுமுறை 36
நடனம் 60
நித்தியகன்மம் 219
நியமம் 244
நிராதாரதீட்சை 216
நிர்ப்பீசம் 218
நிர்வாணதீட்சை 220
நீருக்கு நிழலுண்டு 201
நூல் (சாஸ்திரதீட்சை) 217
நைட்டிக தீட்சை 221
நைமித்திக கன்மம் 219

நோக்கம் 217
பக்கம் சபக்கம் விபக்கத்திற்கு உவமை 18
பசுஞானம் 266
பசுவிளங்கித்தோன்றுதல் 274
பஞ்சீகரணம் 117
பதிபசுபாசவுவமைவேறுபாடு 209
பரகாயப் பிரவேசஞ்செய்தல் 168
பரமுத்தி சீவன்முத்தி 290
பரிக்கிரக சத்தி 39
பரிசதீட்சை 217
பரிணாமம் 36
பவுதிக தீட்சை 221
பாசம் 18
பாசம்விளங்கித்தோன்றுதல் 274
பாரிசேடம் 12
பாவனை 217
பிரத்தியக்கம் 55
பிரத்தியாகாரம் 244
பிரபஞ்சம் முத்திறப்படும் 35
பிரளயாகலர் 214
பிராணமயகோசம் 167
பிராணாயாமம் 244
புண்ணிய வேறுபாடு 90
பூதம் நான்கும் முத்தொழிற்படுமுறை 25
பெத்தான்மாவை நணுகி நிற்றலினால் மலம் நித்தம் 298
பேதாபேதம் 153
பொற்பணிஉவமைவேறுபாடு 104
மகாவாக்கியப் பொருள் 272
மணிபூரகம் 243
மதம் 133
மரத்தினின்று உதிர்ந்த இலை மரத்தில் ஒடுங்குதல் 32
மரப்பாவையை இயக்குதல் 168
மனோமயகோசம் 167
மானதம் 247
மும்மலங்களுக்கு நெல்முதலிய உவமை 136
மும்மலங்களின் வேற்றுமை 137
மூலகன்மம் 98
மூலாதாரம் 243
மோகம் 133
யோகம் (யோகதீட்சை) 218
வாக்கு (வாசகதீட்சை 217
வாக்கு நான்கும் ஐவகைப்பட்டு நிற்றல் 39
வாசகம் 247
வாட்டம் 133
வாயுவை யடக்குதல் 242
விசித்திரம் 133
விசுத்தி 243
விசேடதீட்சை 220
விஞ்ஞானகலர் 213
விஞ்ஞானமயகோசம் 167
வித்து மரங்களின் முற்பிற்பாடு 79
வியாபக வியாப்பிய வியாத்தி 229
வினை 81
வேடங்கட்டியாடுதல் 168

உ

சிவமயம்.

# சிவஞான சித்தியார் * சுபக்கம்.

## மூலமும் பொழிப்புரையும்.



உரையாசிரியராகிய மாதவச்சிவஞான யோகிகளருளிச்செய்த

## உரைப்பாயிரம்.

---

### குருவணக்கம்.

பண்ணினிசைவெம் பரிதிமதி திலதயிலந் தீயிரும்பு பாணி யுப்பு
விண்ணனில முடலுயிர்நீர் நிழலுச்சிப் பளிங்குபகல் விளக்குப் பானீர்
கண்ணிரவி யுணர்வொளிபோற் பிரிவரிய வத்துவிதக் கல்வி காட்டித்
தண்ணளிவைத் தெனையாண்ட துறைசைநமச் சிவாயகுரு சரணம் போற்றி.

(பொ-ரை) பண்ணும் (இராகமும்) ஓசையும்போலவும், சூரியனொளியும் பகற்காலத்துக் காணப்படும் சந்திரனொளியும்போலவும், எள்ளும் அதனுள்ளிருக்கும் நெய்யும்போலவும், தீயும் அதனாற் காய்ச்சப்பட்ட இரும்பும்போலவும், தண்ணீரும் அதனோடு சேர்ந்த உப்பும்போலவும், ஆகாயமும் காற்றும்போலவும், உடலும் உயிரும்போலவும் † நீரும் அதனிழலும்போலவும், மத்தியான வேளையிலுள்ள சூரியனொளியும் பளிங்கின் ஒளியும்போலவும், சூரியனொளியும் பகற்காலத்து விளக்கொளியும்போலவும், பாலும் அதனுடன்சேர்ந்த நீரும்போலவும், கண்ணொளியும் அதற்குப்பொருளைக் காட்டியும், கண்டும் உடனாய் நிற்கும் சூரியனொளியும்போலவும், ஆன்மாவின் அறிவும் அவ்வறிவால் பொருளையறியும் கண்ணொளியும்போலவும் பிரிக்கமுடியாத சிவசீவர்களின் அத்துவிதமாகிய கலப்பை கிருபையினால் அனுபவமாய் அறியும்படிசெய்து அடியேனை ஆட்கொண்டருளிய திருவாவடுதுறையின்கண் எழுந்தருளியிருக்கும் நமச்சிவாய தேசிக குருமூர்த்திகளின் திருவடிகளைத் துதிப்பாம். (எ-று.)

---

* சுபக்கம் - தன்பக்கம்.

† நீருக்குநிழலுண் டென்பது சிவஞானபோதம் எட்டாஞ்சூத்திரம் இரண்டாமதிகரணத்தில் "நீர் நிழல்போல் இல்லா அருவாகி நின்றானை" என்னும் வெண்பாவானும், உரையானும் அறிக.

சிவனும் சீவனும் பொருட்டன்மையில் இரண்டாயினும் பிரிக்க முடியாவாம். இவ்வாறு பிரிக்கமுடியாத கலப்பின் சம்பந்தத்தையே அத்துவிதமென நூல்கள் கூறும். இவ்வத்துவித சம்பந்தம் எதுபோலும் என்பதை அறிவித்தற்கு பதின்மூன்று உவமை கூறினர். அப்பதின்மூன்றுவமைகட்கும் பதின்மூன்றுபேதங்கள் உளவாகலின் மிகைபடக்கூறலென்னுங் குற்றமின்றாம். அப்பேதங்கள் வருமாறு.

அத்துவிதமாகிய கலப்பை ஒன்றாய் நிற்றலென்பேமா? வேறாய் நிற்றலென்பேமா? ஒருவாற்றால் ஒன்றும் ஒருவாற்றால் வேறுமான உடனாய் நிற்றல் என்பேமா? எனின் இம்மூன்றுமாய் நிற்றலே அத்துவிதமாமென்க. மூன்றுமாய்நிற்றற்குப்பயன் யாதெனின் உயிர்கள் நிலைத்தற்கு இறைவன் ஒன்றாய் நிற்றலும், பொருள்களை உயிர்கள் அறியும்படி அறிவித்தற்கு இறைவன் வேறாய் நிற்றலும், அறியினும் அறிந்தவாறே அனுபவிக்கும் சுதந்தரமின்மையின் அனுபவிக்கும் வண்ணம் செலுத்துதற்கு இறைவன் உடனாய் நிற்றலும் வேண்டப்படுதலின் நிலைத்தல், அறிதல், அனுபவித்தலென்னும் மூன்றும் பயனாம். இம்மூன்றனுள் எப்பயனும் அடங்கும். இவ்வாறு நிற்கும் முத்திறத்துள் ஒன்றாய் நிற்றற்கு மூன்று உவமையும், வேறாய் நிற்றற்கு மூன்று உவமையும், உடனாய் நிற்றற்கு ஏழு உவமையும் முறையே கூறினர். அவற்றுள்.

பண் என்பது ஒலியின்பேதம். ஒலியைவிடப் பண் வேறன்று. ஆயினும் ஒலி எல்லாம் பண்ணாகாமையின் ஒலியுமன்று; இவ்வாறு ஒலியுமன்றாய் ஒலியின் பேதமேயாகிய பண் ஒலியைவிட்டுத்தனித்து நில்லாதவாறுபோல சிவனாகிய சித்தன்றாய் சித்தின்பேதமாகிய சீவன் சிவனை இன்றித்தனித்து நில்லாமையை உணர்த்த "பண்இசை" என்றார். இதனையே "யானெனுந் தன்மை நினையின்றி இல்லாத் தன்மையால் வேறலேன்" எனத்தாயுமான சுவாமிகள் அருளிச் செய்வாராயினர்.

ஒலியின்பேதமே பண்ணென்றாற்போல சிவபேதமே சீவனென்னலாமோ என்பார்க்கு சூரியன் ஒளியைவிட்டுச் சந்திரனுக்கு ஒளியில்லை யாயினும் பொருளால் வேறு காணப்படுமாறுபோல

சிவனையின்றிச் சீவன் தனித்து நிற்றல் இல்லையாயினும் பொருளால் வேறுண்டென்பது உணர்த்த "வெம்பரிதிமதி" என்றார்.

சூரியனும் சந்திரனும் வேறுவேறு பிரித்தறியப்படுமாறுபோல சிவனும் சீவனும் வேறு வேறு பிரித்தறியப்படுமோ வென்பார்க்கு எள்ளைவிட்டு வேறு பிரித்தறிய முடியாத நெய்போல, சீவனைவிட்டுச் சிவனை வேறு பிரித்தறிய முடியாதென்ப துணர்த்துதற்கு "திலதைல" மென்றார். எள்ளினின்றும் நெய்வேறு பிரிக்கவும் படுகின்றதே எனின், நெய் உள்ளளவுந்தான் எள்ளெனப்படுவதேயன்றி நெய் பிரிந்தபின்னர் எள்ளென்பதின்றாதலின் அதன்கண் ஆசங்கையின்மை யறிக. இம்மூன்றுவமைகளும் ஒன்றாய் நிற்றலை விளக்கியவாறும்.

இனிநெய்யைவிட்டு எள்ளுந்தனித்து நில்லாதவாறுபோல சிவனைவிட்டு உயிர் தனித்து நிற்றலில்லை எனப்பட்டு அவ்வாறு தனித்து நில்லாத பொருளுக்கு அறிவிக்கமுடியாதாகுமே என்பார்க்கு தீயினாற் காய்ச்சப்பட்ட இரும்பு தீயேயாயினும் இரும்பின் வேறாய் தீ நிற்றல் காணப்படுதல்போல உயிரின் வேறாய் சிவன் நிற்பன் என்பதை உணர்த்துவதற்கு "தீ இரும்பு" என்றார்.

இரும்பின் வேறாய் தீ தனித்து நிற்பினும் இரும்போடியைந்த தீ தனித்துக் காணப்படாதவாறுபோல இறைவன் வேறு காணப்படானோ என்பார்க்கு உப்போடு கூடிய நீர் உப்பேயாயினும் உப்பில் நின்றும் நீர் தனித்து நிற்கவும்படுவதுபோல இறைவனும் தனித்து நிற்பனென்பதுணர்த்துவதற்கு "பாணி உப்பு" என்றார்.

நீரைவிட்டு உப்பு ஒருகாலத்துப் பிரிந்திருப்பதுபோல இறைவனைவிட்டு உயிர் ஒருகாலத்துப்பிரிந்திருக்குமோ என்பார்க்குக் காற்று எக்காலத்தும் ஆகாயத்தைப் பிரிந்திராதவாறுபோல உயிர் எக்காலத்தும் இறைவனைவிட்டுப் பிரிந்திராதென்பதுணர்த்துதற்கு "விண்ணநிலம்" என்றார். "தீ இரும்பு, பாணிஉப்பு, விண்ணநிலம்" என்ற இம்மூன்று உவமைகளும் வேறாய் நிற்றலை விளக்கியவாறும்.

காற்றுக்கு ஆகாயம் இடங்கொடுத்திருத்தலேயன்றி காற்றை அசையும்படி செய்வதில்லை; அதுபோல உயிர்க்கு இறைவன்

ஆதாரமாய் நிற்றலேயன்றி உயிரைச் செலுத்துதல் இல்லையோ வென்பார்க்கு உடலிருத்தற்காதாரமாகிய உயிர் உடலை உடனின்று செலுத்துவதுபோல இறைவனும் உயிருடன் நின்று செலுத்துவ னென்பதுணர்த்துதற்கு "உடல் உயிர்" என்றார்.

உடலை உயிர் இயக்கும் முறைமையில் சாக்கிரத்தில் தூல உடலையும், சொப்பனத்தில் தூலத்தைவிட்டுச் சூக்கும உடலையும்சுழுத்தியில் தூல சூக்குமம் இரண்டையும்விட்டுக் காரண உடலையும் இயக்குவதுபோல இறைவன் உயிரை இயக்கும் முறையில் கூடியும் பிரிந்தும் நிற்பானோ என்பார்க்கு நீரினிடத்து நிழல் எக்காலத்தும் பிரிப்பின்றி விரவி நிற்றல்போல உயிரினிடத்து இறைவன் எக்காலத்தும் பிரிப்பின்றி விரவிநிற்பனென்பதுணர்த்துதற்கு "நீர்நிழ" லென்றார்.

நிழலின் உபகாரமின்றியே நீர் எக்காலத்தும் உவர்ப்பு, கைப்பு முதலிய ரசங்களைப்பற்றி அது அதுவாய் நிற்பதுபோல இறைவன் உபகாரமின்றியே உயிர் எக்காலத்தும் விடயங்களைப்பற்றி அது அதுவாய் நிற்குமோ என்பார்க்கு சூரியன் ஒளி புக்கத்திருக்கும் பொழுது அவ்வொளியைக்கொண்டே பளிங்கின் ஒளி பஞ்ச வன்னங்களைப் பற்றுதலும், சூரியன் ஒளி உச்சியிலிருக்கும்பொழுது பளிங்கின் ஒளி அச்சூரியன் ஒளியோடு கலந்து ஒரு வன்னங்களையும், பற்றாமலும் இருத்தல்போல பெத்த காலத்து இறைவன் மறைந்து நிற்க அவ்விறைவன் துணையைக்கொண்டே உயிர்கள் விடயங்களை அறிதலும், முத்திக்காலத்து இறைவனோடு உயிர் கலந்து ஒரு விடயங்களையும், அறியாதிருத்தலும் கூடுமென்பதுணர்த்துதற்கு "உச்சிப்பளிங்கு" என்றார்.

உச்சிக்காலத்து எதிர்ப்பட்ட பளிங்கு தன் ஒளி மழுங்காத வாறுபோல முத்திக்காலத்து உயிர்க்குத்தற்போதம் கெடுதலில்லையோவென்பார்க்கு பகற்காலத்து விளக்கின் ஒளி சூரியன் ஒளியில் அடங்கி நிற்பதுபோல முத்திக்காலத்து உயிர் தற்போதம் கெட்டு நிற்குமென்பதுணர்த்துதற்கு "பகல் விளக்கு" என்றார்.

பகற்காலத்து விளக்கு செயலற்றிருத்தல்போல முத்திக்காலத்து உயிர்க்கு இன்பானுபவம் இல்லையோ வென்பார்க்கு பால் தன் சுவை முழுதும் தன்னோடு கலந்த நீருக்காக்கி நீரைத் தன்னுள் அடங்கி நிற்கச்செய்யுமாறுபோல இறைவனும் முத்திக்காலத்து, தன் இன்பம் முழுதும் உயிருக்காக்கித் தன்னுள் அடங்கி நிற்கச் செய்யுமென்பதுணர்த்துதற்கு "பால் நீர்" என்றார்.

நீர் பாலோடு கூடியவழி பாலின் சுவையாயும் பாலோடு கூடாதவழி தன்சுவையாயும் நிற்குமாறுபோல உயிர் இறைவனோடு கூடியவழி இறைவனுக்குரிய இன்பமயமாயும், இறைவனோடு கூடாத வழி தனக்குரிய இன்பமயமாயும் நிற்குமோ என்பார்க்கு கண் ஒளியுடைப்பொருளாயினும் அக்கண்ணொளி சூரியன் முதலிய பிறவொளியின் துணையையின்றி எக்காலத்தும் பிரகாசிக்க மாட்டாதவாறு போல உயிர் அறிவுடைப் பொருளாயினும் இறைவனையின்றி எக்காலத்தும் அறியமாட்டாதென்பதுணர்த்துதற்கு "கண்ணிரவி" யென்றார்.

கண்ணொளியும் சூரியனொளியும் கலந்து நிற்பினும் கண்ணும் சூரியனும் வேறு வேறு இடத்திருத்தல்போல உயிரின் அறிவும் இறைவன் அறிவும் கலந்து நிற்பினும் உயிரும் இறைவனும் வேறு வேறிடத்தில் இருத்தல்கூடுமோ என்பார்க்கு கண்ணொளியின் உள்ளீடாய் விரவி நிற்கும் உயிரையின்றிக் கண்ணொளி விடயத்தை அறியாதவாறுபோல உயிரின் உள்ளீடாய் உயிர்க்குயிராய் நிற்கும் இறைவனையின்றி உயிர் ஒன்றனையும் உணராதாகலின் உயிரும் இறைவனும் வேறு வேறிடத்திலிருப்பதில்லை எனவும் ஓரிடத்தில் கலந்து நிற்பதுண்டு எனவும் உணர்த்துதற்கு "உணர்வொளி" என்றார்.

உடலுயிர், நீர் நிழல், உச்சிப்பளிங்கு, பகல் விளக்கு, பால்நீர், கண்ணிரவி, உணர்வொளி என்ற இவ்வேழுவமைகளும் உடனாய் நிற்றலை விளக்கியவாறும்.

—(*)—

# சிவஞானசித்தியார் சுபக்கம்.



## நூலாசிரியராகிய அருணந்திதேவ நாயனுர் அருளிச்செய்த

### காப்பு.

ஒருகோட்ட னிருசெவியன் மும்மதத்த
 னல்வாயைங் கரத்த னாறு
தருகோட்டம் பிறையிதழித் தாழ்சடையான்
 றருமொருவா ரணத்தின் றாள்க
ளுருகோட்டன் பொடும்வணங்கி யோவாதே
 யிரவுபக லுணர்வோர் சிந்தைத்
திருகோட்டு மயன்றிருமால் செல்வமுமொன்
 றோவென்னச் செய்யுந் தேவே.

(கொண்டுகூட்டு) ஆறு தருகோட்டு அம்பிறை இதழித்தாழ் சடையான் றரும் ஒரு கோட்டன் இருசெவியன் மும்மதத்தன் நால்வாய் ஐங்கரத்தன் ஒரு வாரணத்தின் தாள்கள் உருகு ஒடு அன்பொடும் ஓவாதே வணங்கி இரவு பகல் உணர்வோர் சிந்தைத் திருகு ஓட்டும் அயன் திருமால் செல்வமு மொன்றோ வென்னத் தேவே செய்யும்.

(பொ-ரை) கங்கையும், இயல்பாலுண்டாகிய வளைவால் அழகு பெற்ற பிறையும், கொன்றைமாலையும் அணிந்த தாழ்ந்த சடையையுடைய சிவபிரான் தந்தருளிய ஒற்றைக் கொம்பையுடையனும், முறம்போலும் இரண்டு செவிகளையுடையனும், * மூன்று மதங்களை யுடையனும், தொங்கிய வாயையுடையனும், ஐந்து கரங்களை யுடையனுமாகிய ஒப்பற்ற யானை முகத்தானுடைய திருவடிகள்; உருகுதலுடன் ஒடப்பெற்ற பேரன்பால் இடையறாது தம்மை வழிபட்டு இரவும் பகலும் தியானிப்போரறிவின் கண்ணதாகிய மலச்சேட்டையை ஓட்டும். அதுவேயுமன்றி அயனரிவாழ்வும் ஒரு பொருளன்றென வெறுப்ப சிவமாம் தன்மைப் பெருவாழ்வையுந் தரும். (எ—று)

இத்தகைய திருவடிகளுக்கு இடையூற்றை யோட்டி இந்நூல் முடிவு பெறச் செய்தல் அருமையன்றென்பது கருத்து

---

* மூன்று மதம்:—கன்னமதம், கபோலமதம், கோசமதம். பஞ்சாக்கரத்தின் பேதமாகிய நாலெழுத்தும் பஞ்சாக்கர மென வழங்கப்படுதல் போல, கழுத்துக்கு மேலுள்ள இரண்டு மதம் மூன்று மதமெனப்பட்டது.

# பாயிரம்.

## மங்கல வாழ்த்து.

மங்கலமென்பது ஈண்டுநூலின் மாட்சியாம். அதனை கடவுள் வாழ்த்தில் அடக்கிக் கூறுதலின் மங்கல வாழ்த் தெனப்பட்டது.

## சிவபெருமான் வணக்கம்.

அறுவகைச் சமயத் தோர்க்கு மவ்வவர் பொருளாய் வேறுங்
குறியது வுடைத்தாப் வேதா கமங்களின் குறியி றந்தங்
கறிவினி னருளான் மன்னி யம்மையோ டப்ப னாகிச்
செறிவொழி யாது நின்ற சிவனடி சென்னி வைப்பாம்.

(கொ-டு) அறுவகைச் சமயத்து ஓர்க்கும் எனவும், அங்கு அம்மையோடப்பனாகி எனவுங் கூட்டுக. ஞானக் கண்ணினால் இறைவனுடைய சொரூபத் திருமேனியையும், ஊனக் கண்ணினால் அவ்விறைவனுடைய தடத்தத் திருமேனியையுங் காணப்பெறாது தத்தங் கருத்திற் கேற்றவாறு பொருளின் முதன்மை கொள்கின்றாராதலின் ஓர்க்கு மெனப் பிரிக்கப் பட்டது.

(பொ-ரை) புறப்புறம், புறம், அகப்புறம், அகம் என்னும் சமயம் நான்கனுள் அகச்சமயம் ஒழித்து ஒழிந்த மூக்கூற்று (மூவகை) புறச்சமயங்களிலே தனித்தனி அறுவகைப்பட்ட சமயங்களில் நின்றுகொண்டு அவற்றுள்ளும் பல வேறுவகைப்பட ஆராய்ந்தறிகின்ற அவரவர் கொண்ட முதற் பொருளாய் அவரின் வேறாகிய அகச்சமயத்தாருக்கு லயம், போகம், அதிகார மென்னும் மூன்றவத்தையின் முறையே சத்தியும், உத்தியோகமும், பிரவர்த்தியும் என்னும் தொழில் வேறுபாடு பற்றி சிவன், சதாசிவன், மகேசனென்னும் பெயருடைய அருவம், அருவுருவம், உருவமென்னும் *தடத்தக் குறியே குறியாயுடைத்தாய் சித்தாந்த சைவர்க்கு அத்தடத்தக்குறியே யன்றி வேதாகமங்களின் கருத்துக் கதீதமாய் உயிர்க்குயிராய் உயிர்கட்கெல்லாம் அறிவைப் பிறப்பிக்கும் அம்மையப்பனுமாகி எங்கணும் எக்காலமும் கலந்து வியாபகமாய் நின்ற சிவபெருமான் திருவடியைச் சிரமேற் கொள்வாமென்றவாறு.

"இதனுள், அறுவகைச் சமயத்தோர்க்கு மவ்வவர் பொருளா யெனவே மேற்கூறிப்போந்த பரபக்கத்துப் பொருளும், வேறுங் குறியது வுடைத்தாயெனவே முதற்சூத்திர முதலிய வைந்து சூத்திரத்திற் பெறப்படுந் தடத்தப்பொருளும், வேதாகமங்களின் குறியிறந்தெனவே இரண்டுமன்றி யேனைச் சொரூபலக்கணங் கூறும்

* தடத்தம் - தூலம்.

ஆறாஞ் சூத்திரப்பொருளும், அறிவினிலென்வே ஆன்ம சொரூபங் கூறு மேழாஞ் சூத்திரப்பொருளும், அருளான் மன்னியெனவே ஞானதரிசனங் கூறுமெட்டாஞ் சூத்திரப்பொருளும், அம்மையோ டப்பனாகி யென்வே ஞானமுஞேயமுஞாதிருவுமாகக் காணப்படு மொன்பதாஞ் சூத்திரப்பொருளும், செறிவொழியாது நின்றவெனவே ஏகனாகி நிற்றல் கூறும் பத்தாஞ்சூத்திரப்பொருளும், சிவனடி சென்னிவைப்பாமென்வே அரன்மலரடிக் கீழிருத்தல் கூறும் பதினொராஞ் சூத்திரப்பொருளும், சென்னி வைப்பா மென்னுஞ் சொல்லியல்பான் அணைந்தோர் தன்மை கூறும் பன்னிரண்டாஞ் சூத்திரப் பொருளுங் குறிப்பானறியக் கிடந்தன. இங்ஙனந் தொகுத்துக் காட்டுதல் மங்கலவாழ்த்துக்கு இலக்கணமென உணர்க" என்ப. (க)

---

### சிவஞான போதமாகிய

## மூன்றாற் சிறப்பு.

—(:o:)—

என்னையிப் பவத்திற் சேரா வகையெடுத் தென்சித் தத்தே
தன்னைவைத் தருளி னாலே தாளிணை தலைமேற் சூட்டி
மின்னமர் பொழில்சூழ் வெண்ணெய் மேவிவாழ் மெய்கண் டானூல்
சென்னியிற் கொண்டு சைவத் திறத்தினைத் தெரிக்க லுற்றாம்.

(கொ-டு.) என்னை யிப்பவத்திற் சேர்வகை அருளினாலே எடுத்து என்சித்தத்தே தன்னை வைத்து தாள் இணை தலைமேற் சூட்டும்

(பொ-ரை.) பிறப்பு இறப்பாகிய கடலில் அமிழ்ந்துகின்ற என்னை அதன் கண் அழுந்தாத வண்ணம் கருணைக்கையாலெடுத்து என்னறிவின் கண்ணே தன்னுடைய சொரூபத்தை விளக்குதற் கெழுந்தருளி வந்து திருவடிகளை சிர மேற் சூட்டி தீக்கை செய்தருளிய மின்னலையுடைய மேகந் தங்குதற்கிடமாகிய சோலைகள்சூழ்ந்த திரு வெண்ணெய் நல்லூரென்னும் திருப்பதியில் விருப்பமுற்று வாழ்கின்ற மெய்கண்ட தேவன் மொழி பெயர்த்து உரைத்தருளிச்செய்த சிவஞானபோதநூலை எனை ஆசிரியன்மார் செய்த பிரமாண நூல்கட்கெல்லாம் சிரத்தானமாகக் கொண்டு அருளிற் கூறப்படும் சைவ ஆகமப்பொருட் கூற்றை விளக்குவாம். (எ-று) (உ)

இந்நூலில் சொல்லப்படும் பொருளும், அதிகாரியும், பயனும்.

பண்டைநற் றவத்தாற் றோன்றிப் பரமனைப் பத்தி பண்ணுந்
தொண்டரைத் தானே தூய கதியினிற் றொகுப்பன் மார்க்கர்
கண்டநூ லோதி வீடு காதலிப் பவர்கட் கீசன்
புண்டரி கத்தாள் சேரும் பரிசினைப் புகல லுற்றாம்.

(பொ-ரை.) முற்சென்மத்தில் நன்றாய் சாதனம் முற்றுப்பெற்றவராகிய சாமுசித்தரும், நித்த அநித்த வேறுபாடுணர்ந்து அநித்தத்தை வெறுத்து நித்தத்தைநாடும் வினையராகிய வைணைகரும், காணப்படும் பிரபஞ்சத்தைத் தவிர வேறு பொருளுண்டென்றறியாத மூடராகிய பிராகிருதரும் என மனித வர்க்கத்திற் பிறந்தார் முத்திறப்படுவர். அவருள் முற்செய் தவவிசேடத்தால் சாமுசித்தராய்ப் பிறந்து வீடு சாதலித்து முதல்வனிடத்தே பத்திபண்ணுகின்ற சிவபத்தரை நூல் வழியாலன்றி தானே சிவபக்தியிற் சேர்ப்பன், ஆகலின் அவர்க்கு நூல் வேண்டாம். வைணைகராய்ப் பிறந்தார்க்கு ஞானிகளெல்லாம் பிரமாணமென்றுகைக்கொண்ட நூலை ஓதி அதன் வழியால் வீடடைய வேண்டுவது முறைமையாகலின் அவ்வைணைகராயினார்க்கு சிவபெருமானுடைய செந்தாமரை மலர்போன்ற திருவடி கூடும் முறைமையினை இந்நூலில் வகுத்துக் கூறுகின்றாம். (எ-று)

இதனால் பிராகிருதராகிய மூடருக்கு இந்நூல் பயன்படாதென்பது கருத்து. கூடும் முறைமை சொல்லப்படும் பொருள். வைணைகர் அதிகாரி. திருவடி பயன். (௩)

## அவையடக்கம்.

—:o:—

மறையினா லயனான் மாலான் மனத்தினான் வாக்கான் மற்றுங்
குறைவிலா வளவி னாலுங் கூறொணா தாகி நின்ற
விறைவனார் கமல பாத மின்றியா னியம்பு மாசை
நிறைபினார் குணத்தோர்க் கெல்லா நகையினை நிறுத்துமன்றே.

(பொ-ரை.) வேதங்களினாலும், பிரமாவினாலும், விட்டுணுவினாலும், மனத்தினாலும், வாக்கினாலும் அனுமானப் பிரமாணத்தினாலும் அறிதற்கு அரிதாய் நின்ற முதல்வனது செந்தாமரை மலர்போலும் திருவடியின் இயல்பை இன்று யான் சொல்வதென்றெழுந்த எனது புல்லிய ஆசையானது நிறைந்த குணத்தினையுடையாரெல்லாருக்கும் இவனறிவு இவ்வளவு தானோ என்று எள்ளி நகையாடுதற் கேதுவாகும். (எ-று) (௪)

ஒன்றனும் அறியக்கூடாதோ என்னும் ஆசங்கையை நீக்கல்.

அருளினு லாக மத்தே யறியலா மளவி னுலுந்
தெருளலாஞ் சிவனை ஞானச் செய்தியாற் சிந்தை யுள்ளே
மருளெலா நீங்கக் கண்டு வாழலாம் பிறவி மாயா
விருளெலா மிரிக்க லாகு மடியரோ டிருக்க லாமே.

(கொ-டு.) சிவனை ஆகமத்தே அருளினுலறியலாம், அளவினுலுந் தெருளலாம் சிந்தையுள்ளே ஞானச் செய்தியால் மருளெலாம் நீங்கக் கண்டுவாழலாம், பிறவிமாயா இருளெலாம் இரிக்காலாகும், அடியரோடிருக்கலாமே.

(பொ-ரை.) இறைவனியல்பு மேற்கூறியவாறு ஒன்றனுமறியப்படாவாயினும் அவ்விறைவனை அவனருளிய சிவாகமத்தின் வழி நின்ற அனுபவமுடைய தேசிகரருளிச் செய்யும் உபதேசத்தால் கேட்டுமறியலாம். உபதேசப் பொருளைப் பிரமாணத்தால் சிந்தித்து மறியலாம். சிந்தித்ததனைசிவஞானத்தால் தன்னறிவின் கண்ணே மாசறத்தெளிந்துமறியலாம். அத்தெளிதலினுல் பிறவிமாயாமைக் கேதுவாகிய பாசத்தைக் கெடுக்கலாம். அப்பாசக் கேட்டால் அச்சிவனடியாரோடு கலந்து நிட்டை கூடி சிவானந்த அநுபூதியும் பெற்றிருக்கலாம். (எ-று) (ரு)

மங்கல வாழ்த்து முடிந்தது.
ஆகத்திருவிருத்தம் கூ.

---

# அளவை இலக்கணம்.

—:o:—

அளவை எனினும் பிரமாணமெனினும் ஒக்கும். அஃதாவது பொருள்களை அளக்கும் கருவியாம். பொருள் காணப்படும் உலகப் பொருளும், காணப்படாத பதி, பசு, பாசப்பொருளுமென இருவகைப்படும். அவற்றுள் காணப்படும் பொருளை எண்ணல், நிறுத்தல், *நீட்டல், †முகத்தல், என்னும் நான்கு கருவிகளான் அளக்கலாம். காணப்படாத பதி, பசு, பாசப்பொருளை அக்கருவிகளான் அளக்கமுடியாது. அதனை ஆகமம் அநுமானமென்னுங் கருவியைக்கொண்டு ஆன்மசிற்சத்தியால் அளத்தல் கூடும். ஆகலின் அளவை இலக்கணம் முதற்கட் கூறுகின்றார். இதனுல் ஆன்ம சிற்சத்தியே பிரமாண மென்பதும் கருவிகளும் உபசாரத்தால் பிரமாணமெனப்படு மென்பதும் அறிக.

---

* நீட்டல் - கோலாலளத்தல். † முகத்தல் - படியாலளத்தல்.

## எல்லாப் பிரமாணங்களும் மூன்றிலடங்கும் என்பது.

அளவை காண்டல் கருதலுரை யபாவம் பொருளொப் பாறென்ப
ரளவை மேலு மொழிபுண்மை யைதி கத்தோ டியல்பெனநான்
களவை காண்ப ரவையிற்றின் மேலு மறைவ ரவையெல்லா
மளவை காண்டல் கருதலுரை யென்றிம் மூன்றி னடங்கிடுமே.

(பொ-ரை.) பிரமாணமாவது பிரத்தியட்சம், அநுமானம், ஆகமம், இன்மை, அருத்தாபத்தி, உவமை என ஆறுவகைப்படும் என்பாரும் அவ்வறுவகைப் பிரமாணங்கட்கு மேலும் பாரிசேடம், சம்பவம், உலகவாதம், சகசம் என நான்கு பிரமாணமுள வென்பாரும், அப்பத்துக்கு மேலும் பிரமாணமுளவென்பாரு முளர். அவையெல்லாம் பிரமாணமே யாயினும் பிரத்தியட்சம், அநுமானம், ஆகமம் என்ற இம்மூன்றில் அவையாவும் அடங்குவனவாம். (எ-று)

இன்மைஎன்பது :—என்றும் இன்மை, ஒன்றி லொன்றின்மை, இல்லதனின்மை, உள்ளதனின்மை, அழிவுபாட்டின்மை என ஐவகைப்படும். அவை முறையே முயற்குக் கோடில்லை, கடத்திற் படமில்லை, படத்திற் கடமில்லை, பெரியோர் வாயிற் பொய் இல்லை, யானையைப் *பந்தியிற் கண்டிலம், கடம் உடைந்தால் அஃதில்லை என்பனவாம்.

அருத்தாபத்தி இவ்வூரில் கொடுப்பவன் இவனெனில், கொடாதாருமுண்டென்பது,

உவமை கண்ணன் கருமுகில்போ லென்பது.

பாரிசேடம் மூவரிலிருவர் கள்வர் அல்லரெனில் மற்றவன் கள்வனென்பது,

சம்பவம் நூற்றிலே தொண்ணூறுண்டென்பது.

ஐதீகம் இம்மரத்திற் பேய் உண்டென்பது,

சகஜம் மரப்பூத்த தெனில் மரம்பூத்த தென்பது.

பிரத்தியட்சம், அநுமானம், ஆகமம் மூன்றும் முன்னர் கூறப்படும். (க)

* பந்தி - யானை கட்டுமிடம்.

### பிரத்தியட்சமுதலிய மூன்றின் இலக்கணம்.

மாசறு காட்சி யையந் திரிவின்றி விகற்ப முன்னு
வாசற வறிவதாகு மனுமான மவினு பாவம்
பேசுறு மேதுக்கொண்டு மறைபொருள் பெறுவ தாகுங்
கூசறு முரையிம் மானத் தடங்கிடாப் பொருளைக் காட்டும்.

(கொ-டு.) விகற்பமுன்னு ஐயந்திரிவு இன்றி ஆசு அற அறிவது மாசு அறு காட்சியாகும் மறைபொருள் அவினுபாவம் பேசுறும் ஏதுக்கொண்டு பெறுவது அனுமான மாகும் இம்மானத்து அடங்கிடாப் பொருளைக் காட்டும் கூசு அறும் உரை.

நிருவிகற்ப மென்பது விகற்ப மெனத் தலைக் குறைந்து நின்றது. விகற்ப முன்னு ஐயந்திரிவின்றி என்பதனை அநுமானத்தோடும் உரையோடுங் கூட்டி உரைக்க.

(பொ-ரை-) பிரத்தியட்சம், அநுமானம், ஆகமம் என்னும் அம்மூன்றனுள் பெயர், சாதி முதலிய விகற்பமின்றி நிருவிகற்பவுணர்வை முன்னதாகக் கொண்டு ஐயவுணர்வும் விபரீத வுணர்வுமின்றி விடயங்களை நேரேயறிவதாகிய ஆன்மாவினது ஞானசத்தி குற்றமற்ற காட்சியளவை எனப்படும். அவ்வாறு நேரே யறியப்படுவதன்றி மறைந்துநின்ற பொருளை அதனைவிட்டு நீங்காது எக்காலத்தும் உடனாய் நிகழும் ஏதுவைக்கொண்டு ஐயவிபரீதக் குற்றமின்றி அறிவதாகிய ஆன்மாவினது ஞானசத்தி அநுமான அளவை எனப்படும். இவ்விரண்டு பிரமாணங்களாலும் அறியப்படாத பரலோக, பாதாளலோக முதலிய பொருள்களை அறிவுடையோர் வாக்கியங்கொண்டு ஐயவிபரீதக் குற்றமின்றி அறிவதாகிய ஆன்மாவினது ஞானசத்தி குற்றமற்றஆகம அளவை எனப்படும். (எ-று) (௨)

### நிருவிகற்பம் முதலிய நான்கின் இலக்கணம்.

கண்ட பொருளை யிரட்டுறவே கருதலையந் திரியவே
கொண்ட றிரிவாம் பெயர்சாதி குணமே கன்மம் பொருளெனவைந்
துண்ட விகற்ப வுணர்வினுக்குப் பொருளி னுண்மை மாத்திரத்தின்
விண்ட லில்லா வறிவாகும் விகற்ப மில்லாக் காட்சியே.

(கொ-டு.) விண்டல் இல்லா பொருளின் உண்மை மாத்திரத்தின் அறிவு விகற்பமில்லாக்காட்சியே ஆகும் கண்ட பொருளை இரட்டுறவே கருதல் ஐயம் திரியவேகொண்டல் திரிவாம் பெயர் சாதி குணமே கன்மம் பொருள்என ஐந்து அவிகற்ப உணர்வினுக்கு உண்டு.

(பொ-ரை.) மேற்கூறிப்போந்த நிருவிகற்பம், ஐயம், விபரீதம், நேரே யறிவதாயசவிகற்பமென்னும் காட்சி நான்கனுள் பெயர் முதலியவற்றால் பகுத்தறிதலின்றி இஃதொன்று தோன்றாநின்றதென பொருளுண்மை மாத்திரையே யறியும் ஞானசக்தி நிருவிகற்பக் காட்சி எனப்படும். அங்ஙனம் நிருவிகற்பமாய் அறிந்த பொருளை இஃது யாதோவென ஒன்றிற் றுணிவுபிறவாது ஆராயும் ஞானசக்தி ஐயக்காட்சி எனப்படும். அப்பொருளை வேறுபொருளாக மயங்கி நிச்சயிக்கும் ஞானசக்தி திரிபுக்காட்சி எனப்படும். *பெயர், ஜாதி, குணம், கன்மம், பொருள் என்னும் ஐந்தும் அப்பொருட்கண் உள்ளவாறினிது விளங்க உணரும் ஞானசக்தி சவிகற்பக்காட்சி எனப்படும். (எ-று). (௩)

பிரத்தியட்சம், அநுமானம், ஆகமம் என்னும் மூன்றின் பாகுபாடும் அவற்றானளக்கப்படும் பொருளின் பாகுபாடும்.

காண்டல் வாயின் மனந்தன்வே தனையோ டியோகக் காட்சியென
வீண்டு நான்கா மநுமானந் தனக்கும் பிறர்க்கு மென்றிரண்டா
மாண்ட வுரைதந் திரமந்திரத் தோ டுபதே சச்சொல்லெனமூன்றும்
பூண்ட வளவைக் கெதிர்புலன்றன் னியல்பு பொதுவென் றிரண்டாமே.

(பொ-ரை.) பிரத்தியட்சம், அநுமானம், ஆகமம் என்னும் அம்மூன்றனுள் பிரத்தியட்சப்பிரமாணமாவது இந்திரியப் பிரத்தியட்சம், மானதப்பிரத்தியட்சம், தன் வேதனைப்பிரத்தியட்சம், யோகப்பிரத்தியட்சம் என நான்கு வகைப்படும். அநுமானப்பிரமாணமாவது தானறிதற் பொருட் டனுமானமும், பிறர்க் கறிவித்தற் பொருட் டனுமானமுமென இரண்டு வகைப்படும். மாட்சிமைப்பட்ட ஆகமப் பிரமாணமாவது தந்திரகலை, மந்திரகலை, உபதேசகலை என மூன்றுவகைப்படும். பொருந்திய இப் பிரமாணங்களால் அறியப்படும் பொருள்களது இயல்பு சிறப்பியல்பு, பொதுவியல்பென இரண்டு வகைப்படும். (எ-று) (௪)

சிறப்பியல்பு பொதுவியல்பின் இலக்கணம்.

அன்னிய சாதி யுந்தன் சாதியு மகன்று நிற்ற
றன்னியல் பன்னி யத்தைத் தவிர்ந்துதன் சாதிக் கொத்த
துன்னிய பொதுவி யற்கை சொன்னவிவ் விரண்டி னுள்ளே
மன்னிய பொருள்க ளியாவு மடங்கிடு மான முற்றால்.

---

* பெயர் - மாவென்பது, சாதி - மாவினது தன்மை, குணம்-வண்ணம், வடிவு முதலாயின, கன்மம் - அசைதல் நிற்றல் முதலாயின, பொருள் - மரம்.

(கொ-டு) அன்னியசாதியுந் தன்சாதியுமகன்று நிற்றல் தன்னியல்பு அன்னியத்தைத் தவிர்ந்து தன் சாதிக்கொத்தல் துன்னிய பொது வியற்கை மானம் மன்னிய பொருள்கள் உற்றால் யாவும் சொன்ன இவ்விரண்டினுள்ளே அடங்கிடும்.

(பொ-ரை) சிறப்பியல்பு பொதுவில்பு என்ற இரண்டனுள் ஒரு பொருட்கு வேற்றுச் சாதிப் பொருளினும் தன் சாதிப் பொருளினும் அதாவது தேமா வென்றவிடத்து பலா முதலிய வேற்றுச் சாதியினும் புளிமா முதலிய தன் சாதியினும் செல்லாது தனக்கு மாத்திரையே நிலைபெறுந் தன்மை சிறப்பியல்பு, வேற்றுச் சாதிப் பொருண் மாத்திரையிற் செல்லாது தன் ஜாதிப் பொருட்கெல்லாம் அதாவது மாவென்ற பொழுது பலா முதலியவற்றை நீக்கி தேமா முதலிய தன் ஜாதிக்கெல்லாம் ஒப்பநிலைபெறுந்தன்மை பொதுவியல்பு. பிரத்தியட்சமுதலிய பிரமாணங்களால் பொருந்திப் பொருள்களை அறியுமிடத்து அப்பொருள்களெல்லாம் சிறப்பியல்பு பொதுவியல் பென்னும் இவ்விடத்துக் கூறிய இவ்விரண்டியல்பினுள்ளடங்கும். (எ—று).

இது சூசிகடாக நயம். அதாவது ஊசியும் கடாரமும் செய்யக் கொடுப்பின் வாங்கியவன் கடாரத்திற்கு முன்னும் ஊசிக்குப் பின்னும் பொருள் வாங்கிய பொழுதினும் ஊசி சிறுவேலை யாதலின் முன்னர்க் கொடுப்பது போல் பிரமாணங்களின் இலக்கணம் பொருள்களினிலக்கண மென்னு மிரண்டனுள் பின்னையது சுருங்கியதானதால் முன்னர்க் கூறப்பட்டது. (ரு)

## இந்திரியக்காட்சி மானதக்காட்சிகளினிலக்கணம்.

உயிரினோ டுணர்வு வாயி லொளியுரு வாதி பற்றிச்
செயிருறு விகற்ப மின்றித் தெரிவதிந் திரியக் காட்சி
யயர்விலிந் திரிய ஞான மைம்புலன் சார்ந்து யிர்க்கண்
மயர்வற வந்த ஞான மானதக் காண்ட லாமே.

(கொ-டு) ஐம்புலன் சார்ந்து அயர்விலிந்திரிய ஞானம் மயர்வுஅற உயிர்க்கண்வந்த ஞானம் மானதக்காண்டலாமே. புத்தியைஉயிரென்றுபசரித்தார்.

(பொ-ரை) மேற்கூறிய இந்திரியப் பிரத்தியட்ச முதலிய காட்சி நான்கனுள் ஆன்மாவினின்றும் விடயங்களை நோக்கி ஓடும் அறிவாகிய சிற்சத்தி கண் முதலிய பொறிகளையும் அப்பொறிகட்குத் துணையாய் உடனிற்கும் தேயுமுதலிய பூதங்களையும் அப்பூதங்கட்கு முதற்காரணமாய் அவற்றைவிட்டு நீங்காத உருவ முதலிய தன் மாத்திரைகளையும் ஆதாரமாகக் கொண்டு ஐய விபரீதக்

குற்றங்களும் பொருந்திய பெயர் ஜாதி முதலிய விகற்பமுமின்றி உருவ முத லிய விடயங்களை நிருவிகற்பமாய் அறியும் அறிவு இந்திரியக் காட்சி எனப்படும். அவ்வாறு அறிந்த பின்னர் அக்காட்சியை மீள மறத்தலின்றி பெயர், ஜாதி முதலிய வற்றால் விபரீதமாதலின்றி உள்ளவாறு நிச்சயமாய் புத்தி தத்துவத் தின்கண் வருதலாகிய சவிகற்ப உணர்வுமானதக் காட்சிஎனப்படும்.(எ—று.)

புத்தியையின்றி இந்திரியம் தொழிற்படாவாயினும் புத்தி துணையாக உள்நிற்ப இந்திரியம் முற்பட்டுத் தொழிற்படுதல் பற்றி இந்திரியக் காட்சி எனவும்,மனம் தொழிற் படுங்கால் இந்திரியமும் தொழிற்படினும் மனத்தின் தொழிலாகிய பகுத்தறிவு முற்பட்டும் இந்திரியத்தின் றொழிலாகிய பொருள்மாத்திரையான அறிவு உட்பட்டும் நிற்றலின் மானதக் காட்சி எனவும் வகுத்தவாறு உய்த் துணர்க. (சு)

தன் வேதனைக் காட்சி யோகக் காட்சிகளின் இலக்கணம்.

அருந்தின்பத் துன்ப முள்ளத் தறிவினுக் கராக மாதி
தருந்தன்வே தனையாங் காட்சி சமாதியான் மலங்கள் வாட்டிப்
பொருந்திய தேச கால வியல்பகல் பொருள்க ளெல்லா
மிருந்துணர் கின்ற ஞான மியோகநற் காண்ட லாமே.

(கொ-டு) தன்வேதனைக் காட்சியாம் மலங்கள் சமாதியால் வாட்டிஇருந்து பொருந்திய தேசகால இயல்பு அகல் பொருள்கள் எல்லாம் உணர்கின்ற ஞானம் நல்யோகக் காண்டலாமே.

(பொ-ரை) அம் மானதக் காட்சியால் பகுத்தறியப்பட்ட பொருளில் மனத்தின் குணமாகிய சத்துவகுண விளக்கத்தாலின்பமும், இராசதகுணவிளக்கத் தால்துன்பமும், தமோகுண விளக்கத்தால் மோகமும் புருடனது அறிவிற்கு விளங்கும்படி காலம், நியதி, கலை, வித்தை, அராகம் முதலிய ஐந்து தத்துவங்களானும் சேர்க்கப்படும். அவ்வின்பதுன்பங்களை அறியும் ஞான சக்தி தன் வேதனைக் காட்சி எனப்படும். தானாகிய ஆன்மா சுகதுக்கமாகிய வேதனையில் அழுந்துதலால் தன் வேதனைக்காட்சி எனப்பட்டது. இவ்வாறு சுக துக்க வசப்படாது அங்ஙனம் வசப்படுதற்கேதுவாய் தடைசெய்து நின்ற மல சத்திகளை இயமம், நியமம் முதலிய யோகசமாதியாற் கெடுத்து ஓரிடத்தும் ஒரு காலத்தும் இருந்தபடி யிருந்து பொருந்தப்பட்ட மூவிடத்து முக்காலத்தும் இயல்பாக விரிந்த பொருள்களெல்லாவற்றையும் காண்கின்ற காட்சியாகிய ஞான சத்தி நன்மையாகிய யோகக்காட்சி எனப்படும். (எ—று) (எ)

## இருவகை அநுமானங்களின் இலக்கணம்.

*பக்க மூன்றின் மூன்றேது வுடைய பொருளைப் பார்த்துணர்த்*
*தக்க ஞானந் தன்பொருட்டாம் பிறர்தம் பொருட்டா மனுமானந்*
*தொக்க விவற்றாற் பிறர்தெளியச் சொல்ல லாகு மச்சொல்லு*
*மிக்க வந்நு வயத்தினொடு வெதிரே கச்சொல் லெனவிரண்டாம்.*

(கொ-டு) மூன்று ஏதுஉடைய பொருளை பக்கமூன்றின் பார்த்துணர்த்தக்க ஞானம் தன் பொருட்டாம் தொக்கஇவற்றால் பிறர் தெளியச் சொல்லல் பிறர் தம் பொருட்டனுமானமாம் ஆகும் அச்சொல்லும் மிக்க அன்னுவயத்தினொடு வெதிரேகச் சொல் என இரண்டாம்.

(பொ-ரை) இயல்பு முதலிய மூன்று ஏதுவினுள் ஒரு ஏதுவுடைய பொருளை பக்க முதலிய மூன்றின் வைத்து ஏதுவை விட்டு நீங்காததாகிய அவினாபாவம் பற்றி ஆராய்தற்குரிய ஞான சக்தி தன் பொருட்டநுமானம். பொருந்திய அவ்வேதுக்களானே தானறிந்ததனை பிறர் அறியப் போதிப்பதாகிய ஞான சக்தி பிறர் பொருட்டநுமானம். அங்ஙனம் பிறரறியப் போதித்தலாகிய அநுமானச்சொல் மேலாகிய உடம்பாட்டுச் சொல்லும் எதிர்மறைச் சொல்லுமென இரண்டு வகைப்படும். (எ...று). (அ)

## பக்க மூன்றின் பெயருமிலக்கணமும்.

*மூன்று பக்கம் பக்கநிகர் பக்க நிகரில் பக்கமெனத்*
*தோன்றும் பக்கந் துணிபொருளுக் கிடமா முவமை நிகர்பக்க*
*மான்ற பொருள்சென் றடையாத விடமா நிகரில் பக்கமுத*
*லேன்ற விரண்டும் பொருளுண்மைக் கிடமா மொன்று பொருளின்றாம்.*

(பொ-ரை) பக்கமூன்றாவன:—பக்கமும், சபக்கமும், விபக்கமும் என்பனவாம். சபக்கமென்பது சமானமான பக்கம். விபக்கம் என்பது சமானமில்லாதபக்கம். அவற்றுள் துணியற்பாலதாய பொருளிருக்குமிடம் பக்க மெனப்படும். அப்பொருளுக்கு உவமையாய் எடுத்துக் காட்டப்படுவதான் பொருளிருக்குமிடம் சபக்கமெனப்படும். மாட்சிமையாகிய அப்பொருளில்லாதவிடம் விபக்கமெனப்படும். இம் மூன்றனுள் முதற்கட் பொருந்திய பக்கம், சபக்க மிரண்டும் பொருள் உண்டென அறிதற் கிடமாம். ஏனை விபக்கம் பொருளில்லை யென்றறிதற்கிடமாம். (எ...று).

புகை காணப்படுகின்ற மலையில் அக்கினி உண்டென்றறிதலால் மலை பக்கத்திற்கும். புகையிருக்கும் அடுக்களையில் அக்கினி யிருத்தல் போலவென்றறிதலால் அடுக்களை சபக்கத்திற்கும்,புகையில்லாத தடாகத்தில் அக்கினியில்லை யென்றறிதலால் தடாகம் விபக்கத்திற்கும் உவமானமாகும். (கூ)

## ஏது மூன்றின் பெயருமிலக்கணமும்.

ஏது மூன்று மியல்புகா ரியத்தோ டநுப லத்தியிவை
யோதி னியல்பு மாமரத்தைக் காட்ட லுறுகா ரியம்புகைதன்
ஞதி யாய வனல்காட்ட லாகு மநுப லத்தியது
சீத மின்மை பனியின்மை காட்டல் போலுஞ் செப்பிடினே.

(பொ-ரை)மேல் எடுத்துக்கொண்ட மூன்றேதுவாவன. இயல்பும், காரியமும், அநுபலத்தியுமாம். இவற்றிற்கு இலக்கணங் கூறுமிடத்து மா முதலிய சொல்லின்கண் மர முதலிய பொருளை உணர்த்துமிடத்து அச்சொற்களில் இயல்பால் உளதாகிய ஆற்றல் இயல்பு ஏதுவெனப்படும். புகை முதலிய காரியங்கள் நெருப்பு முதலிய தத்தம் காரணங்களை யுணர்த்துமிடத்து அக்காரியங்கள் பொருந்திய காரிய ஏது எனப்படும். சொல்லுமிடத்து குளிரில்லாமை முதலிய காரியத்தின் இன்மைகள் பனியில்லாமை முதலிய காரணத்தின் இன்மைகளை உணர்த்து மிடத்தும் பனியில்லாமை முதலிய காரணத்தின் இன்மைகள் குளிர்வாராமை முதலிய காரியத்தின் இன்மைகளை உணர்த்து மிடத்தும் அவ்வின்மைகள் அநுபலத்தி ஏது எனப்படும் (எ—று).

முன்னிலைப் பொருளையறிதல், மறைந்த பொருளையறிதல், இல்லாத பொருளை யறிதல் என உணர்ச்சி மூவகை. இவற்றிற்கு முறையே இயல்பு, காரியம், அநுபலத்தி என்னும் மூன்றும் ஏதுவாயின. காரியம் எனினும் உபலத்தி எனினும் ஒக்கும். உள்ளதென்னும் உணர்விற்கு விடயம் உபலத்தி, இல்லதென்னும் உணர்விற்கு விடயம் அநுபலத்தி; இவை முறையே புகைஉள்ளதால் அக்கினி உண்டு, சீதமின்மையால் பனியில்லை என்றறிவதுபோல்வன. மா என்னுஞ் சொல் மரம், குதிரை,வண்டு முதலியவற்றின் பெயராயினும் மாப்பூத்ததென்றவிடத்து மரத்தையும்,மாப்பாய்ந்ததென்றவிடத்துக் குதிரையையும்,மாப்பறந்ததென்றவிடத்து வண்டையும் உணர்த்துதல் சகஜமாதலின் இயல்பெனப்பட்டது. (௧0)

### உடம்பாட்டுச் சொல் எதிர்மறைச் சொற்களின் இலக்கணம்.

புகையா லனலுண் டடுக்களைபோ லென்னப் புகற லந்நுவயம்
வகையா மனலி லாவிடத்துப் புகையின் றருகு மலரினொடு
முகையார் நீரிற் போலென்று மொழிதல் வெதிரே கச்சொலிவை
தொகையா றுறுப்பைந் தொடுங்கூடச் சொல்லுவாருமுளர் துணிந்தே

(பொ-ரை)மேல் எட்டாவது செய்யுளிற்கூறிய உடம்பாடு எதிர்மறைஎன்னும் சொல்லிரண்டனுள் புகையுள்ளவிடத்தே நெருப்புண்டென்பதும் அதற்கு புகையிருக்கும் அடுக்களையை உவமை கூறுவதும் உடன்பாட்டுச் சொல்லாம். விளக்கமாகிய நெருப்பில்லாதவிடத்துப்புகையில்லை என்பதை மலரும் அரும்பும் நிறைந்த தாமரைஓடையை உவமை கூறுஞ் சொல் மறுதலைச் சொல் இவ்விரு வகைச் சொற்களையும் மேற்கோளும், ஏதுவும், உவமானமும், உபநயமும், நிகமனமும்என்னும் தொகை பொருந்திய ஐவகை உறுப்புக்களால் இணங்க வைத்துத் தெளியக் கூறுவாருமுளர். (எ...று).

மேற்கோள்—என்பது மேற்கொள்ளுதல் என்னும் பொருட்டு; அது இம்மலை தீயுடைத்தென்பது. ஏது—புகை யிருத்தலினு லென்பது. உவமை—புகையிருக்கும் அடுக்களை போலென்பது. உபநயம்—நெருப்பில்லாத தாமரைத் தடாகத்தில் புகை யில்லை என்பது. நிகமனம்—ஆகலால் இம்மலை தீயுடைத்தென்பது. இவ்வைந்தனுள் உபநயம் மறுதலைச் சொல். ஏனைய நான்கும் உடன்பாட்டுச் சொல். இவ்வாறு இருசொல்லையும் ஐந்துறுப்புக்களால் இணங்க உரைப்பவர் தார்க்கீகர். (கக).

### அனுமானத்தின் அடங்கும் பிற அளவைகளின் இலக்கணம்.

போது நாற்றத் தாலறிதல் பூர்வக் காட்சி யனுமான
மோது முரையா லறிவினள வுணர்தல் கருத லனுமான
நீதி யான்முற் கன்மபல நிகழ்வ திப்போ திச்செய்தி
யாதி யாக வரும்பயனென் றறித லுரையா லனுமானம்.

(கொ-டு) நீதியான் இச்செய்தி முன்கன்ம பலம் இப்போது நிகழ்வது ஆதியாக வரும்பயன் என்று அறிதல் உரையாலனுமானம்.

(பொ-ரை)முதலாவது செய்யுளில் மேலும் பிரமாணங்கள் உளஎன்பாரு மென்றமையால் அப்பிரமாணங்கள் எவையோ வென்னும் சந்தேகத்தை நீக்குப.

தற்கு இவ்விடத்து சிலபிரமாணங்களின் இலக்கணம் கூறுகின்றார் அவைவருமாறு. வாசனை முதலிய எதுவைக் கொண்டு வாசனையுடைய புட்பத்தை முன் கண்ட வுணர்ச்சியினால் இவ்விடத்து புட்பம் உண்டென்றறிதல் பூர்வக்காட்சியநுமானமெனப்படும். சொல்லப்பட்ட வார்த்தை முதலிய எதுவைக்கொண்டு சொல்லிய அவனறிவின் அளவுமுதலியவற்றை அறிவது கருதலனுமானமெனப்படும். இவ்விரண்டினும் வேறாய் இன்பமும் துன்பமும் முற்பிறவியில் செய்த வினை எனப்படும் முயற்சியே யானால் இப்பொழுதும் அவ்வினைகளைச் செயின் மேலைக்கு ஆகுமென்றாற் போல் நூல்களுள் சொல்லியது கொண்டு சொல்லாத பொருளையும் ஒப்புமை பற்றி யூகித்துத் துணிதல் உரை அனுமானமெனப்படும். (எ—று) (கஉ)

ஆகமப்பிரமாணம் மூன்றின் இலக்கணம்.

வேறு.

அநாதியே யமல னாய வறிவனூ லாக மந்தான்
பினாதிமா றின்றிப் பேண றந்திர மந்தி ரங்கண்
மனாதிக ளடக்கித் தெய்வம் வழிபடும் வாய்மை யாகுந்
தனாதியி றிலாதான் றன்மை யுணர்த்துத லுபதே சந்தான்.

(பொ-ரை) அநாதிமுத்த சித்துருவாகிய முதல்வனருளிச்செய்த நூல்களெனப்படும் வேதாகமங்கள் கருமகாண்டம், உபாசனாகாண்டம், ஞானகாண்டமென மூவகைப்படும். அவற்றுள் கருமகாண்டம்பற்றி பின்னைய உபாசனாகாண்டம் ஞான காண்டங்கட்கு மாறுபாடின்றி அனுட்டித்தலை அறிவது தந்திர கலையாகிய உரையளவை எனப்படும். உபாசனாகாண்டம்பற்றி மன முதலிய கருவிகளை யடக்கித் தெய்வத்தை வழிபடும் உண்மையை அறிவது மந்திர கலையாகிய உரையளவை எனப்படும். ஞானகாண்டம் பற்றி முதலும் முடிவு மில்லாத இறைவன் தன்மைகளைத் தானுணருமாறும் பிறர்க்குணர்த்துமாறும் அறிதல் உபதேச கலையாகிய உரையளவை எனப்படும். (எ—று) (கக.)

அனுமான அளவையை உபயோகிக்குமிடத்து உண்டாம் குற்றங்களின் பாகுபாடு.

வேறு.

ஈண்டு பக்கப் போலிநான் கேதுப் போலி யொருமூன்றாய்
வேண்டு மெழுமூன் றுகும்விளங் குவமைப் போலி யீரொன்பான்
காண்டிற் றோல்வித் தானமிரண் டிருபத் திரண்டாங் கருதிலிவை
பூண்டு மொழிவ ரவையெல்லா மளக்கி லறுபத் தைந்தாகும்.

(பொ-ரை) மேற் கூறிப்போந்த அநுமானத்திற்குரிய பக்கமுதலிய துணைகளுள் துணிபொருட் கிடனாதலாகிய பக்க இலக்கணத்திற் குறைபாடுடைத்தாயும் ஒருபக்க மொத்து பக்கம்போலத்தோன்றுவதாகிய பக்கப் போலி துணியும் பொருட்கு இடனாகாததூஉம், அதற்குஒருபக்கம் இடனாகாததூஉம், துணிந்த பொருட்கு இடனுவதூஉம், அதற்கு ஒருபக்கம் இடனுவதூஉம் என நான்கு வகைப்படும். எதுவிலக்கணத்திற் குறைபாடுடைத்தாயும் ஒருபக்கம் ஒத்து எதுப்போலத் தோன்றுவதாகிய எதுப்போலி துணியப்படாததூஉம், மறுதலைக்கட்படுவதூஉம், ஒருதலைப் படாததூஉமென மூவகைப்பட்டு விரியான் இருபத்தொன்றும். உவமை இலக்கணமின்றியும் உவமைபோலத் தோன்றுவதாகிய உவமைப் போலி உடம்பாடு பற்றியும் எதிர்மறைபற்றியும் இருவகைப்பட்டு விரியால் பதினெட்டு வகைப்படும். இனி தர்க்கவாதத்தின்கண் பேசத்தெரியாமை யாகிய தோல்வித்தானம் மயங்கப் பேசுதலும் சும்மாவிருத்தலுமென இரு வகைப்பட்டு விரியான் இருபத்திரண்டாம். அவை யெல்லாம் அளக்குமிடத்து அறுபத்தைந்தாம். இவைகளை விசாரிக்கில் அநுமான அளவைக்கு எவ்விடத்திலும் குற்றங்களாமென்று விடுப்பர். (எ—று.)

இவ்வறுபத்தைந்தும் குற்றமாதலின் ஆகம அளவைக்கு முன்னாக அநுமானத்தோடுவையாது இறுதிக்கண் வைத்தார். (கச)

அளவை இலக்கணம் முடிந்தது

ஆகத்திருவிருத்தம் உ0.

# பிரமாணவியல்.

பிரமாணத்தால் பதி, பசு, பாசமெனும் முப்பொருள் உண்டென்று சாதித்தலின் முதல் மூன்று சூத்திரமும் பிரமாணவியலென்னும் பெயராயிற்று. பல சூத்திரங்களின் தொகுதி இயல்.

## முதற் சூத்திரம்.

### பதி உண்மை.

பிரத்தியட்சம், அநுமானம் ஆகமமென்னும் பிரமாணம் மூன்றனுள் பிரத்தியட்சம் காணப்படும் பொருளையும், அநுமானம் ஆகமம் இரண்டும் காணப்படாத பொருளையும் அளத்தற்குக் கருவியாகலின் காணப்படாத பதி, பசு, பாசங்கள் உண்டென்பதை ஆகமத்தை ஒப்புக்கொள்ளாதாரும் ஏற்குமாறு அநுமானப் பிரமாணத்தாலறிவிக்கத்தொடங்கி இயல்பு, காரியம், அநுபலத்தி என்னும் மூன்றேதுக்கொண்டு மறைந்து நின்ற பொருளை உணர்த்துவது அநுமானமாதலின் அவற்றுள் குடத்தைக் கண்டவிடத்தே செய்வோனாகிய குபவன் உண்டெனக்கொள்ளும் இயல்புபோலத்தோன்றி நின்றழியும் பிரபஞ்சத்தைக் கண்டமாத்திரத்தே அத்தொழிலைச் செய்யும் கடவுள் உண்டென நாட்டுகின்ற இயல்பு ஏது எனப்படும் அநுமானப் பிரமாணம் முதற் சூத்திரத்தாற் கூறுகின்றார்.

உலகம் தோன்றி நின்றொடுங்குதலின் ஒரு கருத்தாவை உடையதெனச் சூத்திரப் பொருளை தொகுத்துக் கூறுகின்றது.

ஒருவனோ டொருத்தி யொன்றென் றுரைத்திடு முலகமெல்லாம்
வருமுறை வந்து நின்று போவது மாத லாலே
தருபவ னொருவன் வேண்டுந் தான்முத லீறு மாகி
மருவிடு மநாதி முத்த சித்துரு மன்னி நின்றே.

(கொ-டு) ஆதலால் தருபவனொருவன் வேண்டும் ஈறுமாகியே அநாதி முத்த சித்துருமன்னி நின்றே மருவிடும் தான்முதல். ஆகி யென்பது ஆனவனென்பதால் பெயர்.

(பொ-ரை) அவனென்றும், அவளென்றும், அதுவென்றும் தனித்தனி வேறுபாடுடைத்தாய்க் கூறப்படும் பிரபஞ்சக் கூட்டம் உள்ளதாகிய

ணத்தினின்று தோன்றுகின்ற காரியமுறையால் தோன்றி நின்று அழிதலை யுடையது. ஆதலால் அப்பிரபஞ்சத்தைத் தோற்றுவிப்பதற்கு ஒருகர்த்தா வேண்டப்படும். அக்கருத்தா முன்னொடுக்குதற் கேதுவாய் நின்ற சங்கார காரணனேயாகும். அக்காரணன் பிரபஞ்சம் ஒடுங்கிய பின்னும் அநாதிமுத்த சித்துருவாய் நிலைபெற்று நின்று அநாதி பெத்த சித்துருவின் பொருட்டு மீளவும் அப்பிரபஞ்சத்தை முன்போலவே தோற்றுவிப்பன். இவ்வாறு ஒடுக்கியும் தோற்றுவித்தும் செய்வதனால் அச்சங்காரகாரணனே உலகிற்கு முதற்கடவுள். (எ—று.) (க)

அநாதி முத்தசித்துரு வென்பது அநாதியே அதாவது இயல்பாகவே பாசங்களினின்றும் விடுபட்ட ஞானவடிவினன். அநாதி பெத்தசித்துருவென்பது இயல்பாகவே பாசத்தோடு கூடிய ஞானவடிவினன். முன்னையது கடவுள். பின்னையது உயிர்.

இம்முதற் செய்யுள் முதனூற் சிவஞான போதம்போலமூன்று கூற்றையுடையது. அவற்றுள் முதற்கூறு—ஒருவனோடு ஒருத்தி ........................தருபவன் ஒருவன் வேண்டும்.

இரண்டாங்கூறு—ஈறுமாகி அநாதி முத்தசித்துருவாய் மன்னி நின்று மருவுவித்திடும்.

மூன்றாங் கூறு—தானே முதல்.

## முத*லதிகரணம்.

"ஒருவனோடு ஒருத்தி........................தருபவன் ஒருவன் வேண்டும்" என்பது. இம் முதலதிகரணம் வருமுறை ஒரு கூறும், வந்துநின்று போவது ஒருகூறும், தருபவன் ஒருவன் வேண்டும் என்பது ஒரு கூறுமாக முக்கூற்றை யுடையது.

உலகாயதர்மதம் பற்றி வந்துநின்று போவதை வலியுறுத்துகின்றது.

உதிப்பது மீறு முண்டென் றுரைப்பதிங் கென்னை முன்னோர்
மதித்துல கநாதி யாக மன்னிய தென்ப ரென்னி
னிதற்கிபா னநுமா ஞதி யேடனிப்பூ தாதி யெல்லாம்
விதிப்படி தோற்றி மாயக் காணலான் மேதினிக்கே.

---

* அதிகரணம் - கூறு.

(கொ-டு) முன்னோர் மதித்து உலகு அநாதியாக மன்னியது என்பர் உதிப்பதும் ஈறும் உண்டு என்றுரைப்பது என்னை என்னின் இங்கு விதிப்படி இம்மேதினிக்கே பூதாதியெல்லாம் தோற்றி மாயக்காணலான் யான் இதற்கு அனுமானாதி எடேன். முன்னோரென்பது தாழ்ந்தாரின் முதன்மைபற்றியும் முன்னிலையான உலகமே பொருளென உணர்தல் பற்றியும் உலகாயதரைக் குறித்தது.

(பொ-ரை) உலகாயத நூலுணர்ந்தோர் பிரத்தியட்சப் பிரமாணத்திற்கு எய்தாதன பிரமாணமாகாவென எண்ணி உலகம் நித்தமாக நிலைபெறுதலே யன்றித் தோற்றமும் நாசமும் உண்டெனக் கூறுவது பொருந்தாதென்பர். இவ்விடத்து அவர் கூறிய நிலைத்தொழில் போலவே இவ்வுலகின் கண்ணே பஞ்ச பூதமாகிய முதற் காரணத்தின் கண் தோன்றிய எல்லாவற்றிற்கும் தோற்ற நாசங்களாகிய ஏனை இரண்டு தொழிலும் உடனிகழ்ச்சியாய்க் காண்டல் கூடும். அதாவது ஒரு பொருளும் என்றும் நிலைத்திருப்பதில்லை- ஒரு பொருள் தோன்றவும், மற்றொரு பொருள் நிற்கவும், பிறிதொரு பொருள் அழியவும் காண்டல் பிரத்தியட்சமாம். ஆதலின் இவ்வுலகம் முத்தொழிற்படுமென்பதனை சாதித்தற்கு அவர் கொண்ட காட்சி யளவை ஒன்றே அமையுமாதலின் அநுமானம் முதலிய வேறு பிரமாணங்கள் எடுத்துக் காட்டேன். (எ—று.)(உ)

## தருபவன் ஒருவன் வேண்டுமேன்பதைக் கூறுகின்றது.

இயல்புகாண் டோற்றி மாய்கை யென்றிடி னியல்பி னுக்குச்
செயலதின் றியல்பு செய்தி செய்தியே லியல்ப தின்று
மியல்பதாம் பூதந் தானே யியற்றிடுஞ் செய்தி யென்னிற்
செயல்செய்வா னொருவன் வேண்டுஞ் செயற்படு மசேத னத்தால்.

(கொ-டு) தோற்றிமாய்கை இயல்புகாண் என்றிடின் செயலது இயல்பினுக்கின்று செய்தி இயல்பேல் செய்தி இயல்பதின்றும். பூதந்தானே இயல்பதாம் செய்தி இயற்றிடும் என்னின் செயற்படும் அசேதனத்தால் செயல் செய்வா னொருவன் வேண்டும்.

(பொ-ரை) உலகம் தோன்றி அழியினும் அத்தோற்றக் கேடுகள் உலகிற்கியல்பாகலின் அத்தொழில் கொண்டு ஒரு கருத்தா வேண்டப்படுவதன்று என்பர் உலோகாயதரில் ஒருசாரார். தோன்றலுங் கெடுதலும் வேற்றுமையாதலின் இயல்பிற்கு வேற்றுமையாதல் கூடாது, அவ்வாறு வேற்றுமையாதலை இயல்பு என்று சொல்லில் அவ்வாறு சொல்லுவார்க்கு வேற்றுமையின் வேறாய் இயல்பென்பது ஒன்றில்லை என ஒப்புக்கொள்ளவரும். வரவே தோற்றிமாய்கை இயல்பென்று முன் சொன்னது விட்டுப்போய் சொல்லித்

ஞானமாய் முடியும். இனி இயல்பும் வேற்றுமையும் வேறெனவே கொண்டு பூத நான்கும் இயல்பாய் உள்ளனவாம். அவை தோற்றிமாய்தலாகிய வேற்று மையைச் செய்யும் என்று சொல்லில் நன்று சொன்னாய்! அப்பூதங்கள் அவ் வாறு தோன்றியழிதலாகிய தொழிலைப் பொருந்தி நிற்கின்ற காரியப் பொரு ளாகலின் அக்காரியப் பொருளாகிய செயப்படு பொருட்குத் தோன்றியழித லென்னும் தொழிலைத் தானே செய்தல் கூடாமையின் அத்தொழிலைச் செய்வ தற்கு அப்பூதத்தின் வேறாய் ஒரு கருத்தா வேண்டப்படும். (எ—று)

இதனால் செயப்படு பொருளும் வினை முதலும் ஒன்றுமாறில்லை யென்பதறிக. தன்னைக் குத்தினான் என்றவிடத்துக் குத்தியவினை முதல் கையும் குத்தப்பட்ட செயப்படுபொருள் பிறிதோருறுப்பும் எனவும், தன்னைத் தானறிந்தானென்றவிடத்து அறிந்தது தன்னறி வும், அறியப்பட்டது தன் வடிவும் எனவுங் கண்டு கொள்க. (ங)

இதுவுமது.

நிலம்புன லனல்கால் காண நிறுத்திடு மழிக்கு மாக்கும்
பலந்தரு மொருவ னிங்குப் பண்ணிட வேண்டா வென்னி
னிலங்கிய தோற்ற நிற்ற லீறிவை யிசைத லாலே
நலங்கிளர் தோற்ற நாசந் தனக்கிலா நாதன் வேண்டும்.

(கொ-டு) கால் காண நிறுத்திடும் அனல் அழிக்கும் புனல் ஆக்கும் நிலம் பலந்தரும் ஒருவன் இங்குப் பண்ணிடவேண்டா என்னின் இலங்கிய இவை தோற்றம் நிற்றல் ஈறு இசைதலாலே தோற்றம் (நிற்றல்) நாசம் தனக்கு இலா நலம் கிளர் நாதன் வேண்டும்.

(பொ-ரை) நான்கு பூதங்களுள் வாயு, ஏனைய மூன்று பூதங்களையும் நிலைக்கச் செய்து தான் அவற்றது சமூகத்தில் நிலைபெறும். அக்கினி ஏனைய மூன்று பூதங்களை அழித்துத் தான் அவற்றது சமூகத்தில் அழியும், அப்பு ஏனைய பூதங்களைத் தோற்றுவித்துத்தான் அவற்றது சமூகத்தில் தோன்றும், பூமி ஏனைய பூதங்களினின்று பயனைப் பயப்பித்துத் தான் அவற்றது சமூகத் தில் பயன் படும். இவ்வாறு செயப்படு பொருளும் கருத்தாவும் பூதங்களுக்குள் ளே அமைந்து கிடக்கின்றமையின் வேறு இறைவன் வேண்டாமென்று சொல் லில் இப்பூதங்கள் ஒவ்வொன்றும் உன்கூற்றானே தனித்தனியே முத்தொழிற் படுதலின் அத்தொழிலைச் செய்விக்க முத்தொழிற்படாத இறைவன் வேறு வேண்டப்படும். (எ—று)

இச்செய்யுளால் கூறப்பட்டது என்னையோ எனின் தண்ணீரில்லா தபோது ஒன்றுந் தோற்றாதலின் அது ஏனையவற்றைத் தோற்று

விக்குமெனவும், காற்றில்லாத போது ஒன்றும் நிலையாதாதலின் அது நிலைப்படுத்துமெனவும், அக்கினி எவற்றையும் அழிக்குமாதலின் அது சங்கரிக்குமெனவும், இவ்வாறு முத்தொழிலையும் மூன்று பூதங்களே செய்யுமெனவும், கன்மமின்றிப் பிருதுவியே பயன்தருமெனவுங்கூறியதை, தண்ணீர் ஏனையவற்றைத் தோற்றுவிக்குமாகத் தால்தான் தோன்றி வாயுவினால் நிலைத்து அக்கினியால் அழிக்கப்படுதல்போல ஒவ்வொன்றும் முத்தொழிற் படுமென மறுத்தவாறும்.

வருமுறை என்பதைக் கூறுகின்றது.

சார்பினிற் றோன்று மெல்லாந் தருபவ னில்லையென்னிற்
றேரினில் லதற்கோ தோற்ற முள்ளதற் கோநீ செப்பா
யோரினில் லதுவுந் தோன்றா துள்ளதே லுதிக்க வேண்டா
சோர்விலா திரண்டு மின்றி நிற்பது தோன்று மன்றே.

(கொ-டு) எல்லாம் சார்பினிற்றோன்றும் தேரின் தருபவன் இல்லை என்னின் தோற்றம் இல்லதற்கோ உள்ளதற்கோ நீ செப்பாய் ஓரின் இல்லதுவுந் தோன்றாது உள்ளது உதிக்கவேண்டாவேல் இரண்டுமின்றிச் சோர்வு இலாது நிற்பது தோன்றும் அன்றே.

(பொ-ரை) கணந்தோறும் மாறுதலையுடைய எல்லாப் பொருள்களுள்ளும் முற்கணத்திற் றோன்றிய பொருள் பிற்கணத்திற் றோன்றும் பொருட்குச் சார்பாய் மேம்படுதலின் வித்தின் கேட்டின் முளைபோல எல்லாப்பொருளும் அவ்வச்சார்பிலே தோன்று மெனச் சவுத்திராந்திகர் முதலியோர் மதம்பற்றிக் கூற அமையுமாதலில் ஆராயுமிடத்து இப்பிரபஞ்சத்திற்குத்தோற்றநாசமில்லாத மேம்பாடுடைய ஒரு கருத்தா வேண்டுமென்றல் கூடாதெனின் அப்படியன்று; ஒன்றன் சார்பில் ஒன்று தோன்று மென்று நீ கூறியது இல் பொருட்கோ உள்பொருட்கோ கூறுவாயாக: உணருமிடத்து இல்பொருட்கென்பையாகின் அது முயற்கோடு போல ஒரு காலத்தும் தோன்றுமாறில்லை, உள்பொருட்கெனின் உதிக்கவேண்டுவதில்லை. என மறுத்தவிடத்து மாத்துமிகர் மதம்பற்றி இல்லதுமன்றி உள்ளதுமன்றி அநிருவசனமாகிய சூனியமாய் மெலிவின்றி நிற்கும் பொருள் தோன்றுமெனக் கொள்வேன். (எ-று) (௫)

இதுவுமது.

உள்ளது மிலது மின்றி நின்றதொன் றுளதே லுண்டா
மில்லதே லில்லை யாகுந் தோற்றமு மிசையா தாகு
முள்ளகா ரணத்தி லுண்டாங் காரிய முதிக்கு மண்ணி
லில்லதாம் படங்கடாதி யெழிறரு மியற்றுவாறல்.

(கொ-டு) இயற்றுவானுல் மண்ணில் படம் இல்லதாம் கடாதி எழில் தரும் உள்ள காரணத்தில் உண்டாங் காரியம் உதிக்கும்.

(பொ-ரை) அவ்வாறு உள்ளதுமின்றி இல்லது மன்றி அநிர் வசனமாய்க் கூறப்படும் பொருள் தான் உண்டோ இல்லையோ என வினவினோர்க்கு உண்டென்று கூறில் உள்பொருளேயாம், இல்லை என்று கூறில் இல்பொருளேயாம். இவ்வாறுகவே முன்னர் அநிர்வசன மென்றது போலியாய் ஒழியும். அதுவன்றியும் அநிர்வசனப் பொருள் சூனியமாதலின் அதற்குத் தோற்றமும் கூடாது. இவ்வாறு சவுத்திராந்திகர் முதலாயினோர் கூறும் இல்பொருட்கும், மாத்திமிகர் முதலியோர் கூறும் அநிர்வசனப் பொருட்கும் தோற்றம் கூடாமையால் பாரிசேட அளவையால் திகிரி முதலிய துணைக்காரணங்களை மண்ணாகிய முதற் காரணத்தின்கண் செலுத்தும் குயவனுல் அம் மண்ணினின்றும் வஸ்திரம் முதலிய காரியம் தோன்ருது, குடம், பானை, கலசம் முதலிய காரியமே வெளிப்பட்டுத்தோன்றுவதுபோல அவ்வெதிர்மறை முகத்தானும் உடன்பாட்டு முகத்தானும் உள்பொருளாகிய காரணத்தினின்றும் உள்பொருளாகிய காரியம் ஒரு கருத்தாவால் வெளிப்பட்டுத் தோன்று மென்று சித்தாந்தி கூறியது (எ-று) (சு)

இதுவுமது.

ஒருபொரு ளொருவ னின்றி யுளதில தாகு மென்னிற்
றரு பொரு ளுண்டே லின்ருந் தன்மையின் றின்றே லுண்டாய்
வருதலின் றிலது கார்ய முதலுள தாகு மென்னிற்
கருதுகா ரியமு முண்டாய்த் தோற்றமுங் கருத்தா வாலாம்.

(கொ-டு) ஒரு பொருள் உளது இலது ஒருவன் இன்றி ஆகும் என்னின் தருபொருள் உண்டேல் இன்ருந்தன்மைஇன்று இன்றேல் உண்டாய்வருதல் இன்று முதல் உளதாகும் காரியம் இலது என்னின் கருது காரியமும் உண்டாய் தோற்றமுங் கருத்தாவால் ஆம்.

(பொ-ரை) இல் பொருட்கும் அநிர்வசனப்பொருட்கும் தோற்றம் உண்டென்றல் இயலாமையின் சமணர்மதம்பற்றிக் காரியப்படுவதோர் பொருள் உண்டுமாய் இல்லையுமாய் நிற்கும் ஈரியல்புடையதாம், ஆகலின் இதற்கொரு கருத்தா வேண்டப்படுவதின்றியே உண்டாமெனக் கொள்வேமெனின் பொருந்திய பொருள் உள்ளதாயின் இல்லையாந் தன்மையின்றி உள்ளதேயாம், இல்லையாயின் உண்டாய்வருதலின்மையின் இல்லதேயாம்; ஆதலின் உண்டுமாம், இல்லையுமாமென மாறுபட்ட இரண்டு தன்மை ஒரு பொருட்கிசைதல் கூடாது; என மறுக்க சித்தாந்தக் கொள்கைப்படி காரண ரூபமாய் உண்டு காரிய ரூபமாயில்லை எனப்படுவதே உண்டும் இல்லை என்பதற்குப் பொருளென்றுகூறின் நன்று சொன்னாய் காரண காரியங்கட்கு தம்முள் வேற்றுமையின்மையால் காரணம் உள்

பொருளாயின் கருதுகின்ற காரியமும் அதன்கட் சூக்கும ரூபமாய் உள்ளதே யாகும் அவ்வாறு சூக்கும ரூபமாயுள்ள காரியம் பின்னர்த் தூல ரூபமாய் விளங்கித் தோன்றுதல் ஒரு கருத்தாவினுலா மென்பதுதானே விளங்கும். (எ-று.)

## மீமாம்சகர் மதம்பற்றித்தருபவன் ஒருவன் வேண்டுமென்பதைக் கூறுகின்றது.

காயத்தி னழிவு தோற்றங் கண்டன முலகிற் காணு
நீயித்தை யுரைத்த வாறிங் கென்னெனி னிகழ்த்து முண்மை
மாயத்த வுலகம் பூநீர் தீவளி வான மாதி
யாயித்தா னொன்றி னொன்று தோன்றி நின் றழித லாலே.

(கொ-டு) தோற்றம் அழிவுகாயத்திற் கண்டனம் உலகிற் காணும் இங்கு நீ இத்தை உரைத்தவாறு என்னெனின் மாயத்த உலகம் பூநீர் தீ வளி வானம் ஆதி ஆயஇத்தான் உண்மை ஒன்று ஒன்றின் தோன்றிநின்றழிதல் ஆலே நிகழ்த்தும்

ஒன்றின் - ஒன்றுபோல. - ஆலே-அசை-

(பொ-ரை) உடலும் உலகும் என்னும் இருகூற்றுப் பிரபஞ்சத்துள் ஆண், பெண், அலி என மேற்கூறிய அவயவப் பகுப்பு உடலுக்கேயன்றி ஏனை உலகத்திற் கின்மையால் தோற்றமும் அழிவும் உடலிற் கண்டனம் அன்றி உலகத்திற் காணவில்லை என்பது நிச்சயமாயிருக்க இவ்விடத்து இரண்டற்கும் ஒப்பத்தோற்றக் கேடுகள் கூறுதல் அமையாதென்று சொல்லில் இவ்வாறு மயக்கத்தைச் செய்வதாகிய உலகமும் நிரவயவம் (அவயவமின்மை) இன்றி மண், நீர், தீ, காற்று, ஆகாயம் என்றது முதலான அவயவப் பகுப்புடைத்தாகிய இதனுல் அப்பகுப்புண்மையே இருகூற்றுப் பிரஞ்சத்தி லொன்ருகிய உலகமும் ஏனைக் காயம்போலத் தோன்றியழிதலையுணர்த்தும் (எ-று) (அ)

## இதுவுமது.

ஓரிட மழியப் பின்னு மோரிட நிற்கு மொக்கப்
பாரிட மழிவ தின்ரு மென்றிடிற் பயில்வித் தெல்லாங்
காரிட மதனிற் காட்டு மங்குரங் கழியும் வேனிற்
சீருடைத் துலகு காலஞ் சேர்ந்திடப் பெயர்ந்து செல்லும்.

(கொ-டு) பாரிடம் ஒக்க அழிவதின்ரும் ஓரிடம் அழியப் பின்னும் ஓரிடம் நிற்குமென்றிடின் பயில் வித்து எல்லாம் கார்இடமதனில் அங்குரங் காட்டும் வேனிற்கழியும் சீர்உடைத்து உலகுகாலம் சேர்ந்திடப் பெயர்ந்து செல்லும்.

(பொ-ரை) நிலம், மலை, கடல்முதலிய வடிவிற்றாகிய உலகமும் காயம் போல அவயவப்பகுப்புடைமையால் அதுபோலத் தோன்றிநின்றழிதல் பெறப் படுமென்ற தொக்கும். அங்ஙனமாயினும் பார்த்தறியப்படும் உலகமெல்லாம் ஒருசேர அழியுமென்று கூறின், உலகம் அனாதி என்னும் சுருதியோடு முரணுதலானும் அழிந்தது மீளத்தோன்றுதற்கோர் சம்பந்த மின்றாய் முடியு மாகலானும் அவ்வாறன்றி உலகத்தில் ஒருபக்கம் அழியினும் பிறிதொரு பக்கம் நிற்கும் என்றலே பொருத்தமுடைய தென்னின்: அப்படியல்ல, ஒரு சாதி பலபொருளாகிப் பழகிவருகின்ற வித்து முதலிய சடங்கள் கார்காலமாகிய ஓர் கால விசேடத்தில் ஒரு சேரமுளை தோன்றும், வேனிற்காலமாகிய ஓர் காலவிசேடத்தில் ஒரு சேர அழியும், ஆகலின், அவ்வாறு சடத்தன்மையுடைய உலகமும் அவ்வக்காலம் வந்தவிடத்து முழுவதும் ஒரு சேரத் தோன்றி ஒரு சேர அழியும். (எ...று) (கூ)

இதுவுமது.

காலமே கடவுளாகக் கண்டனந் தொழிலுக் கென்னிற்
காலமோ வறிவின் றாகு மாயினுங் காரி யங்கள்
காலமே தரவே காண்டுங் காரணன் விதியி னுக்குக்
காலமுங் கடவு ளேவ லாற்றுணைக் கார ணங்காண்.

(கொ-டு) தொழிலுக்குக் காலமே கடவுளாகக் கண்டனம் என்னெ னின் ஆயினும் காலமோ அறிவு இன்றாகும் காரியங்கள் காலமே தரவே காண்டும் கடவுள் ஏவலால் காரணன் விதியினுக்கு காலமும் துணைக் காரணங் காண்.

(பொ-ரை) மேற்கூறியவாறு காலம்வந்தவிடத்து தோன்றி யழிதலால் அத்தோற்றக் கேடுகட்குக் காலமே கருத்தாவாய் முடியுமென்று கூறுவர். அஃ தொக்குமாயினும் அக்காலம் அறிவில்லாத சடமாதலால் கருத்தாவாகாது. ஆனால் தோற்றக் கேடுகளைக்காலமே தரல் காண்டலின் அறிவுடைய கருத்தாவி னது ஏவலால் அக்கருத்தா செய்யும் தோற்றக்கேடுகட்குக் காலமும் துணைக் காரணமாமென் றறிவாயாக. (எ...று) (க0)

அம் மீமாம்சகர் மதம்பற்றி வருமுறை என்பதைக் கூறுகின்றது.

அழிந்தபி னணுக்க டாமே யகிலமாய் வந்து நின்று
கழிந்திடுங் கன்மத் தென்னிற் கன்மமு மணுவுங் கூட
மொழிந்திடுஞ் சடமே யாகி முடிதலான் முடியா செய்தி
யொழிந்திடு மணுரு பங்க ளுலகெலா மொடுங்கு மன்றே.

(கொ-டு) அழிந்தபின் அணுக்கள்தாமே கன்மத்து அகிலமாய் வந்து நின்று கழிந்திடும் என்னின் மொழிந்திடுங் கன்மமும் அணுவும் சடமாகியே முடிதலால் செய்தி முடியா உலகு எலாம் ஒடுங்கும் அன்றே அணுரூபங்கள் கூட ஒழிந்திடும்.

(பொ-ரை) உலகம் அழிந்தபின்னர் அணுக்களாய் ஒடுங்கி மீள அப்பரமாணுக்கள் தாமே உயிரின் கன்மம் எதுவாகப்பிரபஞ்சமாய்த்தோன்றிநின்றழியும்.கன்மமும் காலமும்போல் இறைவன் இச்சையும் ஒரு துணைக் காரணமாம், அத்துணையேயன்றிப் பிறிதில்லை எனின் அவ்வாறன்று சொல்லப்பட்ட கன்மமும் அணுவும் சடமாகவே முடிதலின் அவை தம் முட்கூடித் தொழிற்படுதல் அதாவது பிரபஞ்சமாகத் தோன்றியழிதல் அறிவுடைய முதல்வன் தொழிலையின்றிக் கூடாது. அஃதன்றியும் உலக முழுதும் ஒடுங்கும்பொழுது அணுவும் கூடவே ஒடுங்கும்,ஆகலான் அவ்வணு பின் உலகமாய் வந்துநின்று அழியுமென்றல் எவ்வாறு பொருந்தும். (எ...று) (கக)

இதுவுமது.

காரண வணுக்கள் கெட்டாற் காரிய வுலகின் றென்னிற்
காரண மாயை யாகக் காரியங் காண லாகுங்
காரண மாயை யென்னை காண்பதிங் கணுவே யென்னிற்
காரண மாயை யேகாண் காரிய மணுவிற் கண்டால்.

(கொ-டு) காரண அணுக்கள் கெட்டால் காரிய உலகு இன்று என்னின் மாயை காரணமாகக் காரியம் காணலாகும் அணுவே இங்குக் காண்பது மாயை காரணம் என்னை என்னின் அணுவிற் காரியங் கண்டால் மாயையே காரணங்காண்.

கண்டா லென்பது காண்டலா லென்னும் பொருட்டு.

(பொ-ரை) அணுக்களு மொடுங்குமாயின் காரணமாகிய அணுக்களழிந்தால் காரியமாகிய பிரபஞ்சம் இல்லையாகுமே எனின் பிரபஞ்சத்திற்கு முதற்காரணம் சத்திவடிவக் கூட்டமாய் நிலைபெற்றிருக்கும் மாயையேயாம். ஆதலால் அணுக்கள் அழிந்தமைபற்றி உலகம் மீளத் தோன்றுதற் கிழுக்கில்லை ஆனால் அணுவே இவ்விடத்து முதற்காரணமாய்க் காணப்படுவதின்றி மாயை முதற்காரணமென்று கூறுவது பெறப்படாதெனின் அணுக்களிடத்துத் தோன்றியழிதற் றன்மை காணப்படுதலால் அவ்வணுக்கள் உலகிற்கு முதற்காரணமாதல் செல்லாதாதலின் தோன்றியழித லில்லாத மாயையே உலகிற்கு முதற்காரணமா மென உணர்க.(எ...று) (கஉ)

இதுவுமது.

காரிய மென்ப தென்னை காரண வணுவை யென்னிற்
காரிய மவய வத்தாற் கண்டனங் கடாதி போலக்
காரிய வுருவ மெல்லா மழிதருங் கார ணத்தாற்
காரிய வுறுப்பின் மாயை தருமெனக் கருதிடாயே.

(கொ-டு) காரண அணுவை காரியம் என்பது என்னைஎன்னின் காரியங் கடாதிபோல அவயவத்தாற் கண்டனம்.

(பொ-ரை) காரணமாகிய அணுவைக்காரியமென்றல் எவ்வாறு பொருந்துமெனின் மண்ணுகிய காரணத்தினின்று தோன்றும் காரியமாகிய குடமுதலியனபோலப்பலவேறு வகைத்தாகிய அவயவமுடைமையால் அணுக்கள் காரியமாகும். அங்ஙனம் பலவேறு வகைத்தாகிய காரியமெல்லாம் அழிதற்றன்மையவாகலின் பலவேறு வகைத்தாய் அவயவத் தன்மையில்லாத நிலைபெற்ற மாயையே முதற்காரணமென அறிவாயாக. (எ...று)

இதனுல் காரணம் ஒன்ருய்த் தோன்றி அழிதலின்றிநிலை பெற்றிருக்குமென்றும், காரியம் பலவாய்த் தோன்றி அழிதலை உடையதாயிருக்குமென்றுமறிக. ஆயின், பலவாகிய ஆன்மா காரியமெனப் பட்டுத் தோன்றி யழியுமென்னலாகுமே யெனின்;அன்று;பலவாயும் சடமாயும் இருப்பது தோன்றி அழியும். அதுவே காரியமெனப் படும். பலவாயும் சித்தாயுமிருப்பது தோன்றி அழியமாட்டாது. ஆதலின் அது காரிய காரணங்கட்குட் பட்டதன்றென்க. (கரு)

இதுவுமது

தோற்றமு நிலையு மீறு மாயையின் றொழில தன்றே
சாற்றிடு முலகம் வித்துச் சாகாதி யணுக்க ளாக
வேற்றதே லீண்டு நிற்கு மில்லதே லியைவ தின்று
மாற்றநீ மறந்தா யித்தான் மாயையை மதித்தி டாயே.

(பொ-ரை) அன்றியும் தோற்றம், நிலை, இறுதி என்னும் மூத்தொழிலும் மாயைதரு மென்பதற்கு மாயையே பிரகிருதி என்று அறிகவென்று கூறுகின்ற வேதமொழியும், வித்தின்கண்ணே சாகை முதலியன சூக்கும ரூபமாய் அடங்கிநின்றனவாயின் அவை தூலரூபமாக வெளிப்படுமென்று கூறும் உடம்பாட்டானும் அவ்வாறு சூக்குமரூபமாய் அடங்கிநிற்ற லில்லையாயின்

அவை தூலரூபமாக வெளிப்படுதலு மின்று மென்று கூறும் எதிர்மறையானும் வழங்குகின்ற உலகமொழியும் சான்றாகலின் அதனை நீ மறந்தாய் அவயவமாகிய உறுப்பில்லாமை மாத்திரையே யன்றி வேதமொழி, உலகமொழி சான்றாதலாகிய இதனானும் அணுகாரண வாதத்தை விட்டு மாயையே முதற் காரணமென்றறிவாயாக. (எ...று) (கச)

பிரகிருதி என்பதன் பொருள் இயல்பாயிருப்பது.

இதுவுமது.

மாயையி னுள்ள வஞ்சம் வருவது போவ தாகு
நீ யதிங் கில்லை யென்னி னிகழ்ந்திடு முயலிற் கோடு
போயுகு மிலைக ளெல்லா மரங்களிற் புக்குப் போதி
னாயிடு மதுவு மென்னிற் காரணங் கிடக்க வாமே.

(கொ-டு) நீ அது இங்கு இல்லை என்னின் முயலிற் சோடு நிகழ்ந்திடும் உள்ள வஞ்சம் மாயையின் போவது வருவதாகும் மரங்களின் உகும் இலைகளெல்லாம் போய்ப்புக்கு போதின் ஆயிடும் என்னின் காரணங்கிடக்க அதுவும் ஆமே.

(பொ-ரை) அதுவன்றியும் உள்ளதாகிய காரணத்தில் உள்ளதாகிய காரியம் தோன்றுமென்று கொள்ளாது இல்லது உற்பத்தியாமென்பை யாயின் முயலின் கண்ணும் கோடுளதாதல் வேண்டும். அவ்வாறாயின் உள்ள பிரபஞ்சமே மாயையில் ஒடுங்கி மீளத்தோன்றுமென்னும் சித்தாந்தாந்தக் கருத்துடையார்க்கும் அவ்வாறே மரத்தினின்றும் உதிர்ந்த இலைகளெல்லாம் தானே மரத்தில் ஒடுங்கி அதற்குரிய காலத்தில் மீளத்தோன்றுதல் வேண்டுமென்று அவர் கூற அஃதொக்கும். அங்ஙனம் உதிர்ந்த இலைகளெல்லாம் சத்தி ரூப காரணமாய் நிலை பெற்றிருக்கு மாதலின் அச்சத்தி மீளத் தோன்றுதற்குரிய கன்மம், கால முதலிய பிறகாரணங்களெல்லாம் அதனோடு ஒருங்கு கூடிய விடத்து அவ்வாறேதோன்றும் கூடாதவிடத்துத்தோன்றாது ஆதலின் அதுபற்றிஎன்ன ஆசங்கை? (எ...று)

மரத்தில் நின்று உதிர்ந்த இலை முதலியன சத்தி ரூபமாய் மரத்தில் ஒடுங்குதல் எவ்வாறெனின் அவ்விலை முதலியன தம் தன்மைகெட்டு உரமாக மரத்தின் கண்ணடங்கி மீளத்தோன்று மென்க. அவ்வாறொடுங்குதற்கு முன் உதிர்ந்த இலை முதலியன தோன்றுதற்கு மரத்தின்கண் அவ்வாறுபலசக்திகள்உளவென்பதும், உதிர்ந்த இலை முதலியனவும் மரத்தின் கண்ணன்றி ஏனைய பயிருக்கு உரமாக உபகாரப்படினும் அப்பயிருக்குரிய இலை முதலியனவாய்த் தோன்றுமாதலின் அதுபற்றி இழுக்கில்லை என்பதுணர்க. ()

இதுவுமது

கருதுகா ரணமுண் டாகக் காரிய முள்ள தாகி
வருதலா லநாதி வைய மற்றொரு கடவு ளித்தைத்
தருதலா லாதி யாகச் சாற்றலு மாகு மாயைக்
கொருவனு ரென்னிங் கென்னி னுள்ளவா றுரைப்பக் கேணீ.

(பொ—ரை) மேற்கூறியவாறு சற்காரியவாதம் அதாவது உள்ளது காரியப்படுமென்று சொல்லுதலுடையார்க்கு உலகம் அழிபொருளென்று கூறுதல் பொருந்தாதாய் முடியுமெனின் அவ்வாறன்று கருதுகின்ற காரணம் உள் பொருளாக அதன்கட்டோன்றும் காரியமும் உள் பொருளே என்பது மேற் கூறியவாற்றான் இனிது விளங்குதலின் காரியமாகிய பிரபஞ்சமும் நித்தப் பொருளேயாம். இப்பிரபஞ்சம் ஒரு கருத்தாவால் ஒரு காலத்து விளங்குதலும் ஒரு காலத்து மறைதலுமாகிய அவத்தை வேறுபாடு பற்றி அழி பொருளென்றும் சொல்லப்படும். அழிபொருளென்றும் என்றதிலுள்ள உம்மையால் அவத்தைS வேறுபாடு கருதாத விடத்து நித்தப் பொரு ளென்பதே துணிவு. (எ...று)

மாயை என்பது முதல் கேணீ என்பதுவரை அடுத்து வருஞ் செய்யுளிற் சேர்த்துப்பொருளுரைக்கப்படும். (கசு)

மீமாம்சகர் மதம்பற்றித் தருபவன் ஒருவன் வேண்டுமென்பதைக் கூறுகின்றது.

புத்திமற் காரி யத்தாற் பூதாதி புருடன் றானு
மத்தனு கரணம் பெற்று லறிதலா லவற்றை மாயை
யுய்த்திடு மதனுன் மாயைக் குணர்வொன்று மில்லை யென்றே
வைத்திடு மதனு லெல்லாம் வருவிப்பா னொருவன் வேண்டும்.

(கொ—டு) இங்கு மாயைக்கு ஒருவன் ஆர் என் என்னின் உள்ளவாறு உரைப்ப நீ கேள் பூதாதி புத்திமற் காரியத்தால் புருடன்றானும் அத்தனுகரணம் பெற்றால் அறிதலால் மாயை அவற்றை உய்த்திடுமதனுல் மாயைக்குணர் வொன்றுமில்லை யென்றே வைத்திடுமதனுல் எல்லாம் வருவிப்பான் ஒருவன் வேண்டும்.

புத்திமற்காரியம் - புத்திமானது காரியம்.

(பொ—ரை) இவ்விடத்துக் கூறியவற்றுள் ஏனைய வெல்லாம் ஒக்கும் மாயையே தன் காரியத்தைத் தருமாகலின் மற்றொரு கடவுள் மாயையினின்

றும் தருவாரென்றல் பொருந்தா தென்று கூற, அறியாது கூறினாய் அதனை உள்ளவாறு சொல்ல நீகேட்பாயாக. குடம் முதலியன மண்ணினின்றும்குயவ னாற் செய்யப்படும் காரியமானாற்போலப்பூத முதலிய பிரபஞ்சமெல்லாம் ஒரு சேதனப் பொருளால் மாயையினின்று செய்யப்படும் காரியமேயாம். ஆன்மா சேதனப்பொருளாதலால் அதுவேதோற்றுவிக்கு மென்னலாகாதோ வெனின் அவ்வான்மா அப்பூதாதியாலாகிய தநுகரணாதிகளைப்பெற்றபின்னரே அறிதற் றொழிலைச் செய்தலானும் மாயை தநுகரணாதிகளுக்கு முதற்காரணமாய் நின்று அவற்றை மயக்கிச் செலுத்துதலினால் அம்மாயைக்கு உணர்ச்சி சிறிதுமில்லை என்றே கூறி யிருத்தலானும் இவ்வாறு ஆன்மாவிற்கும் மாயை க்கும் பிரபஞ்சத்தைத் தோற்றுவிப்பதில் அதிகாரமில்லாமை பெறப்படவே பாரிசேட அளவையால் இவ்விரண்டினும் வேறாய் பூதம் முதலிய பிரபஞ்சம் எல்லாவற்றையும் தோற்றுவிப்பதற்கு ஒரு கடவுள் வேண்டப்படும்.(எ-று)(கஎ)

இதுவுமது

காரிய காரணங்கண் முதறுணை நிமித்தங் கண்டாம்
பாரின்மண் டிரிகை பண்ணு மவன்முத றுணைநி மித்தந்
தேரின்மண் மாயை யாகத் திரிகைதன் சத்தி யாக
வாரியன் குலால னாய்நின் றாக்குவ னகில மெல்லாம்.

(கொ-டு) காரிய காரணங்கள் முதல் துணை நிமித்தம் பாரில் மண் திரி கை பண்ணுமவன் முதல் துணை நிமித்தம் கண்டாம் தேரின் அகிலம் எல்லாம் மாயை மண்ணாக தன்சத்தி திரிகை ஆக ஆரியன் குலாலனாய்நின்றுஆக்குவன்.

(பொ-ரை) அன்றியும் ஒரு காரிய நிகழ்ச்சிக்கு வேண்டுங் காரணங்கள் முதற்காரணம், துணைக்காரணம், நிமித்த காரணமென மூவகைப்படும். அக் காரணங்கள் தம்முள் ஒன்றேனுமின்றிக் காரியம் தோன்றா தென்பதும்;அக் காரணங்கள் தம்முள் வேறாம் என்பதும், இவ்வுலகின் கண்ணே குடம் முத லிய காரியத்தில் மண் முதற்காரணமாகவும் திரிகை துணைக்காரணமாகவும் குலாலன் நிமித்த காரணமாகவும் காண்டலால் அறிந்தாம். ஆராயுங்கால் பி பஞ்சக் கூட்டமாகிய காரியத்திற்கும் அவ்வாறே மண்போல மாயை முதற்கார ணமாகவும் திரிகைபோல இறைவனது சத்தி துணைக்காரணமாகவும், குலாலன் போல அவ்விரு காரணங்களின் வேறாய் சிவபிரான் நிமித்த காரணமாகவும் நின்று அப்பிரபஞ்சத்தைத் தோற்றுவிப்பன். (எ...று)

இரு காரணங்களின் வேறாய் இறைவனிற்பன் என்றது அக்கா ரணங்களின் தன்மையின் வேறாய் என்பதேயாம். இவ்வாறன்றி

திருட்டாந்தம் போல வேறு வேறாய் நிற்குமென்றல் வியாபகப்பொருட்குப் பொருந்தாது. இதனை வருகின்ற உஎ-வது செய்யுளிற் காண்க. (கசு)

தருபவன் தரு முறையைத் தொகுத்துக் கூறுகின்றது.

விந்துவின் மாயை யாகி மாயையி னவ்வி யத்தம்
வந்திடும் விந்துத் தன்பால் வைகரி யாதி மாயை
முந்திடு மராக மாதி முக்குண மாதி மூலந்
தந்திடுஞ் சிவன வன்றன் சந்நிதி தன்னி னின்றே.

(கொ-டு) விந்துத் தன் பால் வைகரியாதி முந்திடும் மாயை அராகம் ஆதி (முந்திடும்) மூலம் முக்குணம் ஆதி (முந்திடும்) சிவனவன் றன் சந்நிதி தன்னின் நின்றே தந்திடும்.

(பொ-ரை) சுத்தப் பிரபஞ்சம், சுத்தா சுத்தப் பிரபஞ்சம், அசுத்தப் பிரபஞ்சமெனக் காரியப் பிரபஞ்சம் முத்திறப்படுதலின் அவற்றிற்கு முதற்காரணங்களும் தம்முள் வேறுதல் வேண்டும். அவற்றுள் மலகன்மங்களோடு விரவாது முதற்காரணமாய் நிற்பது சுத்த மாயை. அஃது ஏனை அசுத்தமாயை பிரகிருதி மாயை இரண்டனையும் வியாபித்து மேலாய் நின்று சுத்தப் பிரபஞ்சத்திற்குக் காரணமாம். அச்சுத்த மாயையின் கீழாய் அடங்கி மல கன்மங்களோடு விரவி முதற்காரணமாய் நிற்கின்ற அசுத்த மாயை சுத்தா சுத்தப் பிரபஞ்சத்திற்குக் காரணமாம். அவ்வசுத்த மாயையினது தூல பரிணாமமாய்த்தோன்றி நிற்கின்ற பிரகிருதி மாயை அசுத்தப் பிரபஞ்சத்திற்குக் காரணமாம். அக்காரணம் மூன்றனுள் சுத்த மாயையினின்றும் ஒடுக்க முறைபற்றி வைகரி முதல் வைத்தெண்ணப்படும் சுத்தப் பிரபஞ்சமாகிய நாலுவாக்குந் தோன்றும். அசுத்த மாயையினின்றும் ஒடுக்க முறை பற்றி அராக முதல் வைத்தெண்ணப்படும் சுத்தா சுத்தப் பிரபஞ்சமாகிய ஐந்துதத்துவங்களும் தோன்றும். பிரகிருதி மாயையினின்றும் தோற்றும். முறைபற்றி குணதத்துவ முதல் வைத்தெண்ணப்படும் அசுத்தப் பிரபஞ்சமாகிய இருபத்து நான்கு தத்துவங்களும் தோன்றும். இவ்வாறு சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதி மாயைஎன்ற மூன்றும் தத்தம் காரியங்களைச் சிவசத்தியின் சங்கற்ப ரூபமாகிய சந்நிதியினின்றும் தோற்றுவிக்கும். (எ...று.)

பிரபஞ்ச மென்பது தத்துவத்து ளடங்குதலின் தத்துவம் (36) முப்பத்தாறுக்கும் முதற் காரணமாகிய சுத்தம், அசுத்தம், பிரகிருதி என்னும் மாயை மூன்றின் வைத்து முறையே சுத்தம், சுத்தா சுத்தம், அசுத்தமெனப் பிரபஞ்சம் முத்திறப்படு மென்று கூறிய

தாம். பரிணமம் ஒன்று பிறிதொன்றாதல். அது தூலம் சூக்குமமென இருவகைப்படும். தூலபரிணமம் பால் தயிராதல், நெய்யிற்புழுவுண்டாதலென இருவகைப்படும். முன்னையது முற்றும் பரிணமம். பின்னையது ஏகதேச பரிணமம். சூக்கும பரிணமம் சேலைகூடாரமாதல். இவற்றுள் சூக்கும பரிணமம் சுத்த மாயைக்கும், தூலத்தில் ஏகதேசம் அசுத்தமாயைக்கும், முற்றும் பிரகிருதி மாயைக்குங் கொள்ளப்படும். ஒடுக்க முறை - கடைசியி லிருந்து எண்ணுதல். தோற்றுமுறை - ஆரம்பத்தி லிருந்து எண்ணுதல். (கசு)

தருபவன் தரு முறையை வகுத்துக் கூறத் தொடங்கிச் சுத்த மாயா காரியமாகிய வைகரி வாக்கின் இலக்கணம் கூறுகின்றது.

வைகரி செவியிற் கேட்ப தாயத்த வசன மாகி
மெய்தரு முதான வாயு மேவிட விளைந்த வன்னம்
பொய்யற வடைவு டைத்தாய்ப் புந்திகா ரணம தாகி
யையமில் பிராண வாயு வடைந்தெழுந் தடைவு டைத்தாம்.

(கொ-டு) வைகரி செவியிற் கேட்பதாய் அத்த வசனமாகி புந்திகாரணமதாகி மெய்தரும் உதான வாயு மேவிட விளைந்த வன்னம் ஐயம் இல் பிராண வாயு அடைந்துஎழுந்து பொய் அறஅடைவு உடைத்தாய் அடைவுஉடைத்தாம்.

(பொ-ரை) மேற்கூறிய வைகரி யாதி வாக்கு நான்கனுள் வைகரி வாக்காவது தன் செவிக்கும் பிறர் செவிக்கும் கேட்கப்படுவதாய், நினைந்த பொருளைச் சொல்லும் சொல்லாய் அச்சொல்லுவானுக்கும் கேட்பானுக்கும் பகுத்துணர்வுண்டாதற் கேதுவாயும் உடம்பின் கண் எழுகின்ற உதானனென்னுங் காற்றால் தள்ளப்பட்டு மத்திமைத் தானத்துச் சூக்கும ரூபமாய்ப் பிரிந்து தோன்றிய அக்கரங்கள் பிராணனென்னும் காற்றால் தள்ளப்பட்டெழுந்து ஐயமின்றாதற் கேதுவாய் விபரீதம் அற புறத்தே அடைத லுடைத்தாகியும் சொல்லா நின்ற இவ்விருவகை இலக்கணத்தையுடையதாம். (எ...று.)

தனக்கும் பிறர்க்கும் பகுத்துணர்வைத் தரும் வண்ணங் கேட்கப்படுவதாய் வாயின் வழியாய் வெளியே வருவதாய்ச் சொல்லும் ஒலி வைகரி வாக்கென்பதாம். (உ0)

மத்திமை வாக்கின் இலக்கணம் கூறுகின்றது.

உள்ளுணர் ரோசை யாகிச் செவியினி லுறுதல் செய்யா
தொள்ளிய பிராண வாயு விருத்தியை யுடைய தன்றித்

தெள்ளிய வக்கரங்கள் சிந்திடுஞ் செயல தின்றி
மெள்ளவே யெழுவ தாகு மத்திமை வேற தாயே.

(கொ—டு) மத்திமை வேறதாயே உள் உணர் ஓசையாகி செவியினில் உறுதல் செய்யாது மெள்ளவே எழுவது (உள் உணர் ஓசையாகி) ஒள்ளிய பிராண வாயு விருத்தியை உடையது அன்றி சிந்திடுஞ் செயலது இன்றி தெள்ளிய அக்கரங்கள் ஆகும்.

இரட்டுற மொழித லென்னும் உத்தியால் உள் ளுணரோசையாகி என்பது இரட்டித்தது. உண ரோசை யென்பது உணரு மோசையென விரிந்து முன்னையது எதுவினும் பின்னையது பொருளினும் நின்றது.

(பொ—ரை) மத்திமை வாக்காவது பைசந்திக்கும் வைகரிக்கும் வேருய் அதாவது நடுவாய் சொல்லுவான் தன்னுள்ளே உணரும் சவிகர்ப்ப உணர்விற் கேதுவாய் செவியிற் கேட்கப்படாததாய் மெல்லோசையாய் கண்டத்திலேவிளங்குவதால் உள்ளே உணரப்படும் ஓசையாகியும் விளங்கிய பிராணவாயுவின் ரெழிற் பாடின்றி உதான வாயுவின் தொழிற் பாடு மாத்திரையால் பல், இதழ், நா, அண்ணங்களிற் பட்டு வெளியே சிதறிப்போதலின்றி உள்ளே சூக்கும ரூபமாய் அக்கரங்களின் வடிவு பிரிந்து தோன்றி விளங்குதலுமாகிய இவ்விரு வகை இலக்கணத்தை உடையது. (எ...று.)

தன்னுள்ளே உணரும் ஓசையாய் உள்ளே அக்கரங்களின் வடிவு பிரிந்து தோன்றுவதாயுள்ள ஒலி மத்திமை வாக்கென்பதாம். (உக)

## பைசந்தி வாக்கின் இலக்கணங் கூறுகின்றது.

வேற்றுமைப் பட்ட வன்னம் வெவ்வேறு விபாக மாகித்
தோற்றுத லடைவொ டுக்கிச் சொயம்பிர காச மாகிச்
சாற்றிய மயிலி னண்டந் தரித்திடுஞ் சலமே போன்றங்
காற்றவே யுடைய தாகிப் பைசந்தி யமர்ந்து நிற்கும்.

(கொ—டு) பைசந்தி சாற்றிய மயிலின் அண்டந் தரித்திடுஞ் சலமே போன்று வேற்றுமைப் பட்ட வன்னம் வெவ்வேறு விபாக மாகி தோற்றுதல் அடைவு ஒடுக்கி அங்கு ஆற்றவே உடையதாகி சொயம் பிரகாசமாகி அமர்ந்து நிற்கும்.

(பொ—ரை) பைசந்தி வாக்காவது பஞ்சவன்னங்களையும் சூக்கும ரூபமாக ஒடுக்கி நிற்பதாகிய மயில் முட்டையில் தரித்திடும் நீர்போல பலவகைப்பட்ட எழுத்துக்கள் வேறு வேருக விளங்கித் தோன்று முறைமையினை அடக்கி மிகவும் சூக்கும ரூபமாய்க் கொண்டு சிந்தையின் அமர்ந்து நிற்றலும் அக்கரங்கள்

நிருவிகற்ப உணர்விற்கு ஏதுவாதலுமாகிய இரண்டு இலக்கணத்தை உடையது. (எ...று.)

மயிலின் முட்டைக்குள் ளிருக்கும் சலத்திலே மயிலின் பஞ்ச வன்னம் ரூபீகரித்துத் தோன்றுவது போல சித்தத்தில் ஒருணர்வு மாத்திரமாய்த் தோன்றி அக்கரங்களை நிருவிகற்பமா யுணரும் ஒலி பைசந்தி வாக்கென்பதாம். (உஉ)

சூக்கும வாக்கின் இலக்கணம் கூறுகின்றது.

சூக்கும வாக்க துள்ளோர் சோதியா யழிவ தின்றி
யாக்கிடு மதிகா ரத்திற் கழிவினை தன்னைக் கண்டா
னீக்கமி லறிவா னந்த முதன்மைநித் தியமு டைத்தாய்ப்
போக்கொடு வரவி ளைப்பும் விகாரமும் புருட னின்றும்.

(கொ-டு) சூக்கும வாக்கது உள் ஓர் சோதியாய் அதிகாரத்திற்கு அழிவினை ஆக்கிடும் அழிவதுஇன்றி தன்னைக்கண்டால் புருடன் நீக்கம் இல் அறிவு ஆனந்தம் முதன்மை நித்தியம் உடைத்தாய் ஆம் போக்கொடு வரவு இளைப்பும் விகாரமும் இன்று.

(பொ-ரை) சூக்கும வாக்காவது காரண சரீரத்தின் உள்ளாக நாத மாத்திரையாய் விளங்குதலும் ஞான மாத்திரைக் கேதுவாதலுமாகிய இலக்கணத்தை யுடையது. அது தான் பைசந்தி மத்திமை வைகரியாய் விருத்திப்படுவதாகிய தன்னதிகார மாத்திரைக்கே அழிவுண்டாக அச் சூக்கும வாக்கு சுத்த மாயா ரூபமாய்க் கேடின்றி நிலை பெறுவதாம். தவ விசேடத்தால் அதனை உள்ளபடி காணப் பெறுவார்க்கு நீங்காத பேரறிவும், ஆனந்தமும், சுதந்தரமும், நித்தியத்துவமும் உடையதாய் சுத்தமாயா புவனத்தின்கண்ணதாகிய அபரமுத்திப் பெரும்போகம் உண்டாம். கன்மோற்பத்தியால் வரும் இளைப்பும் விகாரமுமுதலும் இல்லையாம். (எ...று.)

காரண சரீரமாவது கேவலமாகிய அறியாமையினின்று நீங்கியும் தத்துவங்களுடன் கூடிப் பகுத்தறிதலின்றியும் தத்துவத்தோற்றத்திற்குக் காரணமான மாயையோடு கூடி நிற்கும் மயக்க வுணர்வு. (உங)

வாக்கு நான்கும் சிவதத்துவம் ஐந்தில் இருக்குமெனக் கூறுகின்றது.

நிகழ்ந்திடும் வாக்கு நான்கு நிவிர்த்தாதி கலையைப் பற்றித்
திகழ்ந்திடு மஞ்ச தாகச் செயல்பரி ணாம மன்று

புகழ்ந்திடும் விருத்தி யாகும் படங்குடி லாறுற் போல
மகிழ்ந்திடும் பிரம மன்று மாமாயை யென்பர் நல்லோர்.

(கொ-டு) நிகழ்ந்திடும் நான்கு வாக்கும் நிவிர்த்தி ஆதி கலையைப்பற்றி அஞ்சதரீகத் திகழ்ந்திடும் படம் குடில் ஆறுற்போல புகழ்ந்திடும் விருத்தியாகும் செயல் பரிணமம் அன்று மகிழ்ந்திடும் பிரமம் (என்பர்) நல்லோர் (பிரமம்) அன்றுமாமாயை (ஆகும்) என்பர்.

(பொ-ரை) மேற்கூறிப் போந்த வைகரி முதலிய நான்கு வாக்குகளும் நிவிர்த்தி, பிரதிஷ்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை என்னும் பஞ்ச கலைகளைப் பற்றுக் கோடாகச் சார்ந்து ஐவகைப்பட்டுச்சிவம், சத்தி, சாதாக்கியம், மகேசுவரம், சுத்தவித்தை என்னும்பஞ்சதத்துவங்களி லிருக்கும். இவ்வாக்குகள் சுத்தமாயையினின் றும் படமே குடி லாயினுற் போல விருத்தியாய்க் காரியப் படுவனவாம். அசுத்த மாயா காரியம்போலப் பரிணமமாய்க் காரியப்படுவன வல்ல. இவ்வாக்குகளை சத்தப் பிரம்ம வாதிகள் மகிழத்தக்க பிரமம் என்பர். சைவசித்தாந்திகள் பிரமமாதலின்றிப் பிரமத்திற்கு நேரே பரிக்கிரகசத்தி எனப்படும் சுத்தமாயா ரூபமாகுமென்று கூறுவர். (எ...று)

விருத்தி யெனினும் சூக்கும பரிணம மெனினும் ஒக்கும். படம் குடிலாதலென்பது—சேலை கூடாரமாதல். பரிக்கிரக சத்தி யென்பது— வைப்புச் சத்தி. அதாவது வேண்டும்போது உபகாரப் படுவதாய்த் தன்னுள் அடங்கி நிற்பது.

வாக்கு நான்கும் பஞ்சகலைகளைச சார்ந்து ஐவகைப்பட்டு நிற்றலாவது—சாந்தியதீதகலையைச் சார்ந்து சூக்குமையும், சாந்திகலையைச் சார்ந்து பைசந்தியும், வித்தியா கலையைச் சார்ந்து மத்திமையும், பிரதிட்டா கலையைச் சார்ந்து தன்செவிக்குக் கேட்கப்படுவதான சூக்கும வைகரியும், நிவிர்த்தி கலையைச் சார்ந்து தன் செவிக்கும் பிறர் செவிக்குங் கேட்கப்படுவதான தூலவைகரியுந் தோன்றி ஐவகைப்பட்டு நிற்கும். இவ்வாறு பஞ்சகலையிற் றோன்றிய வாக்கினுள் சூக்குமை சிவதத்துவத்தினும், பைசந்தி சத்திதத்துவத்தினும், மத்திமை சாதாக்கிய தத்துவத்தினும், சூக்குமவைகரிமகேசுவர தத்துவத்தினும், தூலவைகரி சுத்த வித்தை யென்னுந் தத்துவத்தினும் நின்று தொழிற்படுமாதலால் நான்கு வாக்கும் ஐந்துதத்துவத்திலிருக்குமெனக் கூறப்பட்டது. (உச)

**சுத்த மாயா காரியமே மந்திரேசுவரர் முதலிய அபரமுத்தர்களின் தநுகரணாதிகளெனக் கூறுகின்றது.**

*வித்தைகள் வித்தை யீசர் சதாசிவ ரென்றி வர்க்கு*
*வைத்துறும் பதங்கள் வன்னம் புவனங்கண் மந்தி ரங்க*
*டத்துவஞ் சரீரம் போகங் கரணங்க ளாமெ லாமு*
*முய்த்திடும் விரிந்த வந்தா னுபாதான மாகி நின்றே.*

(கொ-டு) உபாதானமாகி நின்றே உய்த்திடும் விரிந்தவந்தான்.

(பொ-ரை) மேற்கூறிப்போந்த வாக்கு மாத்திரைக்கேயன்றி மந்திரேசுவரர் மந்திர மகேசுவரர், அணு சதாசிவர் முதலிய அபரமுத்தர்களுக்கு வேண்டப்படும் பதங்களும், அக்கரங்களும், புவனங்களும், மந்திரங்களும், தத்துவங்களும் சரீரங்களும், போகங்களும், கரணங்களுமாகிய சுத்தாத்துவாக்கள் எவற்றினுக்கும் முதற் காரணமாய் நின்று செலுத்துவது சுத்த மாயை யாகும். (எ...று)

தத்துவ மென்றது கால முதலிய வித்தியா தத்துவத்தை. கரண மென்றது அந்தக்கரண முதலிய ஆன்ம தத்துவத்தை என அறிக.

**சுத்த மாயா காரியமாகிய வாக்கை இன்றி எவர்க்கும் அறிவுண் டாகா தென்று கூறுகின்றது.**

*மூவகை யணுக்க ளுக்கு முறைமையின் விந்து ஞான*
*மேவின தில்லை யாகில் விளங்கிய ஞான மின்றா*
*மோவிட விந்து ஞான முதிப்பதோர் ஞான முண்டேற்*
*சேவுயர் கொடியி னான்றன் சேவடி சேர லாமே.*

(கொ-டு) விந்து ஞானம் மூவகை அணுக்களுக்கும் முறைமையின்மேவினது இல்லையாகில் விளங்கிய ஞானமின்றாம் விந்துஞானம் ஓவிட ஓர்ஞானம் உதிப்பது உண்டேல் சேவுயர் கொடியினான்றன் சேவடி சேரலாமே.

(பொ-ரை) மேற்கூறிப் போந்த வாக்குக்கள் பகுத்துணர்வதாகிய சவிகற்ப ஞானத்திற் கேதுவாதலால் இவ்விடத்துக் கூறிய மந்திரேசுவரர் முதலிய அபரமுத்தர்க்கும், விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலருக்கும் இன்றியமையாது வேண்டப்படும். சரீர வேறுபாடுபற்றி விஞ்ஞான கலருக்குத் தூலமாயும், பிரளயா கலருக்குத் தூலதரமாயும், சகலருக்குத் தூலதமமாயும் பொருந்தி நிற்கும். இவ்வாக்கு இல்லையாயின் விளங்கிய ஞானமில்லையாம். இதனாலுண்டாம் ஞானம் உலகப் பொருளை அறியும் ஞானமாம். ஆதலின் அவ்வாக்குக்கள் மேலான பந்தமாம். இவ்வாக்குக்களை தன்னின் வேறாகக் கண்டு நீக்கி அவற்றிற்கு மேலாகிய பேரறிவு ஒருவனுக்கு விளங்குமாயின் அப்பொழுது இடபக்கொடியை உயர்த்திய சிவபெருமான் திருவடியாகிய பர முத்தியைத் தலைப்படுவன். (எ...று)

தூலம் - விளங்கித் தோன்றுதல். தரம் - அதிகம். தமம் - குறைவு. இதனுனே நான்கு வாக்குக்களும் விஞ்ஞானகலர்க்கு விளங்கித் தோன்று மெனவும் பிரளயாகலர்க்கு அவ்வாறின்றி சகலரினும் அதிகமாய் விளங்கித் தோன்றுமெனவும், சகலருக்கு பிரளயாகலரினும் குறைந்து விளங்கித் தோன்று மெனவுங் அறிக. (உசு)

சுத்த மாயா காரியங் கூறி நிறுத்த முறையானே தருபவன் தரு முறை வகையில் அசுத்த மாயா காரியத்தைத் தொகுத்துக் கூறு கின்றது.

அருவினி லுருவந் தோன்றி யங்காங்கி பாவமாகி
யுருவினி லுருவ மாயே யுதித்திடு முலக மெல்லாம்
பெருகிடுஞ் சுருங்கும் பேதா பேதமோ டபேத மாகு
மொருவனே யெல்லா மாகி யல்லவா யுடனு மாவன்.

(கொ-டு) அருவினில் உருவம் தோன்றி உருவினில் உருவமாயே உதித்திடும் உலகமெல்லாம் அங்காங்கி பாவமாகி பெருகிடும் சுருங்கும் பேதாபேதமொடு அபேதமாம் ஒருவனே எல்லாமாகி அல்லவாய் உடனுமாவன்.

(பொ-ரை) சூக்குமமாகிய அசுத்த மாயையினின்றும் தூலமாகிய கலை முதலிய தத்துவங்களும் அவற்றினும் தூலமாகிய மூலப்பகுதியும் அதனினும் தூலமாகிய குணதத்துவ முதலாயினவுந் தோன்றும். அத்தூலங்களினின்றும் தோன்றும் காரியம் அவற்றினுந் தூலமேயாம். இவ்வாறே காரியப் பிரபஞ்ச மெல்லாந் தோன்றி நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம், ஆண், பெண், அலி என்றது முதலான அவயவப் பகுப் புடையனவாய் வளர்ந்தும், தேய்ந்தும், மாறியும் வரும். இத்தன்மையவாகிய காரிய காரணங்கட்கு தம்முட் பெரும் பாலும் வேற்றுமை கூறுவர் நையாயிகர் முதலியோர். அவர் மதம் அடாது. என்னெனின் ஒன்று பிறிதொன்றாக மாறுதலை நோக்கிற் பேதா பேதமாம். அதாவது ஒன்றே பிறிதொன்றாவதில் அபேதமும் முன்னையதிற்பின்னையது வேறாதலிற் பேதமுமாம். உள்ளது காரியப்படுதலை நோக்கி அபேதமாம். இவ்வாறு அபேதமாயும், பேதா பேதமாயும் விளங்கும் காரியங்களை முதற்காரணமாகிய மாயையில் நின்றும் தோற்றுவிக்குங்கால் நிமித்த காரணனாகிய முதல்வன் அக் காரணத்தோடு கலப்பினால் ஒன்றாயும் பொருட்டன்மையால் வேறாயும் செலுத்துதலால் உடனாயும் நிற்பன். (எ...று.) (உஎ)

அருவமாகிய மாயையினின்று உருவந் தோன்றாதென்னும் மாயாவாதியை மறுத்துரைக்கின்றது.

அருவுரு-வீ றாகும் விகாரமு மவிகா ரத்தின்
வருவது மில்லை யென்னின் வான்வளி யாதி பூதந்
தருவது தன்னின் மேக சலனசத் தங்க ளோடு
முருவமின் னுருமே றெல்லா முதித்திடு முணர்ந்து கொள்ளே.

(கொ-டு) அரு உரு ஈறாகும் அவிகாரத்தின் விகாரமும் வருவதும் இல்லை யென்னின்.

(பொ—ரை) அருவமாகிய மாயை உருவமாகிய பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்காது. அருவமென்றதினாலேயே அவிகாரமென்பதும் பெறப்படுமாதலால் அவிகாரமாகிய (விகாரமில்லாத) அம்மாயையினின்றும் விகாரமாகிய பிரபஞ்சந் தோன்றுவதுமில்லை என்று மாயாவாதி கூற, அறியாது கூறினாய் உன்மதத்தில் அரூபமும் அவிகாரியுமாகிய ஆகாயத்தினின்றும் உருவமும் விகாரியுமாகிய வாயு முதலிய பூதங்கள் முறையே தோன்றும். அதுவேயுமன்றி அவ்வகாயத்தினின்று பல மேகங்களும் மேகத்தின் கண் பல விகாரங்களும், பல ஓசைகளும், பல மின்னல்களும், பல இடிகளும் இன்னும் இவைபோல்வன பலவும் தோன்றுமாகலான் அதனை மறந்து அரூபத்தில் ரூபம் தோன்றாதென்று கூறுதல் உனக்கே வழுவாய் முடியுமென்பதனை அறிவாயாக. (எ...று.)

## முதலதிகரணம் முடிந்தது.

## இரண்டாமதிகரணம்.

ஈறுமாகி அநாதிமுத்த சித்துருவாய் மன்னிநின்று மருவுவித்திடுமென்பது.

இவ்வதிகரணம் ஈறுமாகி மருவிடுமெனவும், மன்னிநின்றே மருவிடுமெனவும்; அநாதிமுத்த சித்துருவெனவும் முக்கூற்றை உடையது. அவற்றுள்மேல் தருபவன் தருமுறை கூறிய இயைபு பற்றி மன்னி நின்றே மருவிடுமென்னும் நடுக்கூறு முன்னர் மூன்று செய்யுளால் கூறப்படுகின்றது.

தருபவன் எதில்நின்று தருவன் என வினவுகின்றது.

மண்ணினிற் கடாதி யெல்லாம் வருவது தலால லாலே
யெண்ணிய வருவ மெல்லா மியற்றுவ னீசன் றானுந்

கண்ணுகா ரியங்க ளெல்லாங் காரண மதனிற் காண்பன்
பண்ணுவ தெங்கே நின்றிங் கென்றிடிற் பகரக் கேணீ.

(கொ-டு) குலாலனுலே மண்ணினிற் கடாதி யெல்லாம் வருவது ஈசன்ருனும் எண்ணிய உருவ மெல்லாம் இயற்றுவன் (ஆயின்) இங்கு கண்ணுகாரியங்கள் எல்லாம் காரணமதனின் (நின்று) காண்பன்எங்கே நின்று பண்ணுவது என்றிடில் பகர நீகேள்.

ஆயின் என்பது சொல் எச்சமாய் வருவிச்கப்பட்டது. நின்று என்பது காரணம் அதனின் என்பதனேடும் கூட்டப்பட்டது.

(பொ-ரை.) குயவனுல் மண்ணில்நின்றும் குடமுதலிய காரியமனைத்தும் வருதல் போல இறைவனும் கருதிய உலகமெல்லாவற்றையும் மயையினின்று ஆக்குவனுயின் குயவன் இவ்விடத்து கடாதிகாரியங்களையெல்லாம் ஆக்குங்கால் அவற்றிற்குக் காரணமாகிய அந்நிலத்தினின்று செய்வனெனக்கண்டோமே! அதுபோல இறைவன் எவ்விடத்து நின்று செய்வானென்று கேட்கயாமதற்கு விடைகூற நீ கேட்பாயாக. (எ...று) (உக)

தருபவன் நிராதாரமாய் நின்று தருவனெனக் கூறுகின்றது.

சீலமோ வுலகம் போலத் தெரிப்பரிததனு னிற்குங்
கோலமு மறிவா ரில்லை யாயினுங் கூறக் கேணீ
ஞாலமே ழினையுந் தந்து நிறுத்திப்பின் னுசம் பண்ணுங்
காலமே போலக் கொண்ணீ நிலைசெயல் கடவுட் கண்ணே.

(கொ-டு) காலமே போல கடவுட் கண்ணே நிலைசெயல் நீகொள். கண் என்பது அறிவு. அது சத்தியைக் குறிக்கும்.

(பொ-ரை.) இறைவன் தன்மையோ உலகம்போலன்றி வாக்குமனுதீதகோசரமாகலான் அவ்விறைவன் நிற்கும் நிலையும் வாக்குமனுதீத கோசரமேயாம். அங்ஙனமாயினும் ஒருவாற்ருன் உவமையில் வைத்து உனக்குக் காட்டுதும் நீ அறிவாயாக. உலகமெல்லா வற்றையும் தோற்றுவித்து நிறுத்தி பின்னர் அழித்துக் காரியப்படுத்துங்காலம் அவற்றைக் காரியப்படுத்துங்கால் எல்லாப்பொருட்கும் தான் ஆதாரமாய் தனக்கோர் ஆதாரமின்றி நிற்றல்போல் சிவசத்தியும் நிராதாரமாய் நின்றே உலகத்தைக் காரியப்படுத்து முறைமையை உணர்ந்துகொள்வாயாக. (எ...று.)

வாக்கு மனுதீதகோசரம் என்ற சொல்லில் அதீதமென்பது எட்டாமையையும், கோசரமென்பது எட்டுதலையும் குறித்து ஒன்

றேடொன்று முரணுதோவெனின் முரணுது என்னை ? வாக்கிற்கும் மனதிற்கும் எட்டாரதென்பது தோன்றவாக்கு மனுதீத மென்னும் எட்டாததொன்று உண்டென்று கூறுதலால் யாது பயனென்னும் ஐயம் நிகழாமைப்பொருட்டு அறிவிற்கெட்டுமென்பது தோன்ற கோசர மென்றுங கூறியதனுலென்க. (௩௦)

தருங்கால் தருபவன் இலயபோக அதிகாரத்துட்பட்டு துடக்குற்றும் துடக்குறுவானல்லனெனக் கூறுகின்றது.

கற்றநூற் பொருளுஞ் சொல்லுங் கருத்தினி லடங்கித் தோன்றும்
பெற்றியுஞ் சாக்கி ராதி யுயிரினிற் பிறந்தொடுக்க
முற்றதும் போல வெல்லா வுலகமு முதித்தொடுங்கப்
பற்ருெடு பற்ற தின்றி நின்றனன் பரனு மன்றே.

(கொ டு) உயிரினில் சாக்கிராதி ஒடுக்கம் உற்று பிறந்ததும் போல பரனும் எல்லாவுலகமும் உதித்து ஒடுங்கபற்ருெடு (நின்றனன்) கற்றநூற் பொருளும் சொல்லும் கருத்தினில் அடங்கி தோன்றும் பெற்றியும் (போல) பற்றது இன்றி நின்றனன் அன்றே.

(பொ-ரை) ஆன்மாவினிடத்து சாக்கிரமுதலிய அவத்தைகள் கரணங்களால் ஒடுங்கித் தோன்றும்வழி ஆன்மாவும் அவத்தைப்பட்டு துடக்குறுதல் போல முதல்வனும் தன்பால் எல்லா உலகும் ஒடுங்கி உதிப்பத் தானும் அதுபற்றி இலயம், போகம், அதிகாரமென்னும் அவத்தைப்பட்டு துடக்குறுவனுயினும் ஒருவன் கற்ற நூற்பொருளும் சொல்லும் அதாவது சொற்கம் நரகம் நன்மை தீமை முதலியனவும் அவற்றைக் குறிக்குஞ் சொல்லும் வாதனு ரூபமாய் புத்திதத்துவத்தை ஒடடி நின்று ஆன்மபோதத்தின் கண் ஒடுங்கி மீளத் தோன்றுமிடத்து அவ்வான்மபோதம் அதுபற்றித் துடக்குருத வாறுபோல இறைவனும் துடக்குறுதலின்றியே நின்றனன். (எ...று) (௩௧)

ஈறுமாகி மருவிடு மென்றதனை ஆறு செய்யுளால் வலியுறுத்துவான் தொடங்கி முதற்கண் புத்தர் மதம்பற்றி "ஈறுமாகி மருவுவித்திடு" மெனக் கூறுகின்றது.

உயிரவை யொடுங்கிப் பின்னு முதிப்பதெ னரன்பா லென்னிற்
செயிருறு மலத்தி னுகுஞ் சிதைந்ததே தென்னிற் சித்தத்
தயர் வொழி காரி யங்க ளழியுங்கா ரணங்கி டக்கும்
பயிறரு காரி யம்பின் பண்டுபோற் பண்ணு மீசன்.

(கொ-டு) ஈசன் ஒடுங்கி(ய) உயிர் அவை பின்னும் அரன்பால் உதிப்பது என் என்னில் செயிருறு மலத்தின் ஆகும் சிதைந்தது எது என்னில் சித்தத்து அயர்வு ஒழி(ய) காரியங்கள் அழியும் பயில்தரு காரணம் கிடக்கும் காரியம் பின் பண்டுபோற் பண்ணும்

(பொ-ரை.) சங்காரகாரணனாகிய இறைவனால் சங்காரமெய்திய உயிரோடும் கூடிய உலகம் சங்காரமெய்தியவாறே ஒழியாது மீளவும் அவ்விறைவன் பால் நின்றுதோன்றுதல் எற்றுக்கெனின் குற்றம் பொருந்திய மலத்தின் பரிபாகம் ஆன்மாவிற்கு வருதற் பொருட்டு தோன்றும், அவ்வாறாயின் மீளவும் தோன்றற்பாலதாகிய உலகம் முன் அழியாது நிலைபெறவே யமையும். அவ்வாறன்றி அழிதல் எற்றுக்கெனின் உயிரின் இளைப்பொழித்தற் பொருட்டு முன்னிளைப்பினைச் செய்துநின்ற காரியங்கள் அழியும், அழிந்தவிடத்தும் காரணரூபமாய் கிடக்கின்ற அவ்வுலகங்களை முன்னை வினைத் தொடர்ச்சிக் குரியனவாய் தத்தங் காரணங்களி னின்றும் ஒடுங்கியவாறே பின்னர் உதிக்கும்படி செய்வன் (எ...று.) (கஉ)

## இதுவுமது.

தோற்றுவித் தளித்துப் பின்னுந் துடைத்தரு டொழில் கண்மூன்றும்
போற்றவே யுடைய னீசன் புகுந்தது விகார மென்னிற்
சாற்றிய கதிரோ னிற்கத் தாமரை யலருங் காந்தங்
காற்றிடுங் கனலை நீருங் காந்திடுங் காசினிக்கே.

(கொ-டு) ஈசன் தோற்றுவித்து அளித்து பின்னும் துடைத்தருள் மூன்றுதொழில்களும் போற்றவே உடையன் புகுந்தது விகாரம் என்னின் சாற்றிய கதிரோன் நிற்க காந்தம் கனலைக் காற்றிடும் தாமரை அலரும் காசினிக்கே நீருங்காந்திடும்.

(பொ-ரை) ஒரு கடவுள் தோன்றச்செய்து நிலைப்பித்து பின்னர் சங்காரத்தை செய்விக்கின்ற முறைமையில் இம் முத்தொழில்களும் இடையறாது செய்வனாயின் பாரமெய்தி விகாரியாகானோ, எனின் ஆகான் எதுபோலவெனின் சூரியன் தன் சன்னிதியில் சூரியக்காந்தக் கல்லில் நெருப்பைத் தோன்றச்செய்தும் தாமரையை அலரும்படிசெய்தும் பூமியில் நீரைச் சுவறும்படி செய்தும் ஆகிய முத்தொழில் பற்றி அச்சூரியன் விகாரமெய்தாதது போல் என்க. (எ...று.) (கங)

பவுராணிகர்மதம்பாஞ்சராத்திரிமதம்இரணியகர்ப்பமதம்பற்றி
ஈறுமாகி மருவுவித்திடு மெனக் கூறுகின்றது.

உரைத்தவித் தொழில்கண் மூன்று மூவருக் குலக மோத
வரைத்தொரு வனுக்கே யாக்கி வைத்ததிங் கென்னை யென்னின்

விரைக்கம லத்தோன் மாலு மேவலான் மேவினோர்கள்
புரைத்ததி கார சத்தி புண்ணிய நண்ண லாலே.

(கொ-டு) உரைத்த இம்மூன்று தொழில்களும் மூவருக்கு உலகம் ஓத இங்கு ஒருவனுக்கே ஆக்கிவைத்து வரைந்தது என்னை யென்னின். விரைக் கமலத் தோன்மாலும் புண்ணியம் நண்ணலாலே புரைத்த அதிகார சத்தி ஏவ லான் மேவினோர்கள்.

(பொ-ரை) இங்ஙனம் கூறிப்போந்த சிருட்டி, திதி, சங்காரமென்னும் முத்தொழில்களும் பிரம்மா, விட்டுணு, ருத்திரரென்னும் மூன்று கடவுளருக்கு முரியவென உலகஞ் சொல்லா நிற்பவும் இவ்விடத்து ஒரு கடவுளுக்கே முத் தொழிலும் செய்யும் சுதந்தரம் உண்டென்று வரையறுத்தது என்னையெனின் வாசனை பொருந்திய தாமரை மலரின்கண் உறைகின்ற பிரம்மா, விட்டுணு, இருவரும் புண்ணிய விசேடம் பொருந்தியதால் முதல்வனுடைய உயர்ந்த அதி கார சக்தியை அம்முதல்வனது ஏவலால் பெற்றுடையர். அவ்வாறன்றி அத்தொழிற்கு அவ்விருவரும் சுதந்தரரல்லர், முத்தொழிலும் செய்தற்குரிய சுதந்தரம் சங்காரகாரணனாகிய ஒருவனுக்கே உண்டு. (எ...று)

விட்டுணுவுக்குக் காத்தற்றொழில் சுதந்தரமாயின் தன்மகனாகிய மன்மதனை சிவபெருமான் நீறாக்கிய காலத்து நீறுபடாது காத்தி ருக்கலாம். பிரமனுக்குப் படைத்தற்றொழில் சுதந்தரமாயின் சிவ பிரானாற் கொய்யப்பட்ட தனது தலையைப் மீளப் படைத்திருக்கலாம், அங்ஙனம் செய்யாமையானே அவர்க்கு அத்தொழில்கள் சுதந்தரம் உடையன வல்லவாதல் அறிக. (௩௪)

இதுவுமது.

இறுதியாங் காலந் தன்னி னொருவனே யிருவ ருந்தம்
முறுதியி னின்றா ரென்னி னிறுதிதா னுண்டா காதா
மறுதியி லரனே யெல்லா மழித்தலா லவனா லின்னும்
பெறுதுநா மாக்க நோக்கம் பேரதி கரணத் தாலே.

(கொ-டு) இறுதியாங் காலந் தன்னில் இருவரும் தம் உறுதியில் நின்றார் என்னின் இறுதிதான் உண்டாகாதாம் அறுதியில் அரனே எல்லாம் அழித்த லால் ஒருவனே பேரதி கரணத்தாலே இன்னும் ஆக்கம் நோக்கம் அவனால் நாம் பெறுதும்.

(பொ-ரை) அன்றியும் சங்கார காலத்தில் பிரம விட்டுணு இருவரும் தத்தம் ஆற்றலோடு நிலைபெறுவராயின் உலகம் சங்காரமாதலின்று. ஆதலால்

சங்காரகாலத்தில் அவ்விருவரும் சங்கரிக்கப்பட்டு உளரல்லர் என்பது பெற்றும். அதுவன்றியும் வேறொருவராலும் சங்கரிக்கப்படாத சங்காரக்கடவுள் சிலவற்றை ஒழித்து சங்கரிக்கமாட்டாமையாலும் முழுதும் சங்கரித்தவிடத்து சங்காரக் கடவுளாகிய அவ்வொருவனே எஞ்சி நிற்றல் பெறப்படுதலானும் ஒடுங்கிய உல கங்கட்கு பெரியதோர் ஆதாரம், எஞ்சி நின்ற சங்காரக்கடவுளே யாதலானும் ஒடுங்கிய உலகத்தை மீளத்தோற்றுதலும் நிறுத்துதலும் செய்தலை அவனாலே நாம் பெற்றுக்கொள்ளுதும் (எ...று) (௩௫)

இறைவன் றொழில் மறம்,வீண், தன்னயம் என்னும் குற்றங்க ளுட்படாது அருளே எனக் கூறுகின்றது.

சொன்னவித் தொழில்க ளென்ன காரணந் தோற்ற வென்னின்
முன்னவன் விளையாட் டென்று மொழிதலு மாமு யிர்க்கு
மன்னிய புத்தி முத்தி வழங்கவு மருளான் முன்னே
துன்னிய மலங்க ளெல்லாந் துடைப்பதுஞ் சொல்ல லாமே.

(கொ-டு) முன்னவன் சொன்ன இத்தொழில்கள் தோற்றக் காரணம் என்ன என்னில் விளையாட்டு என்று மொழிதலுமாம் உயிர்க்கு முன்னே மன்னிய புத்தி முத்தி துன்னிய மலங்களெல்லாம் அருளால் துடைப்பதும் வழங்கவும் (அருளாற்) சொல்லலாமே.

(பொ-ரை) சங்காரக்கடவுள் இங்ஙனம் கூறிப்போந்த சிருட்டி முதலிய தொழில்களைச் செய்தற்குக் காரணம் யாதெனின் "காத்தும் படைத்தும் கரந் தும் விளையாடி" என்பது முதலிய திருவாக்குகள் பற்றி அத்தொழிற்குக் காரணம் விளையாட்டென்றலுமாம். விளையாட்டென்றதினால் சிறு மகார் விளையாட்டுப்போல் பயனற்ற வீண் விளையாட்டோ வெனின் அன்று. விளை யாட்டென்றதின் கருத்தென்னையோவெனின் "ஐயா நீ ஆட்கொண்டரு ளும் விளையாட்டின் உய்வார்களுய்யும் வகையெல்லாம் உய்த்தொழிந்தோம்" என்பது முதலிய திருவாக்குகள் பற்றி பெரும் பாரஞ்சுமத்தல் சாத்தனுக்கு விளையாட்டென்பதுபோல எளிதிற் செய்யப்படுதலை நோக்கியேயாம். அங் ஙனஞ் செய்வதும் தன்பயன் கருதியோ வெனின் அன்று. ஆன்மாக்களுக்கு பெத்தகாலத்துசுவர்க்காதி போகமும் பதமுத்திகளும் முத்திக்காலத்து மும்மலங் களும் நீங்குதலாகிய வீடுபேறும் பயத்தற் பொருட்டேயாம். அவ்வாறு செய் வதற்குத் தான் காரணம் யாதெனின் உயிர்கண்மேற் சென்ற கருணையே யாம். (எ...று) (௩௬)

அநுக்கிரகமாகிய தொழில்மட்டே மன்று சிருட்டி முதலிய ஏனைய நான்கு தொழில்களும் அருளே எனக் கூறுகின்றது.

அழிப்பிளைப் பாற்ற லாக்க மவ்வவர் கன்ம மெல்லாங்
கழித்திட னுகரச் செய்தல் காப்பது கன்ம வொப்பிற்
றெழித்திடன் மலங்க ளெல்லா மறைப்பருள் செய்தி தானும்
பழிப்பொழி பந்தம் வீடு பார்த்திடி னருளே யெல்லாம்.

(கொ-டு) அழிப்பு இளைப்பாற்றல் ஆக்கம் அவ்வவர் கன்மம் எல்லாம் கழித்திடல் காப்பது நுகரச் செய்தல் மறைப்பு கன்ம வொப்பில் மலங்களெல்லாம் தெழித்திடல் அருள் பந்தம் வீடு பார்த்திடின் எல்லாச் செய்தி தானும் அருளே பழிப்பு ஒழி.

(பொ-ரை) மேற்கூறிய முத்தொழில்களையும் ஐந்து தொழில்களாக விரித்துக் கூறவும்படும் அவற்றுள் சங்காரமாவது இளைப்பாற்றலாம். சிருட்டியாவது அவரவர் கன்மமுழுதும் கழியுமுகத்தால் மலபாகம் வரச்செய்தலாம். திதியாவது கன்மங்கழியுமாறு அதை நுகர்வித்தலாம். திரோபவமாகிய மறைப்பாவது இருவினை ஒப்பு வரச்செய்து மலங்களைத் தெளித்தலாம்; அதாவது அனுபவிக்கவேண்டிய வினையின் பயனை அனுபவிக்கும் முறைமையில் அதிலுள்ள குணங்குற்றம் தோன்றாதிருக்கும்படி மறைத்து அனுபவிக்கச் செய்து மலத்தைத் தேய்த்தல். அருளாகிய அனுக்கிரகமாவது பந்தம் விடுவித்தலாம். இவ்வாறு ஒவ்வொரு தொழிலும் ஒவ்வொரு பயன்தருதலால் ஆராயுமிடத்து ஐந்தொழிலும் அருட்செயலேயாம். இவற்றுள் சங்காரமும், மறைத்தலும் மறத்தொழிலே போலுமெனப் பழித்தலைச் செய்யற்க. (எ...று)

சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகம் என்னும் ஐந்து தொழில்களை சிருஷ்டி திதி சங்காரமென்னும் முத்தொழிலாகக் கூறுமிடத்து திரோபவத்தைத் திதியினுள்ளும் அனுக்கிரகத்தை சங்காரத்தினுள்ளும் அடக்கிக்கூறப்படும்.

இருவினை ஒப்பு:—மிகுந்த புண்ணியத்தின் பயனும் மிகுந்த பாவத்தின் பயனும் ஒருகாலத்து அனுபவிக்க வருங்கால் அவ்விரண்டும் ஒன்றோடொன்று முரணுதலின் திருவருட்சத்தி அவ்விரண்டனையும் அனுபவிக்கவொட்டாது தள்ளிவிடுமாதலின் அதுவே இருவினை ஒப்பென்பர் ஒருசாரர். அங்ஙனமாயினும் எஞ்சியவினையின் பயன் அனுபவித்துத் தீரவேண்டுதலின் அது இருவினை ஒப்

பாகாது. எல்லா நல்வினைப்பயனும் தீவினைப்பயனும் அனுபவித்தொழிதலே இருவினை ஒப்பென்பர் மற்றொரு சாரார். அங்ஙனமாயினும் அது மலசத்தியைக் கெடுக்காது ஆணவமலமுடைய விஞ்ஞானகலராக்குதலே யாதலின் அதுவும் இருவினை ஒப்பாகாது. இனி இருவினை ஒப்புத்தான் யாதெனின் ஆன்ம அறிவின்கண் நல்வினை தீவினைகளும் அவற்றின் பயனாகிய இன்பதுன்பங்களும் விருப்பு வெறுப்பின்றி ஒப்பத்தோன்றலேயாம். இதனால் நான் என்னும் ஜீவபோதமாகிய மலச்சேட்டைதேயும் ஆதலின் மலபரிபாகத்திற்கு உரிய இருவினை ஒப்பு இறுதியிற் கூறியதேயாம். (௩௭)

அநாதி முத்தசித்துருவென்னும் மூன்றாங் கூறுகூறத்தொடங்கி அக்கடவுளின் தடத்தவடிவம் அருவம் அருவுருவம் உருவமெனக் கூறுகின்றது.

அருவமோ வுருவா ரூப மானதோ வன்றி நின்ற
வுருவமோ வுரைக்குங் கர்த்தா வடிவெனக் குணர்த்திங் கென்னி
னருவமு முருவா ரூப மானது மன்றி நின்ற
வுருவமு மூன்றுஞ் சொன்ன வொருவனுக் குள்ள வாமே.

(கொ-டு) உரைக்கும் கர்த்தா வடிவு அருவமோ உருவாரூபம் ஆனதோ அன்றிநின்ற உருவமோ இங்கு எனக்கு உணர்த்து என்னின் சொன்ன ஒருவனுக்கு அருவமும் உருவாரூபம் ஆனதும் அன்றி உருவமும் நின்ற மூன்றும் உள்ளவாமே.

(பொ-ரை) இங்ஙனங் கூறிப்போந்த ஐந்தொழிற்செய்யு மிறைவனுக்கு வடிவம் இன்றிமுடியாமையின் அவ்வடிவம் அருவமோ அருவுருவமோ உருவமோ இம்மூன்றனுள் அவனுக்குரிய வடிவம் இதுவென இவ்விடத்து எனக்குணர்த்தவேண்டுமென்று வினவில் அநாதி முத்த சித்துருவென மேற்கூறப்பட்ட ஒருவனுக்கு அருவும் அருவுருவும் அவ்விரண்டுமின்றி நின்ற வுருவுமென மூன்று வடிவமும் உள்ளனவாம். (எ...று)

தடத்தமென்பது ஸ்தூலமாக அறியப்படுவது. (௩௮)

இனி இரண்டு செய்யுளால் இறைவனுக்குத் தடத்தவடிவமாகிய உருவத்திருமேனி உண்டேல் நம்மில் ஒருவனாமே என வினவுகின்றது.

நண்ணிடு முருவ மென்னி னமக்குள வுருவம் போலப்
பண்ணிட வொருவன் வேண்டு மிச்சையேற் பலருமிச்சை
கண்ணிய வுருவங் கொள்ளேம் யாம்பெருங் கடவு டானு
மெண்ணிய யோக சித்தர் போலுரு விசைப்பன் காணே.

வித்தக யோக சித்தர் வேண்டுருக் கொள்ளு மாபோ
லுத்தமன் கொள்வ னென்னி னவர்களி லொருவ னாவ
னத்தகை யவர்க ளெல்லா மாக்குவ தருளா லாங்கு
வைத்தது மாயை யென்னின் வடிவெலா மாயை யாமே.

(கொ-டு) உருவம் நண்ணிடும் என்னின் உருவம் நமக்கு உள போல பண்ணிட ஒருவன் வேண்டும் இச்சையேல் பலரும் இச்சை யாம் கண்ணிய உருவம் கொள்ளேம் பெருங் கடவுள் தானும் யோக சித்தர் போல் எண்ணிய உரு இசைப்பன்காணே வித்தக யோக சித்தர் வேண்டு உரு கொள்ளுமாபோல் உத்தமன் கொள்வன் என்னின் அவர்களில் ஒருவன் ஆவன் அத்தகை அவர்கள் எல்லாம் ஆக்குவது அருளால் ஆங்கு வைத்தது மாயை என்னின் வடிவெலா மாயை யாமே.

(பொ-ரை) இறைவனுக்கு உருவம் உண்டென்னில் உருவமெல்லாம் ஒருதன்மையவாகலின் உருவமுடைய நம்மனோர்க்கு உளதாகிய சுய இச்சை யின்றிய பரதந்தரம்போல முதல்வனுக்கு உருவம் உண்டாதற்கு ஒரு கர்த்தா உண்டெனப்பட்டு பரதந்திரமுளதாதல் வேண்டும். அஃதன்றி முதல்வன் நினைந்த வடிவங் கொள்ளுதலால் சுதந்தரமுடையனெனில் முதல்வனுக் குள தாகிய சுதந்தரம் நம்மனோர் பலர்க்கும் உருவமுடைய ஒற்றுமைபற்றி உளதா தல் வேண்டும். இனி நம்மனோர்க்கு கருதிய வடிவங்கள் எடுக்க முடியாம லும் யோகசித்தர் தான் கருதியதொரு வடிவத்தை எடுத்துக்கொள்ளுதலும் உண்மையின் அவ்யோகசித்தர்போலத் தான் கருதியதொரு வடிவத்தை இறை வன் எடுத்துக்கொள்வனெனின் அங்ஙனமாயினும் அவ்யோகசித்தரில் ஒருவ ராய் முடியும் அன்றியும் அவ்யோகசித்தர் தாம் நினைந்ததொரு வடிவத்தைக் கொள்வது முதல்வன் அருளாலன்றி முடியாமையானும் யோகசித்தர்களுக் குண்டாகிய உருவம் மாயாகாரியமாதலானும் யோகிகள் முதலிய நம்மனோர்க் கும் முதல்வனுக்குமுளதாகிய வேறுபாடு பெரிதாகலின் ஒப்புமை கூறுதல் பொருந்தாது. அங்ஙனமாயினும் உருவமெல்லாம் ஒரு தன்மையவாகிய மாயா காரியமேயாகலின் உருவத்தின் வேற்றுமையில்லாதவிடத்து வேறுபாட்டால் போந்த பயனென்னை. (எ...று) (௩௩) (௬0)

இறைவனுக்கு உருவத்திருமேனி உண்டு அதுகொண்டு நம் மில் ஒருவனாதலில்லை எனக் கூறுகின்றது.

மாயைதான் மலத்தைப் பற்றி வருவதோர் வடிவ மாகு
மாயவா ணவம கன்ற வறிவொடு தொழிலை யார்க்கு
நாயக னெல்லா ஞானத் தொழின் முத னண்ண லாலே
காயமோ மாயை யன்று காண்பது சத்தி தன்னால்.

(கொ-டு) ஆய ஆணவம் அகன்ற அறிவொடு தொழிலை ஆர்க்கும் நாயகன் எல்லா ஞானத் தொழில் முதல் நண்ணலாலே மலத்தைப் பற்றி வருவதோர் மாயைதான் வடிவமாகும் காயமோ மாயை அன்று சத்தி தன்னால் காண்பது (ஆகும்.)

மலத்தைப் பற்றி யென்பதை மலத்தைப் பற்றிக்கு என விரித்துரைக்க.

(பொ-ரை) நீ அங்ஙனங் கூறுதல் பொருந்தாது. வடிவத்தை உடையவர்களது ஏற்றத்தாழ்வால் வடிவங்களும் ஏற்றத்தாழ் வுடையனவேயன்றி தம்முள் ஒப்பனவாகா. அவ்வேற்றத்தாழ்வுகள் என்னையோவெனில் கூறுதும் யோகிகள் முதலிய நம்மனோர் எல்லாரும் மலத்தைப்பற்றிக் கிடக்கும் பசுக்கள் அதுவன்றியும் ஒன்றேயறிதலும் ஒன்றே செய்தலும் ஒன்றிலே முதன்மையாதலுமாகிய அற்ப ஞானத்தொழில் உடையராம். முதல்வன் பந்திப்பதாய அவ்வாணவமல நீங்கிய ஆன்ம அறிவிலே தங்கிநின்று உணர்த்தும் தொழிலுடையோனாகிய பசுபதி அதுவுமன்றி எல்லா அறிவும் எல்லாத் தொழிலும் எல்லா முதன்மையும் உடையன் இங்ஙனம் வடிவத்தையுடைய அங்கிகட்கு தம்முள் ஏற்றத் தாழ்வுகள் உண்மையின் அதற்கேற்ப மலத்தைப் பற்றிய பசுக்களுக்கு அம்மலத்தோடியை புடைத்தாய் ஏகதேச அறிவைச் செய்யும் மாயையே வடிவமாம். அனாதிமுத்த சித்துருவாகிய பசுபதிக்கு ஏகதேசத்தைச் செய்யும் மலத்தோடியை புடைய மாயாவடிவமன்று. அவனுக்கு மல நீங்கிய உயிர்க்கு வியாபக அறிவைச் செய்யும் சத்தியினாலேயே வடிவமாம். ஆதலின் அங்கங்களினும் தம்முள் ஏற்றத் தாழ்வுகளுண்டென்பது இனிது விளங்குதலால் அதனை அறியாது கூறுதல் அடாது. (எ...று) (சக)

இறைவனுக்கு உருவங்கொள்ளுதல் பொருந்தாது அருவங் கொள்ளுதலே பொருந்துமெனக் கூறுகின்றது.

சத்தியே வடிவென் றாலுந் தான்பரி ணாம மாகு
நித்தமோ வழியு மத்தா னின்மல னருவே யென்னி
லத்துவா மார்க்கத் துள்ளா னலனிவ னருமை தன்னைப்
புத்திகா னுடைய போல விருந்தனை புகலக் கேணீ.

(பொ-ரை) அங்ஙனஞ் சத்தியே வடிவாயினும் உருவமெல்லாம் கண்டிதப்பொருளாதலின் மாறுதலையடைந்து அழிவெய்தும் அவ்வாறழிவெய்தல் சிவசத்திக்குத் தகாமையால் அநாதிமுத்த சித்துருவாகிய முதல்வன் அருவப்பொருளாதலே அமை உடைத்தெனின் அருவப்பொருளாகிய ஆறத்துவாவையுங் கடந்த கடவுட்பொருளை அவ்வத்துவாக்களோடு ஒப்ப அருவமெனக் கூறுதல் பொருந்தாது. ஆயினும் இவ்விறைவன் தன்மையை புத்தியுடையாய் போலிருந்தவனே கூறுவாம். நீ கேட்பாயாக. (எ...று)

அத்துவா எனினும் வழி எனினும் ஒக்கும். அது கலை, மந்திரம், பதம், வன்னம், தத்துவம், புவனமென அறுவகைப்படும். பிரபஞ்சந் தோன்றுதலும் ஒடுங்குதலும் ஆன்மாக்கள் வினைகளை ஈட்டுதலும் இவ்வழியே யாதலின் வழியெனப்பட்டது. இதன் விபரம் முன்னர்க் கூறப்படும்.

இறைவனுக்கு அருவங்கொள்ளுதலும் அருவுருவங்கொள்ளுதலும் பொருந்தாதெனக் கூறுகின்றது.

உலகினிற் பதார்த்த மெல்லா முருவமோ டருவ மாகி
நிலவிடு மொன்றொன் றாகா நின்றவந் நிலையே போல
வலகிலா வறிவன் றானு மருவமே யென்னி லாய்ந்து
குலவிய பதார்த்தத் தொன்றாய்க் கூடுவன் குறித்திடாயே.

(கொ-டு) உலகினிற் பதார்த்த மெல்லாம் உருவமோடு அருவமாகி நிலவிடும் ஒன்று ஒன்று ஆகா அலகு இலா அறிவன் அருவமே என்னில் நின்ற தானும் அந்நிலையே போல குலவிய பதார்த்தத்து ஒன்றாய்க் கூடுவன் ஆய்ந்து குறித்திடாயே.

(பொ.ரை) உலகத்திற் காணப்பட்ட பொருள்களெல்லாம் உருவமும் அருவமும் அருவுருவமுமாய்க் காணப்படும். அவற்றுள் ஆகாய முதலிய அருவப்பொருள் உருவத்தின் இயல்புடையதாகாது. நிலமுதலிய உருவப்பொருள் அருவத்தின் இயல்புடையதாகாது. சந்திரன் முதலிய அருவுருவப்பொருள் அருவுமாகாது உருவுமாகாது. இங்ஙனம் ஆறத்துவாவுட்பட்ட பொருள்களெல்லாம் ஒன்று பிறிதொன்றின் இயல்புடையதாகமாட்டாது. ஆகலான் அநாதிமுத்த சித்துருவாகிய முதல்வனை அருவப்பொருளே எனின் நிலைபெற்ற அவனும் அப்பொருள்போல் பிறிதொன்றாகமாட்டாமை உடையனெனப்பட்டு பொருந்திய அவற்றுள் ஒருவனுப் முடியும். ஆகலான் நீ இதனை ஆராய்ந்தறிவாயாக. (எ...று)

சந்திரனுக்கு ஒருகலையென்று மிருக்கவும் அமாவாசையில் அறியமுடியாமையின் அருவம், மற்றைக்கலைகள் அறியப்படுதலின் உருவம், ஆதலின் அருவுருவமாம். (சரு)

இறைவனுக்கு உருவங்கோள்ளுதலால் மாயுதலையடைந்து அழிவெய்துதலாகிய குற்றமின்றெனக் கூறுகின்றது

பந்தமும் வீடு மாய பதபதார்த் தங்க ளல்லா
னந்தமு மாதி யில்லா னளப்பில னாத லாலே
யெந்தைதா னின்ன னென்று மின்னதா மின்ன தாகி
வந்திடா னென்றுஞ் சொல்ல வழக்கொடு மாற்ற மின்றே.

(கொ-டு) எந்தை தான் பந்தமும் வீடும் ஆய பத பதார்த்தங்கள் அல்லான் ஆதி அந்தமும் இல்லான் அளப்பிலன் ஆதலாலே இன்னன் என்றும் இன்னது ஆம் இன்னது ஆகி வந்திடான் என்றும் சொல்ல வழக்கொடு மாற்றம் இன்றே.

(பொ-ரை) அநாதிமுத்தசித்துருவாகிய இறைவன் சட்டுவீடென்னும் பதங்களையுடைய பசுபாசபதார்த்தங்களது இயல்புடையனல்லனாகலானும் ஆதியும் அந்தமும் இலனாகலானும் அவை இலனாகவே அளவைகட் கெட்டாதவனாகலானும் அருவம், உருவம், அருவுருவம் என்னும் முக்கூற்றுள் இன்னனுவனென்றுவது அம்முக்கூறும் படும்விருத்தி, பரிணாமம், விவர்த்தனம் என்பவற்றுள் ஒன்றிற்படுவன் படானென்றுவது கூறுதற்கு ஓர் ஆசங்கையுமில்லை. ஆசங்கை இன்மையின் அதற்கு மறுமொழியாகிய பரிகாரமுமில்லை- (எ...று)

விருத்தி, பரிணாமம் மேற்கூறப்பட்டிருக்கின்றன. விவர்த்தனம் ஒன்று பிறிதொன்றாய்த் தோன்றல் அதாவது கட்டை கள்ளனாய்த் தோன்றல் போல்வன. (சச)

இறைவன் உயிர்கள் மாட்டுவைத்த அருளினால்தான் நினைந்த வடிவங்கோள்ளுதலால் கன்மத்தால் உருவங் கோள்ளுவார்க்குப் போல குற்றமின்றெனக் கூறுகின்றது.

குறித்ததொன் றாக மாட்டாக் குறைவில னாத லானு
நெறிப்பட நிறைந்த ஞானத் தொழிலுடை நிலைமை யானும்
வெறுப்பொடு விருப்புத் தன்பான் மேவுத லிலாமை யானு
நிறுத்திடு நினைந்த மேனி நின்மல னருளி னாலே.

(கொ-டு) நின்மலன் அருளினாலே நினைந்த மேனி நிறுத்திடும்.

(பொ...ரை.) இறைவன் விகாரப்படுதற்குக் காரணமாகிய நினைந்ததொரு வடிவத்தை எடுத்துக்கொள்ளமாட்டாத குறைபாடிலனாதலானும் முறைமைப் பட ஏகதேச மாதற்குக் காரணமாகிய சிற்றுணர்வு சிறு செயல்களின்றிய நிறைந்த தொழிலுடைய ஞான நிலைமையனாதலானும் துடக்குறுதற்குக் காரண மாகிய விருப்பு வெறுப்புக்கள் தன்மாட்டுப் பொருந்தல் இல்லாதவனாகலானும் அவ்வுபாதிகள் இலனாகவே அக்குற்றங்களுக்குத் தூரனாய் அனாதிமுத்தசித்து ருவாகிய முதல்வன் மலநீங்கிய அறிவிலே தங்கிநின்று உணர்த்தும் அருளு டையனாய் நிற்றலின் தானினைந்ததொரு திருமேனியைத் தனதாகக் கொண் டருள்வன்.( எ...று) (சரு)

இறைவன் உருவங் கோள்ளுதலாற் போந்த பயன் கூறுகின்றது.

ஆரண மாக மங்க ளருளினா லுருவு கொண்டு
காரண னருளா னாகிற் கதிப்பவ ரில்லை யாகு
நாரணன் முதலா யுள்ள சுரர் நரர் நாகர்க் கெல்லாஞ்
சீரணி குருசந் தானச் செய்தியுஞ் சென்றி டாவே.

(கொ-டு) காரணன் அருளினால் உருவு கொண்டு ஆரணம் ஆகமங்கள் அருளானாகில் கதிப்பவர் இல்லையாகும்.

( பொ... ரை ) உயிர்க்கு தன்னுடம்பைத் தொழிற்படுத்துதற்கு வேறொ ருவடிவம் வேண்டாதவாறுபோல அனாதிமுத்தசித்துருவமாகிய முதல்வனுக்குத் தன் வடிவமாகிய உலகத்தை தொழிற்படுத்துதற் பொருட்டு வேறொரு வடி வம் வேண்டப்படுவதன்று ஆயினும் அம்முதல்வன் கருணையினால் திருவுருக் கொண்டு வேதாகமங்களை முறைப்பட அருளிச் செய்யவில்லையாயின் நேராக வும் பிறிதொரு வடிவத்தில் மறைந்து நின்றும் அறிவித்தால் அறியுந்தன்மை யுடைய பிரளயாகலர் சகலரென்னும் உயிர்வர்க்கங்கள் பொருளியல் புணர்ந்து வீடு பேறடைதல் இல்லை யாகும் அதுவன்றி திருமால் முதலிய தேவர்க் கும் மானுடர்க்கும் நாகர் முதலியோர்க்கும் மிக்க சிறப்புடைய குரு பரம்பரை யின் வைத்து அருளுதலும் செல்லாவாம் ஆதலின் திருமேனி உறுதியாக வேண்டப்படும். ( எ...று )

விஞ்ஞானகலர், பிரளயாகலர் சகலர் என்று ஆன்மவர்க்கம் மூன்று வகைப்படும். அவை முன்னர் எட்டாஞ் சூத்திரத்திற் கூறப்படும் (சசு)

இறைவனுக்கு தனு உண்டாகவே வாக்கு மனாதீதனென்றல் பொருந்தா தென்பாரைமறுத்து ஆன்மாக்கள் மலத்தினால் கொள்ளும் நியதியான உருவை நூல்வழியாகக் கண்டு வாக்காற் சொல்லவும் மனத்தாற் சிந்திக்கவுங் கூடுதல்போல இறைவன் அருளாற் கொள்ளும் நினைந்ததொரு மேனிக்கு கூடாதாகலின் சிந்திதனாயினும் வாக்குமனாதீதனென்றல் பொருந்துமெனக் கூறுகின்றது.

உருவருள் குணங்க ளோடு முணர்வரு ளுருவிற் றோன்றுங்
கருமமு மருளா ரன்றன் கரசர ணாதி சாங்கந்
தருமரு ளுபாங்க மெல்லாந் தானரு டனக்கொன் றின்றி
யருளுரு வுயிருக் கென்றே யாக்கினா னசிந்த னன்றே.

(கொ-டு) அரன்றன் உரு அருள் தரும் கரசரணாதி சாங்கம் அருள் உணர்வு அருள் உருவில் தோன்றும் கருமமோடும் குணங்களும் அருள் உபாங்கம் எல்லாம் தான் அருள் அருளுரு உயிருக்கென்றே தனக்கு ஒன்று இன்றி ஆக்கினன் அசிந்தன் அன்றே.

(பொழி) அரன் திருவடிவம் அருளாதலால் தரப்பட்ட திருக்கை திருவடி முதலிய பிரத்தியங்கங்களும் அருள் வடிவேயாம். உயிர்கட்கு அறிவைக்கொடுப்பதாகிய அத்திருவுருவிற் றோன்றுகின்ற தொழில்களும் வாய்மை முதலிய குணங்களும் ஆகிய சாங்கங்களும் அருள் வடிவேயாம். உபாங்கமாகிய புவன போகங்களும் அருள்வடிவேயாம். இவ்வருளாகிய வடிவெல்லாம் உயிர்களின் பொருட்டன்றி சிறிதுந்தன் பொருட்டுக் கொள்வோனல்ல னாதலின் இவ்வடிவம் பற்றி சிந்திதனாயினும் அசிந்திதனே. (எ...று.)

அங்கம்—சிரசு முகம் இருதயம் என்னு மூன்றுமாம்.

பிரத்தியங்கம்—நேத்திரம் நாசி கண்டம் மார்பு தோள் நாபி கை கால் விரல் முதலிய உறுப்புக்களாம்.

சாங்கம்—அங்கத்துடன் கூடியது. அதாவது சூலமுதலிய பத்து. அவற்றுள்—சூலம் ஆரணி சென்னி ரோதயத்திரி ஆகிய முத்தொழிற்குரிய மூன்றுசத்திகளையும் பரசு சத்தியத்தையும் வாள் பிரதாபத்தையும் வச்சிரம் தன்னையாவது தன் செயலையாவதுபிறரால் பேதிக்கப்படாமையையும் அபய முத்திரை அநுக்கிரஹத்தையும் நாகம் சுத்தமாயையையும் பாசம் அதோமாயையும் அங்குசம் விரிவையும் கண்டை சத்தநாதத்தையும் அக்கினி பாசசங்காரத்தையுங்குறிக்கும்.

உபாங்கம்—அங்கத்தின் சமீபத்திலிருப்பது. அதாவது வஸ்திரம் மாலை ஆபரணம் ஆசனம் முதலியன. அவை இவ்விடத்து புவனபோகங்களைக் குறித்து நின்றன. (சஎ)

இறைவன் கொள்ளும் உருவத் திருமேனியின் பேதங்களும் அவற்றின்றொழில்களும் இவையென நூற்பிரமாணத்தாற் கூறி அசிந்திதனென்பதனை வலியுறுத்துகின்றது:

உலகினை யிறந்து நின்ற தரனுரு வென்ப் தோரா
ருலகவ னுருவிற் றோன்றி யொடுங்கிடு மென்று மோரா
ருலகினுக் குயிரு மாகி யுலகுமாய் நின்ற தோரா
ருலகினி லொருவ னென்ப ருருவினை யுணரா ரெல்லாம்.

(கொ-டு) அரன் உரு உலகினை இறந்து நின்றது என்பது ஓரார் அவன் உருவில் உலகு தோன்றி ஒடுங்கிடும் என்றும் ஓரார் உலகினிற்கு உயிருமாகி (நின்றது) ஓரார் உலகும் ஆய் நின்றது ஓரார் உருவினை உணரார் எல்லாம்உலகினில் ஒருவன் என்பர்.

(பொ—ரை) இறைவன் வடிவம் உடையனாயினும் வாக்கு மனாதீதனென்பதற்கு உருத்திரன்வடிவம் உலகினைக்கடத்து நிற்றலால் வேதத்துள்உருத்திரன் உலகாதீதனென்று கூறுஞ்சுருதியினையும் உணரார். அவ்விறைவன் திருவுருவில் உலகந்தோன்றிஒடுங்குமாதலால் உலககாரணனென்றுகூறுஞ் சுருதியினையும் உணரார். உலகிற்கு உயிராய் நிற்றலால் உலகத்திற்கு அந்தரியாமி என்று கூறுஞ் சுருதியினையும் உணரார். உலகமாய் நிற்றலால் உலகரூபி என்று கூறுஞ் சுருதியினையும் உணரார். இங்ஙனங் கூறுஞ் சுருதிகள் சான்றாகவும் திருமேனியின் இயல்புணராதவர்கள் அச்சிவபிரானை உலகத்திலுள்ளார் கூறுங் கடவுளரின் ஒருவனென்பர். (எ—று) (சஅ)

இதுவுமது.

தேவரி லொருவ னென்பர் திருவுருச் சிவனைத் தேவர்
மூவராய் நின்ற தோரார் முதலுருப் பாதி மாத
ராவது முணரா ராதி யரியயற் கறிய வொண்ணா
மேவுரு நிலையு மோரா ரவனுரு விளைவு மோரார்.

(கொ-டு) அரிஅயற்கு அறிய வொண்ணா ஆதி மேவு உரு நிலையும் ஓரார் தேவர் மூவர் ஆய் திருவுரு நின்றது ஓரார் அவன் உரு விளைவும் ஓரார் முதல் உருப் பாதி மாதர் ஆவதும் உணரார் சிவனை தேவரின் ஒருவன் என்பர்.

(பொ—ரை) மேற்கூறிய நான்கு சுருதிகளையும் முறையே உறுதிப்படுத்துவனவாய அரியும் அயனும் அடிமுடிதேட அறியாவண்ணம் உயர்ந்த முதல்வன் திருவுருவின் நிலைகூறும் புராண வசனத்தினையும் உணரார். மும்மூர்த்திகளுந் தன்னுறுப்பிற்றோன்றி நின்ற திருவுருவின் இயல்புகூறும் புராணவசனத்தினையும் உணரார். அவ்விறைவன் வடிவிலே விளைந்த வண்ணமே உலகிற்கு விளைவுகூறும் புராணவசனத்தினையும் உணரார். பாதி உருவுமையோடு கூடிய அர்த்த நாரீசுவர வடிவு கூறும் புராண வசனத்தினையும் உணரார். இங்ஙனங் கூறும் புராணவசனங்கள் சான்றாகவும் இவ்வுண்மை யறியாதவர் அச்சிவபிரானை ஏனைக்கடவுளரின் ஒருவனென்பர். (எ—று)

வடிவத்திற் பாதிசத்தி பாகமாயிருப்பது சிவபெருமான் ஒருவனுக்கேயன்றி ஏனைய கடவுளருக்குக் கிடையாது. உண்டென்பதற்குப் பிரமாணமுமில்லை. (சச)

உருவத் திருமேனிகளின் தொழில்களின் பயனிவை யெனக்கூறி அசிந்திதனென்பதனை வலியுறுத்துகின்றது.

போகியா யிருந் துயிர்க்குப் போகத்தைப் புரித லோரார்
யோகியா யோக முத்தி யுதவுத லதுவு மோரார்
வேகியா னற்போற் செய்த வினையினை வீட்ட லோரா
ராகியா மூடரெல்லா மும்பரி னொருவ னென்பர்.

(கொ-டு) வேகி ஆனற்போல் செய்த வினையினை வீட்டல் ஓரார் என்றதின் பின்னாக யோகியாய் என்ற இரண்டா மடியை வைத்து உரைக்க.

(பொ—ரை) முதல்வன் கொண்ட திருமேனிகள் போக வடிவம், கோர வடிவம், யோக வடிவமென முத்திறப்படும். அவற்றுள் போக வடிவம் உயிர்கட்கு போகம் புரிதற் பொருட் டென்பதனையும் உணரார். கோரவடிவம் உயிர்கள் செய்த வினையினைக் கெடுத்தற் பொருட் டென்பதனையு முணரார். யோக வடிவம் உயிர்கட்கு யோக முத்தி உதவுதற் பொருட் டென்பதனையு முணரார். இவ்வாறு திருமேனி கொள்ளும் முறைமையினை ஆராய்ந் தறியும் வலியில்லாரனைவரும் அம்முதல்வனை தேவரில் ஒருவனென்பர். (எ...று) (௫௦)

அங்ஙனந் திருமேனி கொள்ளுதல் உயிர்களின் பொருட்டாதலால் அசிந்திதனே என வலியுறுத்துகின்றது.

ஒன்றொடொன் றொவ்வா வேட மொருவனே தரித்துக் கொண்டு
நின்றிலா னுலக நீங்கி நின்றனனென்று மோரா

ரன்றியவ் வேட மெல்லா மருள்புரி தொழி லென் றோரார்
கொன்றது வினையைக் கொன்று நின்றவக் குணமென் றோரார்.

(கொ-டு) ஒன்றொடு ஒன்று ஒவ்வா வேடம் ஒருவனே தரித்துக்கொண்டு நின்றலால் அன்றி(ய) அவ்வேட மெல்லாம் அருள் புரி தொழில் என்று ஓரார் கொன்றது வினையைக் கொன்று நின்ற அக்குணம் என்று ஓரார் உலகம் நீங்கி நின்றனன் என்றும் ஓரார்.

(பொ-ரை) அவ்வாறு போக வடிவம், கோர வடிவம், யோக வடிவமாய்த்தம்முள் மாறுபட்ட பலவடிவம் ஒருவனே தரித்துக்கொண்டு நிற்றலால்மாறுபட்ட அப்பல வடிவங்களும் மேற் கூறிய வாறு போகமும், வீடும், யோகமும் உதவுவதாகிய அநுக்கிரகம் ஒன்றற்கே ஏதுவா மென்பதனையு முணரார். கொல்லுதலாகிய தீமை செய்வது வினையைக் கெடுத்து நன்மை பயத்தலாகிய நிலைபெற்ற குணமென்பதனையு முணரார். இங்ஙனம் உலகத்தில்வைத்து அறியப்படாத அதிசய நிலையன் என்பதனையு முணரார். ஆதலின் இவ்வதிசய நிலையும் அசிந்தித னென்பதற்கு சான்று. (எ...று) (௬௧)

இறைவன் திருமேனிகளும் அவற்றின் தொழில்களும் உயிர்களின் பொருட்டே என்பதை அநுபவத்தில் வைத்துக் காட்டி அசிந்தித னேன்பதனை வலியுறுத்துகின்றது.

நாயகன் கண்ண யப்பா ளுயகி புதைப்ப வெங்கும்
பாயிரு ளாகி மூடப் பரிந்துல கினுக்கு நெற்றித்
தூய நேத் திரத்தி னாலே சுடரொளி கொடுத்த பண்பிற்
றேயமா ரொளிக ளெல்லாஞ் சிவனுருத் தேச தென்னர்.

(கொ-டு) நாயகி நயப்பால் நாயகன் கண் புதைப்ப எங்கும் பாய் இருள் ஆகி மூட பரிந்து உலகினிற்கு தூய நெற்றி நேத்திரத்தினாலே சுடர் ஒளிகொடுத்த பண்பின் தேயம் ஆர் ஒளிக ளெல்லாம் சிவன்உருத் தேசது என்னர்.

(பொ-ரை) முதல்வி திருவுளம் மகிழ்ச்சியால் முதல்வனது திருக்கண் புதைத்த திருவிளையாட்டின் கண் எவ்விடத்தும் பரவிய இருளாகி மூடவும் கிருபையினால் உலகத்திலுள்ளார்க்கு பரிசுத்தமாகிய நெற்றிக் கண்ணால் மிகுந்த பிரகாசத்தினை தந்தருளிய தன்மையினானே உலகின் கண்ணுள்ள ஒளிகளெல்லாம் அச் சிவ பெருமான் திருமேனிப் பிரகாசமே என்பதனை. உணரார். ஆதலின் இறைவன் கொள்ளும் அவ்வேட மெல்லாம் அருளைத் தருகின்ற தொழிலென்பதற்கு இந் நிகழ்ச்சியே சான்று. (எ--று) (௬௨)

தொழிலுக்கு வேடம்உறுதியாய் வேண்டப் படுமெனக் கூறுகின்றது.

கண்ணுதல் யோகி ருப்பக் காமனின் றிடவேட் கைக்கு
விண்ணுறு தேவ ராதி மெலிந்தமை யோரார் மாறு
னெண்ணிவேண் மதனை யேவ வெரிவிழித் திமவான் பெற்ற
பெண்ணினைப் புணர்ந்து யிர்க்குப் பேரின்ப மளித்த தோரார்

(கொ-டு) கண்ணுதல் யோகு இருப்பவேட்கைக்கு காமன் நின்றிட.

(பொ-ரை) நெற்றிக் கண்ணுடைய சிவ பெருமான் யோக நிலையிலிருந்த விடத்து காமத்திற்குக் காரணனாகிய மன்மத னிருக்கவும் மேலிடத்திலுள்ள தேவர்கள் முதலியோர் காம வேட்கையின்றி மெலிவுற்றதும் அறியார். விட்டுணு அம் மெலிவு கெடும்படி கருதி இறைவனிடத்து மன்மதனை யேவுதல் செய்ய அம் மன்மதனை நெற்றிக் கண்ணை விழித் தெரித்து இமையமலை அரையன் பெற்ற உமாதேவியை மணந்து அவ்வுயிர்கட்கு பேரின்பத்தினை அருளிச் செய்ததுமுணரார். ஆதலின் பல வேறு வகைப் பட்ட அருள்தரு தொழிலும் அவ் வேடத்தை இன்றி முடியாமைக்கு இந் நிகழ்ச்சியே சான்று. (எ...று) (௩௫)

இறைவன் உருவத் திருமேனி கொள்ளாமலே இத் தொழிலனைத்தும் செய்யக் கூடாதோ வென்னும் ஐயத்தை நீக்கி இறைவனுக்கு உருவத் திருமேனி இன்றியமையாது வேண்டப்படு மென்று கூறுகின்றது.

படைப்பாதித் தொழிலும் பத்தர்க் கருளும்பா வனையு நூலு
மிடப்பாக மாத ராளோ டியைந்துயிர்க் கின்ப மென்று
மடைப்பானு மதுவு முத்தி யளித்திடும் யோகும் பாசந்
துடைப்பானுந் தொழிலு மேனி தொடக் கானேற் சொல்லொ ணா[தே.

(கொ-டு) படைப்பு ஆதித்தொழிலும் பத்தர்க்கு அருளும் பாவனையும் உயிர்க்கு என்றும் இன்பம் அடைப்பானும் அதுவும் நூலும் மாதராளோடு இடப்பாகம் இயைந்து முத்திஅளித்திடும் யோகும் பாசம் துடைப்பானும் தொழிலும் மேனிதொடக்கானேல் சொல்ல வொணாதே.

(பொ-ரை) முன் கூறிப் போந்தபடி உபதேச மாத்திரைக்கே யன்றி படைப்பாகிய முதற் றொழிலுக்கும் வாதுளாகமத்திலோதியவாறே அசையும் பொருளும் அசையாத பொருளுமாகிய உலகங்கள் முதல்வனது திருமேனி

யில் ஒவ்வோருருப்புக்களினின்று தோன்றுமாறு செய்ய வேண்டுமாதலானும் பக்தர்களுக்கு இருவினை ஒப்பு வந்த விடத்து அநுக்கிரகத்தின் பொருட்டு செய்யும் பாவனையாகிய மறைத்தற்றொழிற்கும் ஊன நடன மியற்றவேண்டுமாதலானும் உயிர்கட்கு எக்காலத்தும் இன்பத்தைச் செய்வதாகிய திதிக்கும்வேதாகமங்களை அருளிச்செய்யும் அருளாகிய உமாதேவியோடு இடப்பாகத்தே பொருந்த வேண்டுமாதலானும் முத்தியளிப்பதாகிய அநுக்கிரகத்திற்கும் நிட்டையிருந்து காட்ட வேண்டுமாதலானும் 'பாச நீங்குதலாகிய சங்காரத்தொழிற்கும் தோன்றினமுறையே அவ் அவ்வுறுப்புகளில் ஒடுக்க வேண்டுமாதலானும் இவற்றிற்கும் அவ்வுருவத் திருமேனி இன்றியமையாது வேண்டப்படும். (எ...று)

நடனம்—ஊன நடனம், ஞான நடனமென்றிரு வகைப் படும். அவற்றுள் சிருட்டி, திதி, சங்காரம் அநுக்கிரகமென்னும் நான்கும் அறிவித்தற்றொழிலா யிருத்தலின் ஞான நடன மெனவும், திரோபவம் மறைத்தற்றொழிலா யிருத்தலின் ஊன நடனமெனவும் கூறப்படும். (௫௪)

இறைவனுக்கு உருவத்திருமேனி உண்டாகவே அவ்வியைபு பற்றி அருவத்திருமேனியும் அருவுருவத்திருமேனியும் உண்டென்றும்அவையும் கருணையே என்றுங் கூறுகின்றது.

உருமேனி தரித்துக் கொண்ட தென்றலு மருவி றந்த
வருமேனி யதுவுங் கண்டோ மருவுரு வான போது
திருமேனி யுபயம் பெற்றோஞ் செப்பிய மூன்று நந்தங்
கருமேனி கழிக்க வந்த கருணையின் வடிவு காணே.

(பொ-ரை) மேற்கூறியவாறு உருவத்திருமேனி தரித்துக்கொண்டதென்ற மாத்திரையால் உருவமெனப்படுந் தூலப்பொருட்கெல்லாம் அருவமெனப்படுஞ் சூக்கும அவத்தை உண்டென்பது துணிபாதலின் அச்சற்காரிய வாதத்தின் இயல்புபற்றி உருவமொடுங்குதற்குக் காரணமாகிய அருவத்திருமேனியது உண்மையுங் கண்டாம். அவ்வருவமெனப்படும் சூக்குமப்பொருள் பின் உருவமெனப்படும் தூல அவத்தையெய்தும் பொழுது அவ்விரண்டிற்கும் பொதுவாகியதொரு அவத்தையுமுண்டாமாதலின் அதுபற்றி அருவுருவத்திருமேனியது உண்மையும் பெற்றாம். திருமேனி எல்லாம் ஒரு தன்மையவாகலின் இங்ஙனம் கூறிய மூன்று திருமேனியும் நமது பிறவிக்கே துவாகிய மாயையினுருவை ஒளித்தற்கு முதல்வன் கருணையினாற் கொண்டவடிவே. ()

இறைவனுக்கு கருணைபாற் கொள்ளும் நினைந்தவொருவடிவமேயன்றி எவற்றுடனும் கலந்து உடனாய் நிற்குமேதுவால் அத்து

வாக்களும் வடிவமென்று உபசரித் துரைக்கப்படு மெனக் கூறுகின்றது.

அத்துவா மூர்த்தி யாக வறைகுவ தென்னை யென்னி
னித்தனுய் நிறைந்த வற்றி னீங்கிடா நிலைமை யானுஞ்
சித்துட னசித்திற் கெல்லாஞ் சேட்டித னுத லானும்
வைத்ததா மத்து வாவும் வடிவென மறைக ளெல்லாம்,

(கொ-டு) மறைகள் எல்லாம் அத்துவாமூர்த்தியாக அறைகுவது என்னை என்னின் நிறைந்து அவற்றின் நீங்கிடா நிலைமையானும் நித்தனுய் சித்துடன் அசித்திற்கு எல்லாம் சேட்டிதன் ஆதலானும் அத்துவாவும் வடிவுஎன வைத்தது ஆம்.

(பொ-ரை) இவ்விடத்துக் கூறியவாற்றல் முதல்வனுக்கு கருணையினுல் கொள்ளும் வடிவமேயன்றி மாயாவடிவமில்லையாயின் ஆகமங்களிலெல்லாம் அத்துவாக்களாறும் முதல்வனுக்கு வடிவமென்று கூறுதலெதுபற்றியெனின் முதல்வன் அவ்வத்துவாக்கள் முழுதினும் நிறைவுற்றுக் கலந்து எல்லாமாகி நிற்றலானும் அவ்வத்துவாக்கள் அல்லனுய் நிற்றலானும் சடசித்துக்களையெல்லாம் இயக்கி உடனுமாய் நிற்றலானும் அம்மூவகை இயல்புடைய முதல்வனுக்கு அம்முதல்வனது திரோதாண சக்தியின் சம்பந்தத்தால் அத்துவாவும் வடிவமென உபசரித்துக்கூறப்படும்- (எ-று) (நிசு)

இரண்டு செய்யுளால் இறைவனுக்கு அத்துவாக்களுள்ளும் மந்திர வடிவஞ் சிறந்ததென்பதற்கு ஏது கூறப்படுகின்றது.

மந்திர மத்து வாவின் மிகுத் தொரு வடிவ மாகத்
தந்ததே னரனுக் கென்னிற் சகத்தினுக் குபாதா னங்கள்
விந்துமோ கினிமான் மூன்று மிவற்றின்மே லாகி விந்துச்
சிந்தையா ரதீத மான சிவசத்தி சேர்ந்து நிற்கும்.

சுத்தமாம் விந்துத் தன்னிற் றேன்றிய வாத லானுஞ்
சத்திதான் பிரேரித் துப்பின் றனதிட் டித்துக் கொண்டே
யத்தினற் புத்தி முத்தி யளித்தலா லரனுக் கென்றே
வைத்தவா மந்தி ரங்கள் வடிவென மறைக ளெல்லாம்

(கொ-டு) அரனுக்கு அத்துவாவின் மந்திரம் ஒருவடிவமாக மிகுத்து தந்தது ஏன் என்னின் சகத்தினுக்கு உபாதானங்கள் விந்து மோகினி மான் மூன்

றும் இவற்றின் மேலாகி விந்து சிந்தை ஆர் ஆதீதம் ஆன சிவசத்திசேர்ந்து நிற்கும் சுத்தம் ஆம் விந்துத்தன்னில் தோன்றிய ஆதலானும் சத்திதான் பிரேரித்து பின்தான் அதிட்டித்துக்கொண்டே அத்தினுல் புத்தி முத்தி அளித்தலால் மறைகள் எல்லாம் அரனுக்கு மந்திரங்கள் வடிவுஎன வைத்தஎன்றே ஆம்

(பொ ரை) முதல்வனுக்கு அத்துவாக்களுள்ளும் மந்திர வடிவத்தைஒப்பற்ற வடிவமாகச் சிறந்தெடுத்தோதிய தென்னையெனின் உலகிற்கு முதற்காரணங்கள் சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதிமாயை எனமூன்றாகும். இம்மூன்றனுள் மேலாகிய சுத்தமாயையின் கண் மனத்தால் நினைப்பதற்கு அருமையாகிய அதீதமெனப்படும் சிவசத்தி சேரப்பட்டு நிற்றலானும் சுத்தமாயையாகிய அவ்விந்துவில் மந்திரங்கள் முதலாவதாய்த்தோன்றிய தலைமையுடையனவாதலானும், அம்மந்திரங்களை சாதகராவார் கணிக்குமாறு அச்சிவசத்தி செலுத்தி கணித்தபின் பயன்கொடுத்தற்பொருட்டு அம்மந்திரங்களை வாயிலாகக்கொண்டு கணித்த அதனால் போகம் வீடு பேறுகளாகிய பயன் கொடுத்தலானும் அவைபற்றி ஆகமங்களிலெல்லாம் முதல்வனுக்கு மந்திரவடிவம் விசேட உரிமையாகக் கூறியனவேயாம். (எ-று) (௫எ)(௫அ)

இறைவனுக்கு மந்திரவடிவுள்ளும் பஞ்சப் பிரம மந்திரம் சிறந்ததென்பதற்கு ஏது கூறுகின்றது.

மந்திர மதனிற் பஞ்ச மந்திரம் வடிவ மாகத்
தந்திரஞ் சொன்ன வாறிங் கென்னனிற் சாற்றக் கேணீ
முந்திய தோற்றத் தாலு மந்திர மூலத் தாலு
மந்தமில் சத்தியாதிக் கிசைத்தலு மாகு மன்றே

(கொ.டு) தந்திரம் மந்திரம் அதனில் பஞ்ச மந்திரம் வடிவமாக இங்கு சொன்னவாறு என்எனின் சாற்றநீகேள் முந்தியதோற்றத்தாலும் மந்திரமூலத்தாலும் அந்தம் இல் ஆதிசத்திக்கு இசைத்தலும் ஆகும் அன்றே.

(பொ-ரை) ஆகமங்களில் இறைவனுக்கு மந்திரவடிவுள்ளும் பஞசப்பிரம மந்திர வடிவத்தை ஒப்பற்ற வடிவமாகச் சிறந்தெடுத்தோதிய தென்னையெனின் கூறுதும் நீ கேட்பாயாக. அப்பஞ்சப் பிரமமந்திரம் ஏனையமந்திரங்கட்கெல்லாம் முற்படத்தோன்றியதானும் மூலமாதலானும் அம்மந்திரங்களைச் செலுத்தி நிற்கும் அழிவில்லாத ஆதியாகிய திரோதான சத்திக்கு முற்படப்பொருந்துவதாகிய வடிவாதலானும் என்க. (எ-று) (௫௯)

இரண்டாமதிகரணம் முடிந்தது.

# மூன்றுமதிகரணம்.

## தான் முதலென்பது.

அரனுடைய சத்தி ஒவ்வொன்றே பிரமனாதியே ரிடத்து நிற்ற லால் அரனே முதலெனவும் அவ்வரனுக்கு பிரமனாதியோர் இன்றி யமையாது வேண்டப்படுவரெனவும் கூறுகின்றது.

*அயன்றனை யாதி யாக வரனுரு வென்ப தென்னை*
*பயந்திடுஞ் சத்தியாதி பதிதலாற் படைப்பு மூல*
*முயன்றன ரிவரே யாயின் முன்னவ னென்னை முற்று*
*நயந்திடு மவனி வர்க்கு நண்ணுவ தொரோ வென்றாமே.*

(கொ-டு) இவரே முயன்றனர் எனவும் ஒரோ ஒன்று நண்ணுவது ஆமே எனவும் கூட்டுக.

(பொ-ரை) பிரமாவினுடைய அழகிய உருவம் விட்டுணுவினுடைய உருவமுதலியவற்றையும் அரனுருவோடொத்த வுருவாக வைத்து வேதாகமங் களில் அவரவர் எல்லையளவும் *அத்துவநியாசம் ‡ மந்திரநியாச முதலாயின விதித்தலில் அரனாகிய சங்காரக் கடவுளோடொப்ப அவரும் முதல்வராவான் போலுமென மலைய வேண்டாம். படைப்பாதி தொழில்செய்யும் ஜெனனி முதலிய சிவசத்திகள் ஒரோ ஒன்று பிரமனாதியோர் மாட்டு பதிந்துநின்று செலுத்துதலால் அச்சத்தி பதிந்திருக்கு மியல்புபற்றி வேதாகமங்களில் அரனோ டொப்ப உபசரித்து ஓதப்பட்டன. சத்தி பதிந்திருக்கு மதனால் படைப்பாதி தொழிலை அயன் அரிமுதலாயினரே முதல்வ னருளின்றியும் தாம் தாம் நினைந்தவாறு செய்வரென்று கூறின் முதல்வன் எதற்காக வேணடும் வேண் டுவதின்றாம். ஆகலின் அமைச்சர் முதலாயினர்க்கு அரசனையின்றிச் செல் லாமைபோல அயனரி முதலாயினர்க்கு அரனருளையின்றிச் செல்லாது ஆயின் ஐந்தொழிலுஞ் செய்யும் அம்முதல்வன் அத்தொழிலனைத்துந் தான் செய்யாது அயனரிமுதலாயினர்க்கு ஒவ்வொரு தொழிலியற்றச் செய்தலின் அரசனுக்கு அமைச்சர் முதலாயினர் போல முதல்வனுக்கு அயனரிமுதலாயினரும் வேண் டப்படுவர். (எ...று) (௬0)

சிருட்டியாதிபல சத்திகள் உளவெனவே அச்சத்திகளையுடைய சத்தன் பலவாமெனப்பட்டு அநேகேசுர வாதமாகாதா என்பாரை

* அத்துவநியாசம் - அத்துவசோதனை. ‡ மந்திரநியாசம் - மந்திர வைப்பு.

மறுத்து உவமை முகத்தால் சிவசத்தி ஒன்றின் தடத்தமே பல சத்திகளாதலின் அரன் ஒருவனே எனக் கூறுகின்றது.

சத்திதான் பலவோ வென்னிற் றானொன்றே யநேக மாக
வைத்திடுங் காரி யத்தான் மந்திரி யாதிக் கெல்லா
முய்த்திடு மொருவன் சத்தி போலர னுடைய தாசிப்
புத்திமுத் திகளை யெல்லாம் புரிந்தவ னினைந்த வாறும்.

(கொ-டு) சத்திதான் பலவோ என்னின் ஒருவன் சத்தி மந்திரியாதிக்கு எல்லாம் உய்த்திடும்போல் அரனுடைய தாகி தான் ஒன்றே காரியத்தால் அநேகமாக வைத்திடும் புத்திமுத்திகளை யெல்லாம் புரிந்து அவன் நினைந்தவாறு ஆம்.

(பொ-ரை) மேற்கூறியவாறு இறைவனுக்கு சத்திகள் அநேகமோ வென்றிடின் அன்று அரசன் சத்தி ஒன்றே அமைச்சர், படைத்தலைவர், தண்டக்காரர் முதலாயினோர் மாட்டுநின்று செய்யும் காரியவேறுபாட்டால் பலவேறு வகைப்பட்டாற் போல சிவசத்தி ஒன்றே பிரமன் முதலாயினோர் மாட்டுநின்று செய்யுங் காரிய வேறுபாட்டால் ஜெனனி முதலியவாய் பலவேறு வகைப்படும். ஆயினும் சிவசத்தி ஒன்றேயென்பதும் அதுவே பல கடவுளர் மாட்டுநின்று நடாத்துமென்பதும் அமைச்சர் முதலாயினோர் எவை எவை செய்யினும் அரசன் நினைந்தவாறன்றி ஆகாமைபோல போகமோட்சங்களெல்லாம் கருணையினால் அவ்வரன் நினைந்தவாறின்றி ஆகாமையின் வைத்தறியப்படும். (எ...று)

அரன் நினைந்தவாறன்றி யாகாமையை தக்கன் வேள்வி மார்க்கண்டன் வாழ்நாள் பாற்கடலில் விடத் தோற்றரவு முதலியவற்றால் அறிக. (சுக)

மேல் சிவசத்தியின் தடத்தங் கூறினமையால் அச்சிவசத்தியின் சொரூபங் கூறுகின்றது.

சத்திதன் வடிவே தென்னிற் றடையிலா ஞான மாகு
முய்த்திடு மிச்சை செய்தி யிவைஞானத் துளவோ வென்னி
னெத்திற ஞான முள்ள தத்திற மிச்சை செய்தி
வைத்தலான் மறைப்பின் ஞானன் மருவிடுங் கிரியை யெல்லாம்.

(கொ-டு) சத்திதன் வடிவுஏது என்னின் தடையிலா ஞானமாகும் (தடைசெய்யும் ஞானம்) உய்த்திடும் இச்சைசெய்தி இவைஞானத்து உளவோ என்னின் ஞானம் எத்திறம் உள்ளது அத்திறம் இச்சைசெய்தி வைத்தலால் கிரியை யெல்லாம் மறைப்பு இல் ஞானல் மருவிடும்.

தடையிலா ஞானமென்றதினால் தடை செய்யும் ஞானம் வருவிக்கப் பட்டது. அதுவே திரோதான சத்தியாம்.

(பொழிப்புரை) ஒன்றாகிய சிவசத்தியின் சொரூபம் யாதெனின் உயிர்கட்கு அனுக்கிரகம் மாத்திரம் குறித்து அதற்கு வேண்டுவனவற்றை சிறப்புவகையால் தான் அறியாமலும் உயிர்க்கு அறிவிக்காமலும் பொதுவகையால் தான் அறிந்தும் உயிர்க்கு அறிவித்தும் நிற்பதாகிய ஞானம் ஒன்றேயாம். அந்தஞானமே பராசத்தியெனப்படும். அந்த ஞானம் உயிர்கட்கு மலபரிபாகம் வருதற்பொருட்டு ஐந்தொழில் செய்தலைக் குறித்து சிறப்புவகையால் வியாபரிக்குங் கால் ஒரு கூற்றானே திரோதான சத்தியென நின்று இச்சாஞானக் கிரியையென முத்திறப்பட்டுத் தொழிற்படும். அவ்வாறாயின் இச்சை கிரியை யென்கின்ற இவைகள் ஞானத்தினின்றுந் தோன்றுவனவோ வெனின் ஞானம் எவ்வாறுளதோ அவ்வாறே இச்சை கிரியைகளும் நடத்தலின் அவ்விரண்டும் ஞானத்தின் வியாபாரவிசேடங்களேயன்றி வேறு தோன்றுவனவல்ல. ஆதலால் காரியத்தால் அனேகமாகிய செனனி முதலிய வியாபார சத்திகளெல்லாம் முற் கூறப்பட்ட பராசத்தி ரூபமாகிய ஞானம் ஒன்றால் உளவாவனவேயாம். (எ...று

இதனால் பராசத்தி திரோதான சத்தி இச்சாசத்தி ஞானசத்தி கிரியாசத்தியென ஐந்து சத்திகள் இறைவனுக்கு உண்டென்றும் அவற்றுள் பராசத்தி ஒன்றே சொரூபமென்றும் ஏனைய நான்கும் அவற்றின் வியாபாரபேதமாகிய செனனி முதலிய சத்திகளுந் தடத்தமென்றும் அறிக. பொது வகையால் அறிதல் - அநுக்கிரக மாத்திரங் குறித்து நிற்றல். சிறப்பு வகையால் அறிதல் - சிருட்டி முதலிய நான்கு தொழிலையுங் குறித்து நிற்றல். இவை முறையே உபகாரஞ் செய்ய வேண்டுமென் றெண்ணுதலும் இன்ன விதஞ் செய்ய வேண்டு மென் றெண்ணுதலும் போலவாம். (௬௨)

சிவசத்தி ஒன்றே சிறப்புவகையாய் தொழிற்படுதலால் உண்டாம் பயன் கூறுகின்றது.

ஒன்றதா யிச்சா ஞானக் கிரியையென் றொருமூன் றாகி
நின்றிடுஞ் சத்தி யிச்சை யுயிர்க்கரு ணைச மாகு
நன்றெலா ஞான சத்தி யானயந் தறிவ னாத
னன்றருட் கிரியை தன்னா லாக்குவ னகில மெல்லாம்.

(கொ-டு) சத்தி ஒன்றதாய் இச்சா ஞானக்கிரியை என்று ஒரு மூன்றாகி நின்றிடும் இச்சை உயிர்க்கு அருள் (நாதன்) நேசம் ஆகும் ஞானசத்தியால் நன்று எலாம் (நாதன்) நயந்து அறிவன் அருட்கிரியை தன்னால் அன்று அகில மெல்லாம் நாதன் ஆக்குவன்.

(பொ-ரை) பராசத்தியாவது தடையிலாஞானமெனப் பொதுமையால் ஒன்றாய் இச்சாஞானக்கிரியையென வியாபாரபேதத்தால் மூன்றாய் அவையே மற்றும் அவ்வக்காரிய பேதத்தால் பல திறப்படும். அம்மூன்றனுள் இச்சாசத்தியாவது உயிர்கட்கு மலத்தைநீக்கி சிவாநுபவத்தைத் தருதற்பொருட்டு முதல்வனிடத்து உளதாகிய கருணையாம். ஞானசத்தியால் சிவப்பேறாகிய அதற்குச் செய்யக்கடவதான உபாயங்களையெல்லாம் முதல்வன் விரும்பி அறிவன். அருளின் வேறல்லாதகிரியாசத்தியால் அறிந்த அவற்றை அறிந்தவாறே முதல்வன் சங்கற்பித்துச் செய்வன். (எ...று) (சுரு)

இச்சை ஞானம் கிரியை யென்னும் முச்சத்திகளும் சீவனுக்கும் உண்மையால் சீவன் சிவனை ஒப்பாகானெனக் கூறுகின்றது.

சீவனு மிச்சா ஞானக் கிரியையாற் சிவனை யொப்ப
னுவனென் றிடின நாதி மலமிவற் றினைம றைக்குங்
காவல னிவன்செய் கன்மத் தளவினிற் கொடுப்பக் காண்பன்
பாவியாம் புத்தி முத்திப் பயன்கொளும் பண்பிற் றாகும்.

(கொ-டு) இச்சா ஞானக் கிரியையால் சீவனும் சிவனை ஒப்பன் ஆவன் என்றிடின் இவற்றினை அநாதிமலம் மறைக்கும்.

(பொ-ரை) இச்சாஞானக்கிரியையாகிய மூன்று சத்திகளும் முதல்வனோடொப்ப உயிர்க்கும் உளவாம் அதுகொண்டு உயிர்களும் முதல்வனோடொக்குமோ எனின் அன்று உயிர்களின் இச்சா ஞானக் கிரியைகளை கேவலாவத்தையில் அநாதியாகிய ஆணவ மலம் மறைக்கும். பின்னர் சகலாவத்தையில் உயிர்கள் தாம் செய்கின்ற கன்மத்தளவிற் கேற்ற பயனை முதல்வன் கொடுக்கப் பெற்று ஒன்று அனுபவிக்குங் கால் பிறிதொன்றை அனுபவிக்கமாட்டாமல் ஏகதேசப்பட்டு அனுபவிக்கும். சுத்தாவத்தையில் முத்திப்பயனும் சகலாவத்தையில் போகப்பயன்போல் முதல்வன் கொடுப்பவேகொள்ளும் உரிமையுடையனவாம். ஆதலால் இத்தன்மைகளில்லாத முதல்வனுடைய இச்சாஞானக் கிரியாசத்திகளுக்கும் இத்தன்மைகளையுடைய சீவனுடைய இச்சாஞானக் கிரியாசத்திகளுக்கும் வேற்றுமை பெரிதாகலின் ஒப்புமையாகாவாம். (எ...று) ()

சிவசத்தியின் தடத்தம்பலவாயினும் சொரூபம் ஒன்றாயினாற் போலத் தடத்த சிவமும் லயசிவம் போகசிவம் அதிகாரசிவமென மூன்றாயினும் சொரூப சிவம்ஒன்றேயெனவும், அதுவே தடத்த சிவமாயும் தடத்த சிவத்தின் அவத்தைக்கேதுவான ஆதாரமாயும் நிற்குமெனவுங் கூறுகின்றது.

ஞானமே யான போது சிவன்றொழின் ஞான மொக்கி
னீனமில் சதாசி வன்பே ரீசனுந் தொழில தேறி
ஹானமேற் கிரியை வித்தை யுருத்திர னிலய போக
மானபே ரதிகா ரத்தோ டதிகர ணத்தனுமே.

(கொ-டு) ஞானமே ஆனபோது சிவன் தொழி(லே ஆனபோது) ஞானம் ஒக்கின் ஈனம் இல் சதாசிவன் தொழில் அது ஏறின்பேரீசன் ஆம் கிரியை ஊனமேல் வித்தை இலயம் போகம் பேர்ஆன அதிகாரத்தோடு அதிகாணத் தன் உருத்திரன் ஆமே.

(பொ-ரை) மேற்கூறிப்போந்த சிவசத்தி மூன்றனுள் எப்பொழுதும் ஒரு தன்மையாய்த் தொழிற்படுவது இச்சாசத்தி அவ்விச்சை ஒழிந்த ஞானம் கிரியையெனும் இரண்டனுள் முதல்வன் ஞானசத்தியேயாய் நின்றபோது சிவமெனவும் கிரியாசத்தியேயாய் நின்றபோது சத்தியெனவும் ஞானமும் கிரியையுமாய் ஒத்து நின்றபோது சதாசிவமெனவும் ஞானம் குறைந்துகிரியை யேறி நின்றபோது மகேசுவரம் எனவும் கிரியை குறைந்து ஞானம் ஏறி நின்றபோது சுத்தவித்தை யெனவும் ஐவகைப்பட்டுலயம் போகம் பெரிதாகிய அதிகாரமென்னும் மூன்று அவத்தைகளையும் அவ்வவத்தைக்கேதுவாய் வேறுபட்ட ஆத்ாரங்களையும் உடையனாய் அவத்தைக்கு ஆதாரம் ஆகிய அவற்றின் பேரைப்பெற்று நிற்பன். (எ-று)

சிவம் சத்தி யென்ற இரண்டும் எல்லாம் ஒடுங்குதற்கிடமாய் நிற்றலால் லயமெனவும் சதாசிவம் ஏனைய மூர்த்தங்களைத் தோற்றுவித்தலால் போகமெனவும் மகேசுவரத்தில் இருபத்தைந்து மூர்த்தமும் சுத்தவித்தையில் பிரமவிட்டுணுவும் தோன்றித் தொழிற்செய்வதால் மகேசுவரம் சுத்தவித்தை யென்ற இரண்டும் அதிகாரமெனவும்அறிக. (ருஉ)

இலயபோக அதிகார அவத்தைகளுக்கு ஏதுவாய் நின்ற ஆதாரங்கள் சிவதத்துவங்களெனவும் அவற்றினியல்பும் கூறுகின்றது.

வித்தைபோ டீசர் சாதாக் கியந்சத்தி சிவங்க ளைந்துஞ்
சுத்ததத் துவஞ்சி வன்றன் சுதந்தர வடிவ மாகு
நித்தமென் றுரைப்பர் கால நீங்கிய நிலைமை யாலே
வைத்திலர் முற்பிற் பாடு வருவித்தார் கருமத் தாலே.

(கோ-டு) வித்தையோடு ஈசர் சாதாக்கியம் சத்திசிவங்கள் சுத்ததத்துவம் ஐந்தும் சிவன்றன் சுதந்தரவடிவம் ஆகும்கருமத்தாலே (முற்பிற்பாடு) வருவித்தார் காலநீங்கிய நிலைமையாலே முற்பிற்பாடு வைத்திலர் நித்தமென்றுரைப்பர்.

(பொ-ரை) சுத்தமாயா காரியமாகிய சுத்தவித்தை ஈசுவரம் சாதாக்கியம் சத்தி சிவமென்னும் சுத்ததத்துவங்களைந்தும் முதல்வனுடைய ஞானக்கிரியா வியாபாரங்களுக்கு இடமாய் அவ்வியாபாரங்களால் மேற்கூறிப் போந்த சுத்த வித்தை முதலிய இறைவன் பெயரே பெயராக அவ்விறைவனுக்கு சுதந்தர மாகிய வடிவமுமாம். முன்பின்னாக நிகழும் ஞானசத்தி கிரியா சத்திகளின் வியாபார பேதம்பற்றி இச்சிவ தத்துவங்களுக்கு ஒன்றின்பின் ஒன்றாக முற்பிற்பாடு கூறினார். ஆயினும் முற்பிற்பாடு கூறினமையால் காலம் எதுவாக கூறப்பட்டதென்னலாமோவெனின் சுத்தமாயையில் இவ்வைந்து தத்துவங்களும் தோன்றியபின்னர் தோன்றுவதாகிய கால தத்துவம் இவ்வைந்தின் தோற்றத்திற்கு எதுவாகாதாம் ஆதலின் காலம்பற்றி முற்பிற்பாடு கூறிற்றிலர். காலவரையறை கடந்து நிற்றலால் அதுபற்றி இச்சிவதத்துவமைந்தும் சிவ பிரானுக்கு நிலைத்தவடிவமென்றுரைப்பர். (எ-று)

இதனால் சிவதத்துவம் இறைவனுடைய வியாபாரத்திற்கு இடமாதலும் இறைவனுக்கு வடிவமாதலும் அறிக. இது உயிருக்கு உடம்பு இடமாதலும் வடிவ மாதலும் போலவாம். வடிவமென்பது இவ்விடத்து அதிட்டானமாகிய வாயிலே. உயிருக்கு வடிவம் உணர்வேயாயினும் வாயிலாகிய உடம்பும் வடிவ மென்று உபசரித்துக் கூறப்படுவது போல இறைவனுக்கு வடிவம் சித்தேயாயினும் சிவ தத்துவமும் வடிவ மென்று உபசரித்துக் கூறப்படும். உயிருக்கு உடம்பு மாறி மாறி வருதல் போல இறைவனுக்கு வருதலில்லை யென்பதும் சிவ தத்துவம் என்றும் அதிட்டானமாம் என்பதும் தோன்ற "நித்த" மென்றார். அதிட்டான மென்பது வாயிலா மென்பதனை இச் சூத்திரம் ருஅ வது செய்யுளில் "அதிட்டித்துக் கொண்டே" யென்பதற்குக் கூறிய உரையா னறிக. மேல் சுக வது செய்யுளில் சத்தியினாலேயே வடிவ மென் றதனோடு இக் கருத்து முரணாதோ எனின் முரணாது. என்னை? வருகின்ற செய்யுளில் வடிவ மெல்லாஞ் சத்தியிற் காணப்படுவன வென்றும் அதற்கடுத்த செய்யுளில் சத்தியிற் காணப்படும் வடிவமெல்லாந் தானாகத் தோன்றி நிற்பன் சத்தியி னிடமாக வன்றி இறைவன் தானாகத் தோன்றான் என்றும் இரண்டாஞ் சூத்திரம் கூகூ வது செய்யுளில்

சிவ தத்துவம் ஐந்தும் சடமாயினும் சிற்சத்திக்கு சுதந்தரவடிவமென்றும் உரை யாசிரியர் கூறியவாற்றால் இறைவனுக்கு வடிவம் சிற்சத்தியே யென்றும் சிற்சத்திக்கு சிவ தத்துவம் வடிவமா மென்றும் ஒற்றுமை பற்றி சத்திக்குரிய வடிவத்தை இறைவனுக் குரிய வடிவமாகக் கூறியதால் முரணில்லை யென்றும் அறிக.

சிவ பெருமானுக்கு எங்கும் இடமாகவும் சிவ தத்துவத்தை இடமென்று வேறெடுத்துக் கூறிய தென்னை யெனின் எல்லா இடத்திலும் தான் வெளிப்படாது மறைந்தும் சிவதத்துவத்தில் வெளிப்பட்டும் நிற்றல் பற்றி யென்க. அன்றியும் இச் சிவ தத்துவம் ஏனைய தேவர்க் கிடமாகாமையின் சுதந்தர மெனப் பட்டது.

கால மின்றியும் முற் பிற்பாட்டிற்குக் காரணம் காலத் தானமாய் நிற்கும் சிவ சத் தியே யாம். (௬௬)

சொரூப சிவம் சுத்த தத்துவங்களைப் பற்றிய வியாபார பேதத்தால் இலயம் போகம் அதிகார மென்னும் அவத்தை எய்தினும் அவை சத்தியில் காணப்படலால் விகாரி ஆகா னென உவமை முகத்தாற் கூறுகின்றது.

ஒருவனே யிராவ ணாதி பாவக முற்றூற் போலத்
தருவனிவ் வுருவ மெல்லாந் தன்மையுந் திரியா னாகும்
வரும்வடி வெல்லாஞ் சத்தி சத்திதான் மரமுங் காழ்ப்பு
மிருமையும் போல மன்னிச் சிவத்தினோ டியைந்து நிற்கும்

(கொ-டு) ஒருவனே இராவணன் ஆதிபாவகம் உற்றூற்போல தருவன் இவ்வுருவமெல்லாம் வரும் வடிப்பு எல்லாம் சத்திதான் மரமுங் காழ்ப்பும் இருமையும் போல மன்னி சிவத்தினோடு இயைந்து நிற்குஞ் சத்திதன்மையுந் திரியானாகும்.

இயைந்துநிற்குஞ்சத்தியிற் காணப்படுவென வென்பதை சத்தியென்றூர்.

(பொ-ரை) ஒருவன் கூத்திற் குரிய இராவணாதி பல வேடங் கட்டி நடித்தா னாயினும் தன் தன்மையிற் சிறிதும் மாறுபடாதது போல முதல்வன் ஐந் தொழிற் குரியனவாய் மேற் கூறிப் போந்த சுத்த வித்தை முதலிய பேத வடி

வெல்லாம் எய்தியும் பொருந்தப்பட்ட அவ் வடிவு வேறுபாடெல்லாம் சத்தியுந் தானும் மரமும் வயிரமும் போல நிலை பெற்றுப் பிரிப்பின்றி நிற்கும் தனது சத்தியிற் காணப்படுவனவாம் ஆகலின் அவ் வடிவத்தின் வேறுபாடு பற்றி தன் தன்மை வேறு பட்டு விகாரியாவனல்லன். (எ...று) (சுஎ)

சத்தியிற் காணப்படுதல் தனக்காமாறு உவமை முகத்தாற் கூறுகின்றது.

பொன்மைநீ லாதி வன்னம் பொருந்திடப் பளிங்க வற்றின்
றன்மையாய் நிற்கு மாபோற் சத்திதன் பேத மெல்லா
நின்மலன் றானுத் தோன்றி நிலைமையொன் றாயே நிற்பன்
முன்னருட் சத்தி தன்பான் முகிழ்க்குந்தான்முளையானன்றே

(கொ-டு) முன் அருட்சத்தி தன்பால் முகிழ்க்கும் தான் (ஆக) முளையான் அன்றே பொன்மை நீலம் ஆதிவன்னம் பொருந்திட பளிங்கு அவற்றின் தன்மையாய் நிற்குமாபோல் நின்மலன் சத்திதன் பேதமெல்லாம் தான் ஆத் தோன்றி நிலைமை ஒன்றாயே நிற்பன்.

(பொ...ரை.) அவ்விறைவன் எவ்விடத்தும் கருதப்பட்ட அருட்சத்தியின் இடமாகவே தோன்றுவானன்றி தானாக வேறுதோன்றானாகலான் பொன் றன்மையையும் நீலம் முதலிய பொருள்களையும் பளிங்கினது நிறமே பற்றவும் அப்பளிங்கும் அப்பொருள்களின் தன்மை அனைத்துமாய்த் தோன்றி வேற்றுமையின்றி நின்றாற்போல முதல்வனும் தனது சத்தியிற் காணப்படும் வடிவ பேதமெல்லாம் தானாகத்தோன்றி வேற்றுமையின்றியே நிற்பன். (எ-று) (சுஅ)

சத்தியும் சிவமுமாகிய தான்முதலென்றதனை பிரத்தியட்சமாகிய அனுபவத்தில் வைத்துவிளக்கி முதல்வனுக்குரிய பொதுவிலக்கணத்தைத் தொகுத்துக் கூறுகின்றது.

சத்தியுஞ் சிவமு மாய தன்மையிவ் வுலக மெல்லா
மொத்தொவ்வா வாணும் பெண்ணு முணர்குண குணியு மாகி
வைத்தன னவளால் வந்த வாக்கமிவ் வாழ்க்கை யெல்லா
மித்தையு மறியார் பீட லிங்கத்தி னியல்பு மோரார்.

(கொ-டு) இவ் வாழ்க்கை யெல்லாம் அவளால் வந்த ஆக்கம்.

(பொ-ரை.) இறைவன் இவ்வாறு சத்தியுஞ் சிவமுமென தன்னுள்ளே இருவேறு வகைப்பட்ட தன்மைகள் உடையனுயிருத்தலா னன்றே தன் வியா

பகத்துட்பட்ட பல வேறு வகைப்பட்ட இவ்வுயிர் வடிவங்க ளனைத்தும் மனு டர் மிருகம் முதலிய அவ் வப் பிறப்பிற்கியைய வடிவங்கள் ஒத்தும் அவ் வவ் வடிவத்துள்ளும் குறியும் குணங்களும் ஒவ்வாது இரு வேறு வகைப்பட்ட ஆணும் பெண்ணுமாகிய குறிகளையும் ஆண்மையும் பெண்மையுமாகிய குணங்களை யுமுடையனவாய் ஒத்து தம்முட் கூடிக் களித்து வாழும்படி செய்தனன். ஆக லான் இப்படியே தனுகரண புவன போகமாகக் கூறிப் போந்த வாழ்வுகளெல் லாம் சிவமும் சத்தியும் மணந்ததனு லாகிய வாழ்வு என்பது அறியப்படும். இவ் வாறு எல்லாவடிவங்களும் ஆண் தன்மையும் பெண் தன்மையுமாம்படி சிவமும் சத்தியும் நின்ற முறைமையும் உணரார். சத்தியுஞ் சிவமுமாக இறைவன் இரு வேறு வகைப்பட நிற்பனென்பதை பீடமும் இலிங்கமுமாக அமைந்திருத்தலே பிரத்தியட்சமான சான்றாகவும் அதனையும் உணரார். (எ...று)

பீடமென்பது ஆவுடையாள் அதுவே சத்தி- இலிங்கம் சிவம். (சுக)

இது முதல்வன் தடத்த இலக்கணமாய் நிற்பினும் அதனைப் பொருந்தாது சொரூப இலக்கணமாய் நிற்பனென அவ் விலக்கண த்தைத் தொகுத்துக் கூறுகின்றது.

சிவனரு வுருவு மல்லன் சித்தினோ டசித்து மல்லன்
பவமுதற் றொழில்க ளொன்றும் பண்ணிடு வானு மல்லன்
றவமுத லியோக போகந் தரிப்பவ னல்லன் றானே
யிவைபெற வியைந்து மொன்று மியைந்திடா வியல்பி னானே.

(பொ-ரை) சிவபிரான் அருவும் உருவு மல்லாதவன். சித்துமசித்து மல்லாதவன் சிருட்டி முதலிய ஐந்தொழில் ஒன்றுஞ் செய்வானும் அல்லாத வன் தவ முதலியவற்றிற் குரிய யோக வடிவம் போக வடிவம் கொள்வானும் அல்லாதவன் ஆதலால் அம்முதல்வன் தடத்த இலக்கணமாகிய இவற்றைப் பொ ருந்தி நின்றானயினும் அவற்றைச் சிறிதும் பொருந்தாத சொரூப இலக்கணத் தை யுடையான். அச் சொரூப இலக்கணம் ஆறாவது சூத்திரத்தில் கூறப்படும். (எ...று) (எ0)

மூன்றாமதிகரணம் முடிந்தது.

முதற் சூத்திரம் முடிந்தது.

ஆக திருவிருத்தம் சு0.

---

## இரண்டாம் சூத்திரம்.

### பாசஉண்மை.

மேலைச் சூத்திரத்தில் "ஈறுமாகி மருவிடு மென்றதனுனே" எவ்வாறு நின்று மருவுவிப்பன் மருவுவித்தற் குரிய பிரபஞ்சத்தை எதனினின்றும் தோற்றுவிப்பன் என்னும் ஆசங்கைகள் நிகழுமன்றே அந்நிகழ்ச்சி பற்றி இரண்டாஞ் சூத்திரமெழுந்தது.

குடமாகிய காரியத்தைக் கொண்டு செய்பவனாகிய குயவன் உண்டென்று கொள்ளுவதுமன்றி முதற்காரணமாகிய மண்ணும் துணைக்காரணமாகிய திகிரியு முண்டென்றறியப்படுமாகலின் அது போல காரியப்பிரபஞ்சத்தைக் கொண்டு கருத்தாவுண்டென்று மேலைச்சூத்திரத்தால் விளக்கி அப்பிரபஞ்சத்திற்கு முதற்காரணமாகிய மாயையும் சிற்சத்தி வழித்தாய துணைக்காரணமாகிய கன்மமும் என்னும் பாசவுண்மையை நாட்டுகின்ற காரிய ஏதுவெனப் படும் அனுமானப்பிரமாணம் இச்சூத்திரத்தாற் கூறுகின்றார்.

இறைவன் உயிர்களோடு அத்துவிதமாய் நின்று கன்மத்திற் கேற்பமாயையி னின்றும் பிரபஞ்சத்தைத் தோற்றுவிப்ப னெனச் சூத்திரப்பொருளைத் தொகுத்துக் கூறுகின்றது.

உலகெலா மாகி வேறா யுடனுமா யொளியா யோங்கி
யலகிலா வுயிர்கள் கன்மத் தாணையி னமர்ந்து செல்லத்
தலைவனா யிவற்றின் றன்மை தனக்கெய்த லின்றித் தானே
நிலவுசீ ரமல னாகி நின்றன னீங்கா தெங்கும்.

(கொ-டு) உலகு எலாம்ஆகி வேறு ஆய் உடனும் ஆய் ஓங்கி ஒளியாய் ஆணையின் கன்மத்து அலகிலா உயிர்கள் அமர்ந்து செல்லத் தலைவனாய் இவற்றின் தன்மை தனக்கு எய்தல் இன்றி நீங்காது எங்கும் தானே நிலவுசீர் அமலனாகி நின்றனன்.

(பொ-ரை) மேற்கூறிப் போந்த சிவபிரான் புதிதாகப் பிரபஞ்சத்தைத் தோன்றச் செய்யுங்கால் உயிர்களிடத்தே கலப்பினால் உடலும் உயிரும்போல ஒன்றாய் பொருளின் தன்மையால் கண்ணும் சூரியனும் போல அவ்வுயிர்களின் வேறுமாய் உயிர்க்குயிராதற் றன்மையால் கண்ணொளியும் ஆன்ம போதமும் போல அவ்வுயிர்களோடு உடனுமாய் அவ்வவ்வுயிர்களினிடமாக மேலாய் நிற்பதாகிய சத்தி ரூபமாகியும் அச்சத்தியினால் கூட்டுவிக்கின்ற இருவினைகளுக்கேற்ப எண்ணிறந்த அவ்வுயிர்கள் ஐந்தொழிற்பட்டு செல்லுங்கால் அவ்வைக்

தொழில் நடாத்துவதாகிய பதிரூபமாகியும் சத்திரூபம் பதிரூபமாகிய அத்தன்மைகளில் வேறாயும் அத்தன்மைகளோடும் பிரிப்பின்றியும் எவ்விடத்தும் தானே சுயம்பிரகாச ரூபமாம் இயல்புடையனாய் நிற்பன். (எ-று)

இதனானே சுயம்பிரகாசமாய் நிற்கும் தன்மையில் சிவமெனவும் உயிர்களின் வழி நிற்குந் தன்மையில் சத்தி யெனவும் ஐந்தொழில் செய்யுந் தன்மையில் பதி எனவும் முதல்வன் பெயர் பெற்று நிற்ப னென்ப தறிக.

இச் செய்யுள் முதனூல் இரண்டாஞ் சூத்திரம் போல நான்கு கூற்றையுடையது அவற்றுள்.

முதற்கூறு "உலகெலாமாகி வேறாயுடனுமாய்

இரண்டாங்கூறு "அலகிலா வுயிர்கள் கன்மத்தாணையின்"

மூன்றாங் கூறு "அமர்ந்து செல்லத் தலைவனாய்"

நாலாங் கூறு "இவற்றின் றன்மை தனக்கெய்தலின்றித் தானே நிலவு சீர்அமலனாகி யொளியாயோங்கி நின்றனன் நீங்காதெங்கும்." (க)

---

# முதலதிகரணம்.

## உலகேலமாகி வேறா யுடனுமாய் என்பது.

---

பல வுயிர்களோடும் ஒரு இறைவன் கலந்து உடனாய் நிற்பனென உவமை முகத்தாற் கூறுகின்றது.

ஒன்றென மறைக ளெல்லா முரைத்திட வுயிர்க ளொன்றி
நின்றன னென்று பன்மை நிகழ்த்துவ தென்னை யென்னி
னன்றவை பதிதா னென்றென் றறையுமக் கரங்க டோறுஞ்
சென்றிடு மகரம் போல நின்றனன் சிவனுஞ் சேர்ந்தே.

(கொ-டு) மறைகள் எல்லாம் ஒன்று என உரைத்திட உயிர்கள் ஒன்றி நின்றனன் என்று பன்மை நிகழ்த்துவது என்னை என்னின் அவைபதிதான் ஒன்று என்று அறையும் அன்று அக்கரங்கள் தோறுஞ் சென்றிடும் அகரம் போல சிவனுஞ் சேர்ந்தே நின்றனன்.

(பொ-ரை) வேதங்களிலெல்லாம் ஆன்மா ஒன்றே என்று உரைக்கவும் உயிர்களோடு கலந்து உடனாய் நிற்பனென்று இவ்விடத்து உயிர் பலவென்று கூறுவது எவ்வாறு பொருந்துமெனின் அவ்வேதங்களில் ஆன்மா ஒன்று என்பது உயிராகிய ஜீவான்மாவை யன்று அச் சீவனுக்குப் பதியாகிய பரமான்மா ஒன்றே யென்பதாம். ஆதலால் முரணுதலின்று. சீவான்மாக்கள் பலவாகவும் பரமான்மா வாகிய இறைவன் ஒன்றாகவும் இருத்தலால் மேலைச்செய்யுளில் சீவான்மாக்களின் இறைவன் வேறு என்றதும் பொருந்தும். வேறாயும் ஒருவனாயும் நிற்கும் இறைவன் பல உயிர்களுடன் கலந்து நின்றனன் என்பது எவ்வாறு பொருந்துமெனின் ஒன்றாகிய அகர அக்கரமானது அதனின் வேறாகிய பல அக்கரங்களோடும் கலந்து நிற்றல் போல இறைவனும் உயிர்களோடு கலந்து நிற்றல் கூடும். அவ்வாறு கலந்து நிற்றலால் மேலைச்செய்யுளில் உடனுமா யென்றதும் அமைவுடைத்து. (எ...று)

அகரமாவது அக் கரங்களுள் முதலாவதாய் நிற்கும் அக்கரமென்பர் ஒரு சாரார். அவ்வக்கரம் ஏனை அக்கரங்களோடு கலந்து நிற்றல் பெறப்படாமையின் அவர் கருத்துப்பொருந்தாது. இனி அங்காத்தல் எல்லா அக்கரங்களோடும் பொருந்துதலின் அவ்வங் காத்தலே அகர மென்பர் மற்றொரு சாரார். அங்காப்பின்றியே வாக்கு மௌனமா யிருந்து ஒருவன் ஒரு பொருளைச் சிந்திக்கும் பொழுது அப் பொருளுக்குரிய சொல்லும் எழுத்தும் அகத்திற் றோன்றுமாதலின் அங்ஙனந் தோன்றுமெழுத்துடன் அங்காத்தல் பொருந்தாமையால் அவர் கருத்தும் பொருந்தாது. இவ்வாறாகவே அகரமென்பது தான் யாதோ வெனின் அகத்தின் கண் எப்பொழுதும் இயங்கிக் கொண் டிருக்கும் நாதமாகிய ஒலியே அகரமாம். அவ்வொலி அகரம் போல் ஒலித்தலால் அகரமெனப் பட்டது. அவ்வொலி பல வேறு வகைப்பட்ட அக்கரங்களாகிய ஒலிகளுக் கெல்லாம் முதலாயும் அவ் வொலிகளோடு கலந்தும் நிற்றலால் அகரம்போலென உவமைகூறப்பட்டது. இதனையே ஆசிரியர் திருவள்ளுவரும் "அகர முதல வெழுத் தெல்லாம்" என்றார். உரை யாசிரியர் பரிமேலழகரும் நாத மாத்திரையாகிய இயல்பாற் பிறத்தலென்று அகரத்திற்கு இலக்கணங் கூறினார். (உ)

இறைவன் உயிர்களோடு கலந்து உடனாய் நிற்பினும் வேறாவனென உவமை முகத்தாற் கூறுகின்றது.

உருவொடு கருவி யெல்லா முயிரொடு நின்று வேறாய்
வருவது போல வீச னுயிர்களின் மருவி வாழ்வன்

றருமுயி ரவனே யாகா வுயிரவை தானு மாகான்
வருபவ னிவைதா னாயும் வேறுமாய் மன்னி நின்றே.

(கொ-டு) உயிர் உருவொடு கருவி எல்லாம் கொடு நின்று வேருய் வருவதுபோல ஈசன் உயிர்களின் மருவி வாழ்வன் தானும் உயிரவையாகான் தரும் உயிரவனேயாகா இவைதான் ஆயும் வேறும் ஆய் மன்னிநின்றே வருபவன்.

(பொ-ரை) உயிரானது நடம்பு முதலியவற்ருல் கட்டப்படும் உடம்பையும் செவி கண் முதலிய கருவிகளேயும் பற்றிக் கொண்டு அவ்வுடம்போடு உடனுய் நிற்கும். நிற்குங்கால் உடம்பிற் கிட்ட பேரால் பிறன் அழைத்த விடத்து உயிர் என்னே என்று கேட்கும். கேட்கினும் உயிர் உயிரே உடம்பு உடம்பே. உயிரானது உடம்பாகமாட்டாது உடம்பு உயிராக மாட்டாது. அவ்வாருயினும் உயிர் அவ்வுடம்பின் வேருகியும் அவ்வுடம்பாகியும் நிற்றல் முறையே என் செவி கேட்டது என்பதனுலும் நான் கேட்டேன் என்பதனுலும் காணப்படும். அது போல முதல்வன் உயிர்களோடு அபேதமாய்க் கலந்து நிற்பன் அவ்வாறு நின்ற விடத்தும் முதல்வன் முதல்வனே உயிர் உயிரே. முதல்வன் உயிராகமாட்டான் உயிர் முதல்வனுகமாட்டாது. அவ்வாருயினும் முதல்வன் அறிவித்தலால் உயிரின் வேருகியும் உடனின்று செலுத்துதலால் உயிர்கள் எல்லாமாகியும் நிற்பன். (எ...று) (க)

முதலதிகரணம் முடிந்தது.

---

# இரண்டாம் அதிகரணம்.

---

அலகிலா உயிர்கள் கன்மத் தாணேயின் என்பது.

இறைவன் அவ்வாறு நிற்றல் தனது சத்தியால் விணேயின் பயனுகிய இன்ப துன்பங்களே உயிர்கட்கு ஊட்டுதற் பொருட்டென்பதைத் தொகுத்து கூறுகின்றது.

இருவினை யின்பத் துன்பத் திவ்வுயிர் பிறந்தி றந்து
வருவது போவ தாகு மன்னிய வினைப்ப லன்க
டருவான் றலைவி யோடு தராபதி போலத் தாமே
மருவிடா வடிவுங் கன்ம பலன்களு மறுமைக் கண்ணே.

(கொ-டு) இவ்வுயிர் இருவினை இன்பத்துன்பத்து பிறந்திறந்து போவது வருவது ஆகும் வடிவுங் கன்மபலன்களும் தாமே மறுமைக்கண்ணே மருவிடா மன்னிய வினைப்பலன்கள் தாணியோடு தராபதிபோல அரன்தரும்.

(பொ-ரை) மேற் கூறிப்போந்த உயிர்க்கு முற்பிறவியிற் செய்யப்பட்டுக் கிடந்த இருவினையின் பயனாக இப்பிறவியில் இன்பதுன்ப அனுபவமுண்டாம். அவ்வனுபவத்தால் மேலும் வினையேறும். அதனால் மீட்டு மீட்டும் பிறந்திறத்தலும் சுவர்க்க நரகங்களில் சென்று மீளுதலுங்கூடும். உடம்பும் வினைப்பயனும் அறிவில்லாத சடமாதலின் உடம்பு வினைப்பயனை எடுத்துக் கொள்ளவாவது வினைப்பயன் உடம்பைப் பொருந்தவாவது முடியாவாம். ஆதலால் உடம்பினையும் அவ் வுடம்பிற் குரிய வினைப்பயன்களையும் வைத்தியனும் அரசனும்போல முதல்வனே தனது சத்தியால் அவ் வுயிருக்குக் கூட்டுவன். (எ...று)

வைத்தியன் அரசன் என்ற உவமையை முன்னர் முப்பதாவது செய்யுள் முதல் முப்பத்தைந்தாவது செய்யுள் வரை விரித்துக் கூறப்படுமாதலின் ஆண்டுக்காண்க. இச் செய்யுளில் கூறப்படும் இருவினை யென்பதை உலகாயதர் கூற்றாகவும், தாமே மருவிடா வென்பதை மீமாஞ்சகர் கூற்றாகவும், தாணியோடு தராபதி யென்றதை உவமைக் கூற்றாகவும், இன்பத் துன்பத் திவ்வுயிர் பிறந்திறந்து வருவது போவதாகும் என்பதை உயிர் அருந்துங் கூற்றாகவும் முறையே முன்னர் விரித்துக் கூறுகின்றார். (ச)

இன்ப துன்பங்கள் இயல்பே யன்றி வினையின் பயன் அன்றெனக் கூறும் உலகாயதரை மறுத்துரைக்கின்றன.

இருவினை யென்னை யின்பத் துன்பங்க ளியல்பதென்னி
னொருதன்மை யியல்புக் குள்ள தொருவனுக் கிரண்டு செய்தி
வருவதென் மலருந் தீயு மருவலின் வாசம் வெம்மை
தருவதெ னீரென் செய்தி தானியல் பாகு மன்றே.

தன்னியல் பொழியப் பூவுந் தழலும்வந் தணைய நீரின்
மன்னிய திரண்டு செய்தி வருமிரு வினையி னானு
முன்னிய வின்பத் துன்ப முறுமுயி ருணர்வில் லாத
துன்னிய வசித்தை யின்பத் துன்பங்கள் சூழ்ந்தி டாவே.

(கொ-டு) நீர் என் செய்து தருவதுதான் இயல்பு ஆகும் என் அன்றே நீரின் தன்னியல்பு ஒழிய பூவுந்தழலும் வந்தணைய இரண்டுசெய்தி மன்னியது உன்னிய இன்பத்துன்பம் உயிர்உறும் துன்னிய இன்பத்துன்பங்கள் இருவினையினானும் வரும் உணர்வு இல்லாத அசித்தைச் சூழ்ந்திடாவே.

(பொ-ரை) இருவினை என்பதே இல்லை இன்பதுன்பங்களெல்லாம் இயல்பேயாகும் என்று உலகாயதர்கூற இயல்பென்பது எப்பொழுதும் ஒரு தன்மையாயிருப்பதன்றி ஒரு பொருளில் தம்முள் மாறுபட்ட இன்பதுன்பங்களாகிய இரண்டு தன்மை யிருக்குமென்றல் எவ்வாறு பொருந்தும்? அவ்வின்பதுன்பம் காரணத்தாலன்றிப் பொருந்தாவாம். அக்காரணம் இருவினையேயாம். தண்ணீரில் பூவும் அக்கினியும் பொருந்துதலால் மணமும் சூடும் உண்டாவனவாம். அவ்வாறன்றி தண்ணீரில் மணமும் சூடுங் கிடையா. மணமுஞ் சூடும் இயல்பு எனின் அன்று. எப்பொழுதும் ஒரு தன்மையான தட்பமாயிருத்தலே தண்ணீருக்கு இயல்பு. வாசமும் வெப்பமும் தண்ணீருக்கு செயற்கையான் உளவாயின. இவை போல எப்பொழுதும் ஒரு தன்மையான அறிவே உயிருக்கு இயல்பு. அவ்வியல்புடைய உயிரே இன்பதுன்பங்களை யநுபவிக்கும். அவ்வுயிருக்கு இன்ப துன்ப அனுபவம் இருவினையாகிய செயற்கையாலுண்டாம். அவ்வனுபவம் உடம்புக்கே யெனின் உடம்பு சடமாகையால் அனுபவித்தல் கூடாது. (எ-று) (கு-சு)

இன்ப துன்பங்கட்குக் காரணம் முயற்சியே என்பாரை மறுத்துரைக்கின்றன.

இம்மையின் முயற்சி யாலே யிருநிதி யீட்டி யின்ப
மிம்மையே நுகர்வர் செய்தி யிலாதவர் பொருளு மின்றி
யிம்மையே யிடரு ழப்பர் வேறிரு வினைய துண்டே
லிம்மையின் முயற்சி யின்றி யெய்திட வேண்டு மிங்கே.

இருவினைச் செயல்கா ணிம்மை யிரும்பொரு ளின்பம் வேண்டி
வருவினை செய்யுங் காலை மடிவரு மடியு மின்றித்
தருவினை யதனி லத்தந் தானறுந் துயருந் தங்கு
மொருவினை செய்யா தோரு முடையரிவ் வுலகத் துள்ளே.

(கொ-டு) முயற்சியாலே இம்மையின் இருநிதிஈட்டி இன்பம் இம்மையேநுகர்வர் செய்தி இலாதவர் பொருளுமின்றி இம்மையே இடருழப்பர் இருவினையது வேறுஉண்டேல் இம்மையின்முயற்சி இன்றி இங்கே எய்திடவேண்டும் இம்மை இரும்பொருள் இன்பம் வேண்டி வருவினை செய்யுங்காலை மடிவரும் மடியும் இன்றி தருவினையதனில் அத்தந்தான் அறும் துயருந்தங்கும்

இவ்வுலகத்துள்ளே ஒருவினை செய்யா தோரும் உடையர் இருவினைச் செயல் காண்.

(பொ-ரை) இன்பதுன்பங்களுக்குக் காரணம் முயற்சியேயாம். வினையென்பது பொருந்தாது. எதனாலெனின் முயற்சியால் இவ்வுலகின் கண்ணிருந்த பொருள்களைச் சேர்த்து இன்பத்தையும் இப்பிறப்பின் கண் அனுபவிப்பர். முயற்சியில்லாதவர் பொருளீட்டுதலுமின்றி இப்பிறப்பின் கண்ணே துன்பத்தை அடைவர். இவ்வனுபவத்தில் வைத்து முயற்சியே இன்பதுன்பத்திற்குக் காரணமெனப் பிரத்தியட்சமாக அறியக்கிடத்தலின் அதுவே யமையும். அதுவன்றி இருவினை என்பதொன்றுண்டு என வேறுமோர் காரணம் கொள்ளில் அவ்வினையானது இப்பிறப்பின் கண் யாதொரு முயற்சியின்றியும் இவ்விடத்துப் பொருள் கைகூடச் செய்யவேண்டும். அவ்வாறின்மையால் முயற்சியைவிட வினை என்னும் வேறு காரணங் கொள்ளுதல் குற்றமாகாதோ வெனின் ஆகாது. இம்மைக் கண்ணே மிக்க பொருளின்பங்கள் கருதி வருகின்ற முயற்சியைச் செய்யுமிடத்து அம்முயற்சி முற்றுப்பெறாது தளர்வுண்டாகலானும் தளர்வின்றிப் பொருந்திய முயற்சியில் பயனின்றிப் போதலானும் முயற்சியினாலே துன்பம் எய்துதலினாலும் இவ்வுலகின்கண் யாதொரு முயற்சி செய்யாதாரும் செல்வராய்த் தங்குதலினாலும் அம்முயற்சி பிறழ்தல் காணக்கிடத்தலின் இவ்வாறு பிறழ்தற்கரிய காரணம் வேறுண்டென்பது பெறப்படுதலால் அக்காரணமே இருவினை என்றறியப்படும் (எ—று) (எ)(அ)

முயற்சியின் பயன் மேல் வினையும் முன்வினைப்பயனை அனுபவிக்கச் செய்யுந் துணையு மென இருதிறப்படு மெனக் கூறுகின்றது.

பேறிழ வின்ப மோடு பிணிமூப்புச் சாக்கா டென்னு
மாறுமுன் கருவுட் பட்ட தவ்விதி யனுப வத்தா
லேறிடு முன்பு செய்த கன்மமிங் கிவற்றிற் கேது
தேறுநீ யினிச்செய் கன்ம மேலுடற் சேரு மென்றே.

(கொ-டு) பேறு இழவு மூப்புச் சாக்காடு இன்பமோடு பிணி என்னும் ஆறும் முன்கருவுட்பட்டது அவ்விதி ஏறிடும் அனுபவத்தால் இனிசசெய் கன்மம் மேலுடற் சேரும் முன்பு செய்த கன்மம் இங்கு இவற்றிற்கு ஏது என்றே நீதேறு.

(பொ-ரை) எடுத்த உடம்பில் வரக்கடவனவாகிய செல்வம், வறுமை, உயர்வு, இழிவு, இன்பம், துன்பம் என்னும் ஆறும் உடம்பு எடுப்பதற்கு முன்னே சூக்குமமாய் கருவினுள் அமைந்து கிடந்தனவாம். அன்றி அப்போதப்போது உளவாவன வல்ல. முன் கருவுட் கிடந்த அவை பின்னர் அவற்றை

அனுபவித்தற்குத் துணையாகிய முயற்சியால் தூலமாய் வந்து கூடும்.' அவ்வாற னுபவித்தற்குத் துணையாக உண்டான முயற்சி அனுபவிக்கச் செய்தலோடொ ழியாது மற்ற உடம்பிற் பொருந்துவதான அவ்வறுவகைக்கும் வித்தாய் நிலைபெறும். முற்பிறவியிற் செய்த முயற்சி இப்பிறவியில் வரும் இவ் வாறற்கும் ஏதுவாயினாற்போல இப்பிறவியிற் செய்யும் முயற்சி மேல் வினைக்கு வித்தாதலே யன்றி இப்பொழுது பயன்றருவதில்லை யென்பதனை நீ தெளி வாயாக. (எ—று) (கூ)

முயற்சியால் வினையும் வினையால் முயற்சியும் வித்தும் மரமும் போலாமெனக் கூறுகின்றது.

உடற்செயல் கன்ம மிந்த வுட ல்வந்த வாறே தென்னின்
விடப்படு முன்னு டம்பின் வினையிந்த வுடல்வி னைக்குந்
தொடர்ச்சியா லொன்றுக் கொன்று தொன்றுதொட் டநாதி வித்தி
னிடத்தினின் மரம ரத்தின் வித்தும்வந் தியையு மாபோல்.

(கொ-டு) வித்தின் இடத்தினின் மரம் மரத்தின் வித்தும் வந்து இயை யும் ஆபோல் ஒன்றுக் கொன்று தொடர்ச்சியால் தொன்று தொட்டு அநாதி.

(பொ-ரை) உடலின் முயற்சியால் வினையுண்டாம். அவ்வாறாயின் இவ்வு டல் உண்டாவதற்குக் காரணம் யாதெனின் விடப்பட்ட முன் உடம்பின் வினை யாம். அவ்வினையே இவ்வுடம்பை உண்டு பண்ணும். இவ்வாறு உடம்பால் வினையும் வினையால் உடம்பும் வருதல் வித்தின் கண் மரமும் மரத்தின் கண் வித்தும் வந்து பொருந்துமாறு போலவாம். வினையுடலென்னும் இவ்விரண்டும் ஒன்றுக்கொன்று காரண காரியமாய் தொன்று தொட்டு ஒன்றன்பின் ஒன் றாக வருதலால் அவற்றிற்கு முற்பிற்பாடு கூறமுடியாது. (எ—று)

வித்தும் மரமும் ஒன்றுக்கொன்று காரண காரியமாயிருப்பினும் இறைவன் முதலாவதாக இரண்டிலொன்றைத்தான் உற்பத்தி செய் திருக்க வேண்டும். அது மரமாகவே யிருக்கவேண்டும். இக்கருத் துப் பற்றியே "விச்சதன்றியே விளைவு செய்குவாய்" என மணிவா சகப் பெருமான் அருளிச் செய்தனர். இது போல கேவலத்தில் அறிவு தொழிற் பாடின்றிக் கிடந்த ஆன்மாவிற்கு குருடனுக்குக் கோல் கொடுப்பது போல் இறைவன் சூக்கும தேகத்தைக் கருணையி னால் கொடுப்பன். அச்சூக்கும தேகத்தை இறைவன் தருதல் வினை காரணமாக வன்று. அறியாமையுட்பட்டு வருந்தும் காரணத்தால் தரப்பட்டதாம். அச்சூக்குமதேகம் முத்தியடையும்வரை எத்துணைப்

பிறவிகளை எடுப்பினும் ஒன்றாகவே யிருந்து முத்தியடையினீங்கும். அச்சூக்குமதேகம் எல்லா உயிர்க்கும் ஒரு தன்மையாகவே யிருக்கும் இருப்பினும் முன் பொருந்தி நின்ற அறியாமை பல வேறு வகைப்படுமாதலின் அவ்வறியாமைக் கேற்பத்தூலவுடம்பும் அவ்வுடம்பால் வினையும் மாறி மாறி வரும். ஆதலால் வினை உடல் என்னும் இரண்டிற்கும் மூலமாகிய சூக்கும தேகம் ஒன்றுண்டென்பதால் முற் பிற்பாடு கூற முடியாத குற்றத்திற் குட்படாமையறிக. ()

முயற்சி யின்றி வினைப்பயன் அனுபவித்தல் கூடாதென்றும் முன் வினைப்பயன் அனுபவிப்பதற்கான அம்முயற்சிமேல் வினைக்கு வித்தாமென்றும் கூறுகின்றது.

முற்செய்ல் விதியை யிந்த முயற்சியோ டனுப வித்தா
னிச்செயல் பலிக்கு மாறென் னிதமகி தங்கண் முன்
ரச்செய லானு லிங்கு மவைசெயின் மேலைக் காகும்
பிற்செயா தனுப விப்ப தின்றுபின் றொடருஞ் செய்தி.

(கொ-டு) செய்தி பின்றொடரும்.

(பொ-ரை) இத்துணையுங் கூறியவாற்றால் முற்பிறவியில் செய்த முயற்சி யிப்பிறவியில் வரும் செல்வ முதலிய மேற்கூறிய ஆறற்கும் ஏதுவென்பதும் அச்செல்வ முதலியவற்றை இப்பிறவியில் முயற்சியாகிய துணையால் அனுபவித்தல் கூடுமென்பதும் பெற்றாம். அவ்வாறு முன்வினைப்பயனுக்கீடாக இப்பொழுது வருகின்ற முயற்சி மேல்உடலெடுத்தற்குரிய வினையா மாறு யாங்ஙனமெனின் முன் வினை யெனப்படும் இதம் அகிதங்களாவன முற்பிறவியில் அவ்வாறு நிகழும் முயற்சியே யன்றி வேறின்மையினால் இப்பொழுதும் அம்முயற்சி நிகழ்ந்தால் அது மேலைக்கு வினையாமென்பது தானே விளங்கும். அவ்வாறாயின் சில விடத்து முயற்சியின்றி யிருப்பார்க்கு மேல் வினை யேறுமாறு இல்லை என்று கொள்ள வருமே எனின் அனுபவமாவது பின்னர் முயற்சியை ஒட்டியே நிகழுமாதலின் பிராரத்த வினையின் அனுபவமுள்ள அளவும் முயற்சியும் உறுதியா யுண்டென்பது பெறப்படும். ஆதலின் அனுபவமுள்ள இடத்து மேல் வினை ஏறுமாறில்லை எனறல் பொருந்தாது. (எ-று)

மேல் முயற்சி செய்யாதாரும் செல்வராய்த் தக்குதலென்றது வருந்திச் செய்ய வேண்டாது எளிதிற் பெறுவது நோக்கியே ஆதலின் அதனோடு முரணின்மை அறிக. (கக)

முயற்சியானது செயல் வகையால் அனுபவமாயும் யான் செய்தேனென்னும் கருத்து வகையால் மேல் வினைக்கு வித்தாயும் இருதிறப்படு மெனக் கூறுகின்றது.

மேலைக்கு வித்து மாகி விளைந்தவை யுணவு மாகி
ஞாலத்து வருமா போல நாஞ்செயும் வினைக ளெல்லா
மேலத்தான் பலமாச் செய்யு மிதமகி தங்கட்கெல்லா
மூலத்த தாகி யென்றும் வந்திடு முறைமை யோடே.

(கொ-டு) ஞாலத்து விளைந்தவை உணவும் ஆகி மேலைக்குவித்தும் ஆகி வரும் ஆபோல நாம் செயும் வினைகளெல்லாம் என்றும் முறைமையோடே ஏலத்தான் பலம் ஆ (வந்திடும்) செய்யும் இதம் அகிதங்கட் கெல்லாம் மூலத்தது ஆகி வந்திடும்.

(பொ-ரை) உலகத்தின் கண் உணவின் பொருட்டு விளைந்த கனி முதலாயின உணவுமாய் மேலைக்கு வித்துமாய் வருமாறுபோல நாம் செய்தே மென்னும் முனைப்பால் செய்யப்படுவதாகிய முயற்சியும் எக்காலத்தும் செயல்வகையால் வினைக்கீடாய் வரும் அனுபவத்தைப் பயக்கும். அவ்வனுபவத்தை வினையின் பயனென்று கருதாது நான் செய்தே னென்னும் கருத்து வகையால் செய்யா நின்ற இதம் அகிதமெனப்படும் ஆகாமிய வினையைப் பயக்கும். (எ-று)

வினை, ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தம் என மூவகைப்படும். அவற்றுள் ஆகாமியமாவது நல்வினை தீவினை என்னும் முயற்சி. சஞ்சிதமாவது அம்முயற்சி பலனுக்கு வராமல் கட்டுப்பட்டிருப்பது. கட்டுப்பட்டிருக்குமிடம் செய்தவன் புத்தி தத்துவமும் மாயையுமாம். பிராரத்தமாவது அம்முயற்சியின் பயனை அனுபவித்தல். இம்மூன்றற்கும் திருட்டாந்தம் வருமாறு, வித்தை நிலத்திலிடுதல் ஆகாமியம், அவ்வித்து இட்டவன் புத்தி தத்துவம் பற்றுக்கோடாக பலன்தரும்வரை பூமியிற்றங்கியிருப்பது சஞ்சிதம், பலன் அனுபவத்திற்கு வருதல் பிராரத்தமாம். (கஉ)

கன்மமே அன்றி இறைவனில்லை என்னும் மீமாஞ்சகர் மதம் பற்றி இதம், அகிதம் என்னும் முயற்சி இறைவனால் என்று கொள்ளப்பட்டு இன்பதுன்பப் பயனை அவ்விறைவன் தருவனெனக் கூறுகின்றது.

இதமகி தங்க ளென்ப திகன்மன வாக்குக் காயத்
திதமுயிர்க் குறுதி செய்த லகிதமற் றதுசெய் யாமை
யிதமகி தங்க ளெல்லா மிறைவனே யேற்றுக் கொண்டிங்
கிதமகி தத்தா லின்பத் துன்பங்க ளீவ னன்றே.

(கொ-டு) உயிர்க் குறுதி செய்தல் இதம் மற்றது செய்யாமை அகிதம் இறைவனே இதம் அகிதங்க ளெல்லாம் ஏற்றுக்கொண்டு இங்கு இதம் அகிதத்தால் இன்பத்துன்பங்கள் ஈவன் அன்றே.

(பொ-ரை) இதம், அகிதங்களாகிய வினைகளி னதியல்பு யாதெனின் நினைத்தலுஞ் சொல்லுதலுஞ் செய்தலுமாகிய, மாறுபட்ட மனவாக்குக் காயங்களால் வேதாகமங்களில் உயிர்க்குறுதி என விதித்தவற்றைச் செய்தலே இதம். அவ்வேதாகமங்களில் விலக்கியவற்றைச் செய்தலே அகிதம். இதம் செய்பவன் தன் மனதில் இதமென்று கருதிச்செய்யுங்காலத்து அவனை அறியாது அகிதம் வருதலுங் கூடும். அகிதம் செய்பவனிடத்தும் இவ்வாறு இதம் வருதலுங்கூடும். அன்றியும் அகிதம் செய்பவன் அதனை அகிதமென எண்ணான். ஆதலால் இதம் அகிதமாகிய அவ்விரண்டனையும் அறிபவன் அம்முதல்வனேயாம். அம்முதல்வனே அவ் இதம் அகிதங்களைப் பொருந்தி அறிந்து இவ்விடத்து, அவற்றிற்கேற்ப இன்பதுன்பமாகிய பயனைத் தருவன் (எ...று) ()

இதம் அகிதங்களை இறைவன் பொருந்தி அறிதற்கு ஏது கருணையே எனக் கூறுகின்றது.

இறைவனிங் கேற்ப தென்னை யிதமகி தங்க ளென்னி
னிறைபர னுயிர்க்கு வைத்த நேசத்தி னிலைமை யாகு
மறமலி யிதஞ்செய் வோருக் கநுக்கிர கத்தைச் செய்வன்
மறமலி யகிதஞ் செய்யி னிக்கிர கத்தை வைப்பன்.

(கொ-டு) இறைவன் இதம் அகிதங்கள் இங்கு ஏற்பது என்னையென்னின்

(பொ-ரை) ஆன்மாக்கள் செய்த இதம் அகிதமாகிய வினையை முதல்வன் இவ்விடத்துப் பொருந்தியறிவதற்குக் காரணம் யாதெனின் எவ்விடத்தும் நிறைந்த அம்முதல்வன் உயிர்கள் முத்தியின்ப மடைதற் பொருட்டு வைத்த கருணையேயாம். கருணையாயினும் வினையாகிய காரணம் இதம் அகிதமென இருவேறுவகைப்பட நிகழ்ந்தமையின் அவற்றிற்கேற்ப அறமிகுந்த நல்வினைசெய்வோர்க்கு இன்பத்தையும் மறமிகுந்த தீவினை செய்வோர்க்குத் துன்பத்தையுஞ் செய்வன். (எ...று) (கச)

இறைவனால் செய்யப்படும் அநுக்கிரகம், நிக்கிரகமாகிய இரண்டும் கருணையே எனக் கூறுகின்றது.

நிக்கிர கங்க டானு நேசத்தா லீசன் செய்வ
தக்கிர மத்தாற் குற்ற மடித்துத்தீர்த் தச்சம் பண்ணி
யிக்கிர மத்தி னாலே யீண்டற மியற்றி டென்ப
னெக்கிர மத்தி னாலு மிறைசெய லருளே யென்றும்.

(கொ-டு) ஈசன் நிக்கிரகங்கள் செய்வது தானும் நேசத்தால்.

(பொ-ரை) முதல்வன் நல்வினை செய்தாருக்கு அநுக்கிரகம் செய்தல் போல தீவினை செய்தாரைத் தண்டித்தலும் நல்வழிப்படுத்தற்பொருட்டுச் செய்யும் கருணையேயாம். தண்டித்தல் கருணையாவது எவ்வாறெனின் அக்கிரமத்தாற் செய்யப்பட்ட குற்றங்களைத் தண்டித்து நீக்குதலால் அச்சமுண்டாகச் செய்து இம்முறைமையால் இவ்வாறு குற்றஞ்செய்யாது இனி அறத்தினைச் செய்திடல் வேண்டுமென உணர்த்துவ தாதலால் கருணையேயாம். வினையின்பயனை அனுபவிக்கும் முறைமையிற் செய்யும் மறைத்தலாகிய திரோபவ கிருத்தியமும் உடம்பினை நீக்குதலாகிய சங்கார கிருத்தியமும் உளப்பட அம்முதல்வன் செய்யும் எச்செயலும் எக்காலத்தும் கருணையே என்பதற் கிழுக்கில்லை. (எ...று) (கரு)

தண்டித்தலுங் கருணையே யென்பதை உவமை முகத்தால் கூறுகின்றது.

தந்தைதாய் பெற்ற தத்தம் புதலவர்க டஞ்சொ லாற்றின்
வந்திடா விடினு றுக்கி வளாரினா லடித்துத் தீய
பந்தமு மிடுவ ரெல்லாம் பார்த்திடிற் பரிவே யாகு
மிந்தநீர் முறைமை யன்றோ வீசனார் முனிவு மென்றும்.

(பொ-ரை) உலகத்தில் தந்தை தாயர்களாவார் தம்முடைய புதல்வர்கள் தம்முடைய சொல்வழி நடவார்களாயின் அப்புதல்வர்களை அச்சமுறுத்தி வளாரினாலே அடித்துக் கொடிய விலங்குமிடுவர். பார்க்குமிடத்து இச்செயல்கள் செயல்வகையால் துன்பஞ் செய்தல்போலத் தோன்றினும்நல்வழிப்படுத்தவேண்டுமென்னுங் கருத்து வகையால் அருளேயாமென்பது பின்னர் நல்வழிப்படுதலாலறியப்படும். இதுபோல் முதல்வன் செய்யுந் தண்டமும் எக்காலத்தும் கருணையேயாம். (எ...று) (கசு)

வினையே பலன்றரு மென்பாரை மறுத்து வினையானது செய்தபொழுதே கெட்டொழிதலால் இன்பதுன்பப்பலனை அவ்வினை தராதென்றும் இறைவனே தரவேண்டுமென்றும் கெட்டுப் பலன் தருதல் எவ்விடத்துஞ் செல்லாதென்றுங் கூறுகின்றன.

செயல்களே பலத்தைச் செய்யுந் தெய்வம் வேண் டாவிங் கென்னின்
முயலுமிச் செயல்க ளிங்கே முழுவது மழியு மெங்கே
பயனளிப் பனவழிந்தே பலன்களைப் பண்ணுங் கெட்டே
வயலிடுந் தழையுந் தின்னு மருந்தும்பின் பலிக்கு மாபோல்

செய்க்கிடுந் தழையுந் தின்னுந் திரவிய மதுவும் போல
வுய்த்திடுஞ் செய்தி கெட்டே யுறுவிக்கும் பலத்தை யென்னின்
வைத்திடுஞ் சோறும் பாக்கு மருந்தினர் வயிற்றின் மாய்ந்தான்
மெய்த்திடும் பலமு னக்கு மலமலால் வேறு முண்டோ.

(கொ-டு) செயல்களே பலத்தைச் செய்யும் இங்குத் தெய்வம் வேண்டா என்னின் முயலும் இச்செயல்கள் இங்கே முழுவதும் அழியும் எங்கே பயனளிப்பன வயலிடுந் தழையுந் தின்னும் மருந்தும் கெட்டேபின் பலிக்கும் ஆபோல் அழிந்தே பலன்களைப் பண்ணும் எனவும் பலத்தை உறுவிக்கும் எனவும் உனக்கு மெய்த்திடும் பலம் எனவுங் கூட்டுக.

(பொ-ரை) மேற்கூறியவாறு தண்டித்தலால் நல்வழி நடந்தே பயன்பெறுதல் சித்தித்தலின் வினைகளே பயனைத்தரும் ஆதலின் வினைப்பயனைத் தருவதற்கு இறைவன் வேண்டாமென்னில் செய்த அவ்வினைகள் செய்தபொழுதே முழுதும் கெட்டொழிவனவாம். அவ்வினைகள் பின்னின்று பயன் தருதல் செல்லாது எனமறுக்க வயலின் கண்ணிட்ட தழைகளும் உண்ணப்பட்ட மருந்துகளும் கெட்டு பின்னே பலிக்குமாறு போல வினையுங் கெட்டு பலத்தைப் பொருந்தச் செய்யுமெனின் உண்ணப்பட்ட சோறுமுதலிய உணவுகளும் பாக்கு முதலியனவும் உண்டார் வயிற்றின்கண் கெடப்பெற்றால் அம்மெய்யின் கண்ணதாய் வரும் பலன் மலமன்றி வேறில்லை யாதலின் கெட்டவை பயன்றருமென்பது தழை மருந்து முதலிய சிலவற்றி னன்றி எல்லாவற்றினுஞ் செல்லாது ஆதலின், வினைகெட்டுப் பலன்தருமென்றல் பொருந்தாது.(எ... று)

கெட்ட இடத்தில் பலன்தரும் தழை முதலியன பிறிதோரிடத்தில் பலன்தரும் வினைக்கு உவமையாகாதெனவும் அக்கினியில் காய்ச்சிய இரும்பில் சுவறிக்கெட்ட நீர் பிறிதோரிடத்தில் பலன்

தாததுபோல் கெட்டவினை பிறிதோரிடத்திற் பலன்தரா தேனவுங் கூறுகின்றது.

திரவிய முவமை யன்று செய்திக்கட் டிரவி யங்கள்
விரவிய விடத்தே வீந்து பலந்தரு மிம்மை யம்மை
பரவிநீ பார்நீ ரங்கி பாத்திரத் திட்ட வெல்லாங்
கரவிடு மிங்கே யெங்கே பலன்கொளக் கருதினாயே.

(கொ-டு) திரவியங்கள் விரவிய இடத்தே வீந்து பலந்தரும் இம்மை அம்மைசெய்திக் கண் திரவியம் உவமையன்று அங்கி பாத்திரத்து இட்டநீர் எல்லாம் இங்கே கரவிடும் எங்கே பலன் கொளக்கருதினாயே நீ பரவிப்பார்.

(பொ-ரை) மேல் எடுத்துக்காட்டிய தழைமுதலிய பொருள்களும் தாம் கிடந்த இடத்தே கெட்டு கெட்ட அவ்விடத்தே பலன் தருவனவாம். அவ்வாறன்றி இவ்வுடம்பிற் செய்தவினை இவ்விடத்தே கெட்டு மற்றோர் உடம்பிற் பலன் தருமாகலின் வினைக்கு தழை முதலிய பொருள்கள் உவமையாகாவாம். தானமாகத் தண்ணீரிலும் யாகமாக அக்கினியிலுஞ் சேர்க்கப்பட்ட பொருள்கள் அவ்விடத்துக்கெட்டு மற்றோரிடத்தில் பலிக்குமெனக் சொல்வதுபோல் வினையுங்கெட்டுப் பலன்தருமென்று கூறுவோமெனின் தீயொழுகக் காய்ந்த பாத்திரத்தில் இட்ட நீர் முதலியன இவ்விடத்துக் கெட்டுப்போதலையன்றி வேறிடத்துப் பலன்தருதல் காணப்படாமையால் தானமாகவும் யாகமாகவுங் கொடுத்துக் கெட்டபொருள் பிறிதோரிடத்திற் பலன்தராது. அப்பொருளால் செய்யும் தானம் யாகமென்ற வினையே பிறிதோரிடத்துப் பலன்தரல் வேண்டும். அவ்வினை சடமாதலின் தானே பயனாகி வருமென்றல் கூடாது. இவ்வுண்மையை நன்கு விசாரித்து ஆராய்வாயாக. (எ...று) (கக)

செய்தவர் மனத்தில் வினைகிடந்து வேறிடத்திற் பலன்தருதலால் இடவேற்றுமை கொண்டு தழை உவமை பொருந்தா தேன்றல் கூடா தேன்பாரை மறுத்துரைக்கின்றது.

செய்தவர் மனத்தே யெல்லாச் செய்தியுங் கிடந்து பின்ன
ரெய்தவே பலன்க ளீனு மென்றிடி னிருஞ்சு வர்க்கம்
பொய்யர்வாழ் நரகம் பூமி புந்தியிற் கிடந்து போந்த
தையனே யழகிதுன்சொ லிந்திர சால மாய்த்தே.

(கொ-டு) ஐயனே உன்சொல் அழகிது இந்திரசாலம் ஆய்த்தே.

(பொ-ரை) வினை செய்தவர் மனத்தின்கண்ணே எல்லா வினைகளுந் தங்கிப் பின்னர் பொருந்தவே பலன் தருமாதலின் வயலின் கண் தழை கெட்டு பலன் தருதலாகிய உவமை கூடா தென்றது பொருந்தா தென்று கூற, வினைக்குப் பயனுவன சுவர்க்கம், நரகம், பூமி யென்னும் இவற்றுட்பட்ட பல்வேறுவகை, புவன போகங்களேயாம். அவை யனைத்தும் வயலின்கண் விளைவு போல ஆன்மபோதத்தின் கண் கிடந்து உளவாக வேண்டுமே அவ்வாறுளவா மென்றல் ஐயனே உனதழகிதாகிய சொன் மாத்திரையே யன்றிப் பொருள்படாத இந்திரசாலம் போலவுமாம். (எ—று) (உ0)

செயல்யாவுஞ் செய்பப்படுகின்ற பொருளிற் கிடந்து பலன்றரு மென் பாரையு மறுத்து வினைப்பலன் றருதற்கு இறைவன் வேண்டு மெனவும் தருதல் அவன் கடமை யெனவும் கூறுகின்றது.

தானஞ்செய் பொருட ளித்தோர் செய்தவர் தக்க செய்தி
யூனம்பின் னுறவே காண்டும் பலமுறு விப்பான் வேண்டு
மீனமில் செய்தி யீச னிடும்பணி யிவைநாஞ் செய்தா
னூனங்க ளதிக நோக்கி நுகர்விப்பன் வினைநோய் தீர.

(கொ-டு) பின் ஊனம் உறவே காண்டும் எனவும் வினைநோய் தீர நுகர்விப்பன் எனவுங் கூட்டுக.

(பொ-ரை) வினையானது செய்தவர் மனத்தின் கட்கிடந்து பலன்றரு மென்றல் பொருந்தாதாயினுஞ் செயப்படுகின்ற பொருளிற் கிடந்து பின்னர் பலன்றரு மெனக்கொள்வோ மெனில் தானஞ் செய்யப்பட்ட பொருளும் தானத்தை ஏற்றோருந் தானஞ் செய்தோரும் தானமாகிய செயலும் ஆகிய அனைத்தும் நிலையின்றிக் கெட்டொழிவனவேயாம். ஆதலால் நிலை பேறுடைய முதற் கடவுளே அவற்றை யறிந்து பலன் றரல் வேண்டும். அம்முதற் கடவுள் பலன்றருதற்குச் சம்பந்தமென்னை யெனின் முயற்சி யெல்லாம் முன் வினைப்பயனை அனுபவித்தற் பொருட்டு முதல்வனாற்றரப்படுகின்ற ஏவல் வினையாதலால் அவ்வேவல் வினையாகிய முயற்சியை நாம் செய்தோ மென்னு முனைப்பால் செய்யின் அம்முனைப்புத் தீருதற்பொருட்டு அம்முயற்சியினுலாகிய பாவ புண்ணியங்களை அறிந்து அப்பாவ புண்ணியமாகிய வினை நோய் தீருதற் பொருட்டுப்பலன்றருதல் அவ்விறைவனுக்குக் கடப்பாடாம். (எ—று)

வினை செய்வதாகிய உயிரொன்றும் அவ்வினை நிகழ்தற்குரிய துணைகள் ஏழும் ஆக எட்டு முதல் நிலைகளும் சிற்றறிவுடையதும்

கூடுமாதலின் முற்றறிவுடைய முதல்வனுக்கு வினைப்பயனைக் கூட்டுவித்தல் கடைமையாயிற் றெனக் கூறுகின்றது.

உலகுடல் கரணங் கால முறுபல நியதி செய்தி
பலவிவை கொண்டு கன்மம் பண்ணுவ துண்ப தானு
னிலவிடா திவைதாஞ் சென்று நினைந்துயிர் நிறுத்திக் கொள்ளா
தலகிலா வறிவ னாணை யணைத்திடு மருளி னாலே.

(கொ-டு) இவைதாஞ் சென்று நிலவிடாது.

(பொ-ரை) முயற்சிக்கு முதற்கருத்தாவாகிய உயிரானது அவ்வுயிர் தங்குதற் கிடமாகிய உடல், உடலிற் பொருந்திய கருவிகளாகிய கரணம், வினைசெய்தற்குரிய காலம், வினை செயப்படுகிறன்ற பொருள், அப்பொருளைக்கூட்டுகின்ற நியதி, செயல், பயன் ஆகிய எழுமுதல் நிலைகளையும் துணையாகக் கொண்டு வினைகளைச் செய்தலும் அனுபவித்தலும் கூடு மென்பது எல்லார்க்கும் ஒப்ப முடிந்ததாம். அவ்வேழு முதல் நிலைகளும் உயிரை யின்றித் தாமே தொழிற்பட மாட்டாத சடமாதலால் அவை தாமே உயிரை வந்து கூடமாட்டா. அம் முதல் நிலைகளையின்றி அறிவு தொழிற்படமாட்டாத அவ்வுயிர் அம்முதல் நிலைகளை தானே கருதி நிறுத்திக் கொள்ளாது. உயிரும் ஏனைய முதல் நிலைகளும் இவ்வாறாகலின் பாரிசேட அளவையானே அளவிட்டறிதற்கரிய சுதந்தர அறிவினனாகிய முதல்வனே தனது ஆணையாகிய திருவருளால் உயிருக்கு அவ்வேழு முதல் நிலைகளைக் கூட்டுவிப்பன். ஆதலால் அம்முதல் நிலைகளோடு கூடிச் செய்யும் செயல்களெல்லாம் இறைவன் கட்டளையேயாம். (எ—று) (உஉ)

இறைவனாற் கூட்டும் வினைப்பயனாகிய அக்கட்டளை நல்லனவாயின் அறமாயும் தீயனவாயின் பாவமாயும் இருதிறப்படு மேனக் கூறுகின்றது.

ஒழுக்கமன் பருளா சார முபசார முறவு சீலம்
வழுக்கிலாத் தவந்தா னங்கள் வந்தித்தல் வணங்கல் வாய்மை
யழுக்கிலாத் துறவ டக்க மறிவொடர்ச் சித்த லாதி
யிழுக்கிலா வறங்க ளானு லிரங்குவான் பணிய றங்கள்.

(பொ-ரை) வினைப்பயனை அனுபவிப்பதற்காக இறைவனாற் றரப்படும் கட்டளையாகிய செயலானது உலகத்தோடொட்ட ஒழுகுதலுடைமை, யாவர் மாட்டும் அன்புடைமை, அருளுடைமை, வேதாகமங்களில் விதித்தவாறு அனுட்டித்தலுடைமை, தக்கோர் மாட்டுச் செய்யும் உபசரிப்புடைமை, யாவர் மாட்

டும் கலைப்புடைமை, நற்குணமுடைமை, ஐம்பொறியடக்கல் விரதங் காத்தல் முதலிய குற்றமில்லாத தவமுடைமை, தக்கோர்மாட்டு உவகையோடு செய்யும் தானங்களுடைமை, தன்னின் மூத்தார் மாட்டு தோத்திரஞ் செய்தலுடைமை, நமஸ்காரஞ் செய்தலுடைமை, சத்தியமுடைமை, பிறர் மனைவிழையாமை, வரைவின் மகளிர் விழையாமை முதலிய குற்றமில்லாத ஆண்தகைமையுடைமை, தீ நெறிக்கட் செல்லாது அடங்குதலுடைமை, தக்கன இவை, தகாதன இவை எனப்பகுத்தறி வுடைமை, தன்னின் மூத்தார் மாட்டு அர்ச்சித்தலுடைமை ஆகிய பதினாறும் மற்றும் அவைபோல்வனவுமாகிய குற்றமில்லாத நல்வினைகளாயின் கருணையினாற் றரப்பட்ட அக்கட்டளை அறமாய் முடியும். தீவினைகளாயின் பாவமாய் முடியும் (எ--று) (உ௩)

நல்வினையினுள்ளும் சிறந்ததாகிய கடவுள் வழிபாடு தத்தம்மதத்திற் கேற்றவாறு செய்யினும் மேல் சிவன்முத லென்றதனோடு முரணாது அவ்வழிபாட்டிற்குப் பயன் சிவபெருமானே தருவனெனக் கூறுகின்றது.

மனமது நினைய வாக்கு வழுத்தமந் திரங்கள் சொல்ல
வினமலர் கையிற் கொண்டங் கிச்சித்த தெய்வம் போற்றிச்
சினமுத லகற்றி வாழுஞ் செயலற மானால் யார்க்கு
முனமொரு தெய்வ மெங்குஞ் செயற்குமுன் னிலையா மன்றே.

(கொ-டு) சினம் முதல் அகற்றி அங்கு இச்சித்ததெய்வம் மனமது நினையவாக்கு வழுத்த மந்திரங்கள் சொல்ல கையில் இனமலர்கொண்டு போற்றிவாழும் செயல் அறமானால் யார்க்கும் முனம் ஒருதெய்வம் எங்குஞ்செயற்கு முன்னிலையாம் அன்றே.

சினமுதலகற்றி யென்பதை அகற்றிக்கு என விரித்து அகற்றுவானுக்கு என உரைக்க.

(பொ-ரை) மேற்கூறிய ஒழுக்கமுதலிய நன்மைகளை உடையனாய் அவற்றின் மறுதலையாகிய தீமைகளை நீக்கி ஒழுகுவானொருவன் தன் கருத்துக்குப் பொருந்தியதொரு கடவுளை மனத்தால் நினைந்து வாக்காற் றுதித்து அக்கடவுட்குரிய மந்திரங்களை உச்சரித்து கைகளால் பல மலர்களைக்கொண் டர்ச்சித்து, வழிபட்டு வாழுஞ் செயலாகிய அறமுடையனாயின் அவனுக்கு முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளாகிய சிவபெருமானே அவன் வழிபடும் தெய்வத்தினிடமாக நின்று அச்செயலை ஏற்றுக்கொண்டு பயன் கொடுப்பன். (எ...று) (உ௪)

ண்டனையும் அறிதற்குரியது எதுவென்னும் சந்தேகத்தை நிவர்த்தித்தற்பொருட்டு ஏழாஞ்சூத்திரம் எழுந்தது. இச்சூத்திரத்தாற் பதி பாச மிரண்டனையும் அறிதற்குரிமையுடையது பசுவெனக்கூறுகின்றார்.

மேலைச்சூத்திரத்துள் பதி இலக்கணம் கூறியவிடத்து ஆன்மாவால் பதி, அறியப்படுமென்று கூறி இருக்கவும் இவ்விடத்தும் அறிதற்குரிமையுடையது ஆன்மாவென்று கூறுதல் கூறியது கூறலாகாதோவெனின், ஆகாது. எவ்வாறெனின், பதி அறியப்படும் பொருளோ அறியப்படாத பொருளாவென்னும் ஆசங்கைக்குஉத்தரமாக ஆன்மாவினால் அறியப்படும் பொருளென்று அவ்விடத்து பதிக்கு இலக்கணங்கூறினர். இவ்விடத்து பதியை அடையும் முறைமையில் சாதனஞ்செய்து அடைதற்குரியது ஆன்மாவென அதிகாரி இயல்பு கூறுகின்றார் ஆதலின் கூறியது கூறலாகாமையறிக.

பாசத்தைப் பதி அறியாது, பதியைப் பாசமறியாதெனக் கூறுகின்றது

அனைத்துஞ்சத்தென்னிலொன்றையறிந்திடாதசத்தாலென்னின்
முனைத்திடா தசத்துச் சத்தின் முன்னிருளிரவி முன்போ
னினைப்பதிங் கசத்தே யென்னிற் சத்தின்முன் னிலாமை யானுந்
தனைக்கொடொன் றுணர்த லானுந் தானசத் துணரா தன்றே.

(கொ-டு) சத்து அனைத்தும்(அறிவது)என்னின் ஒன்றை அறிந்திடாது அசத்தால் (அறிவது) என்னின் இரவிமுன் இருள்போல் சத்தின்முன் அசத்து முனைத்திடாது இங்கு அசத்தே நினைப்பது என்னின் சத்தின் முன்னிலாமையானும் தனைக்கொடு ஒன்று உணர்தலானும் அசத்துத்தான் உணராதன்றே.

(பொ-ரை) மேலைச்சூத்திரத்திற் கூறியவாறு சத்து அசத்தினையும் அசத்து சத்தினையும் அறியாதாயின் அறியப்படாதபொருள் பயனில்லை எனப்பட்டு வழுவாம். ஆதலின் அவ்விரண்டனையும் அறியும் பொருள் யாதெனவினவுமிடத்து சத்தாகியசிவமே அசத்தாகிய பாசமனைத்தினையும் அறியுமென சிவாத்துவித சைவர் கூறுவர். சத்தாகிய சிவம் வியாபக அறிவாதலால் எவற்றினையும் உடனாய் நின்று ஒருசேர அறிந்து நிற்பதன்றி தனித்தனி பிரித்து ஒன்றையும் அறியாது என்று மறுக்க அவ்வாறு சிவம் வியாபக அறிவாயினும் உயிரின்பொருட்டு அசத்தாகிய கருவி காரணங்களைக்கூடிநின்று பகுத்தறிதல் கூடுமென்பர். இரவி முன் இருள்போல சிவசந்நிதியில் அசத்தாகிய கருவி காரணங்கள் முனைத்து நில்லாமையால் சிவம், கருவி, காரணங்களிடமாக நின்று

பகுத்தறியுமென்பதுங்கூடாது என்றவிடத்து விகாரமின்றி நிற்கும் ஆன்மாவின் சந்நிதியில் அசத்தாகிய கருவியே சிவகரணமாய் நின்று சத்தாகிய சிவத்தை அறியுமென சிவசங்கிராந்தவாதிகள் கூறுவர். அவ்வாறாயின், மேற்கூறியவாறு அசத்தாகிய கருவிகள் சிவ சந்நிதியில் முனைத்து நில்லாமையானும் அக்கருவிதானும் உயிர் அறிவதற்குத் துணையாய் நிற்பதன்றி அதற்குத் தனக்கென அறிவின்மையானும் அக்கருவிகள் சிவகரணமாய் நின்று சத்தாகிய சிவத்தை அறியுமென்பதுங்கூடாது. இவ்வாறு சத்து அசத்தையும் அசத்து சத்தையும் அறியாதென்பது பெறவே பாரிசேட அளவையால் இவ்விரு பொருளின் வேறாய் எஞ்சி நின்ற உயிர்ப்பொருளே இவ்விரண்டையும் பகுத்தறியும். (எ...று.)

இச்செய்யுள் முதனூல் எழாஞ்சூத்திரம்போல முக்கூற்றினையுடையது. அவற்றுள்,

முதற்கூறு—அனைத்துஞ்சத்தென்னி.........................
னிரவிமுன்போல். இவ்விரண்டடியும் சத்து அசத்தை உணராவென்பது.

இரண்டாங்கூறு—நினைப்பதிங்கசத்தே.........................
தான் அசத்துணராதன்றே. இவ்விரண்டடியும் அசத்து சத்தை உணராதென்பது.

மூன்றாங்கூறு—பாரிசேட அளவையால் பதிபாசமிரண்டையும் உயிரறியு மென்பது.

இம்முக்கூற்றினுள் முன்னை இருகூற்றினும் விரிக்கக்கூடியதான சங்கை உத்தரங்களின்மையின் அவற்றை இம்முதற் செய்யுளினால் உணர்த்தியதோடு நிறுத்தி ஏனைய மூன்றாங்கூற்றை மூன்று செய்யுளினால் விரிக்கின்றார். (க)

---

## மூன்றாமதிகரணம்.

---

பதி பாசமிரண்டையும் ஆன்மா அறியுமெனவும் அவ்விரண்டையும் அறியும் முகத்தால் ஆன்மா தன்னை அறியுமெனவும் கூறுகின்றது.

சத்தசத் தறிவ தான்மாத் தான்சத்து மசத்து மன்று
நித்தனுஞ் சதசத் தாகி நின்றிடு மிரண்டன் பாலு
மொத்துட னுதித்து நில்லா துதிபாது தின்றி டாது
வைத்திடுந் தோற்ற நாற்ற மலரினில் வருதல் போலும்.

(கொ-டு) சத்து அசத்துஅறிவது ஆன்மாஉடன்ஒத்துநில்லாதுஉதியாது நின்றிடாது மலரில் நாற்றம் வருதல் போலும் தான் சத்தும் அசத்தும் அன்று இரண்டன் பாலும் உதித்து வைத்திடும் தோற்றம் சதசத்தாகி நித்தனாய் நின்றிடும்.

(பொ-ரை) சத்தும் அசத்தும் மேற்கூறியவாறு ஒன்றனை ஒன்று அறிதற்குரிமையில்லாமையால் அவ்விரண்டனையும் அறிவது ஆன்மாவேயாம். அவ்வான்மா தன்னை அறியுமோ அறியாதோவென வினவின் சத்தையும் அசத்தையும் இது சத்து, இதுஅசத்தென தனித்தறிவதுபோல் ஆன்மா தன்னைத்தனித்தறியமாட்டாது. அவ்வாறறியப்படாமையால் சூனியமுமன்று. மலரினிடத்து வாசனையானது மலர்போல விளங்கித்தோன்றாமலும், சூனியமல்லாமலும் அம்மலரின்கண் அடங்கித் தோன்றுமாறுபோல சத்து அசத்தென்னும் இரண்டின்வேறாகிய ஆன்மாவும் சத்தொடுகூடி தன்னைச்சத்தாயும் அசத்தொடு கூடி தன்னை அசத்தாயும் அறியப்படுவதாம். அவ்வாறறியப்படுவதால் ஆன்மா சதசத்தென்று சொல்லுதற்குரிமையுடையது. (எ...று)

இதனால் ஆன்மா யாதானுமொன்றைச் சார்ந்து நிற்பதன்றி தனித்து நில்லாதென்பதறிக. (உ)

பதி சூக்குமசித்தும் பசு தூலசித்துமாய் நிற்றலால் பசுவைப் பாசம் பற்றுமெனவும் அப்பற்றுதல் அநாதியெனவும் அப்பற்றுதலே பதிபாசம் இரண்டனையும் அறிதற்குக் காரணமெனவும் பதி பசு பாசத்திற்கு உவமையுங் கூறுகின்றது.

சுத்தமெய்ஞ் ஞான மேனிச் சோதிபா லசத்தஞ் ஞான
மொத்துறு குற்ற மெல்லா முற்றிடு முயிரின் கண்ணே
சத்துள போதே வேறாஞ் சதசத்து மசத்து மெல்லாம்
வைத்திடு மநாதி யாக வாரிநீர் லவணம் போலும்.

(கொ-டு) மெய்ஞ்ஞான மேனிச்சுத்த சோதிபால் அசத்து அஞ்ஞானம் ஒத்துறு உயிரின்கண்ணே குற்றமெல்லாம் உற்றிடும் சத்து உளபோதேவேறாம் சதசத்தும் அசத்துஎல்லாம் அநாதியாக வைத்திடும் வாரி நீர் லவணம் போலும்.

(பொ-ரை) பதியும் பசுவும் சித்துப்பொருளாகவும் பதியின்முன் முனைத்து நில்லாத பாசம் பசுவினாலறியப்படுவதாய் அப்பசுவின்முன் முனைத்து நிற்றற்குக் காரணம் என்னையோவெனின், பதியும் பசுவும் சித்து என்னும் சாதி ஒற்றுமையால் பொதுவகையாக ஒக்குமாயினும் அவற்றுள் உண்மை ஞானமே

சொரூபமாக உடைய பதி சூக்குமசித்தாதலால் அப்பதிமுன் அசத்தாகிய பாசம் முனைத்து நில்லாது. பசுவாகிய உயிர் தூலசித்தாதலின் அப்பசுமுன் பாசம் முனைத்துநிற்கும். உயிருக்கு இவ்வியல்பு எக்காலத்து உண்டாயிற்றெனின், சத்தாகிய சிவம் என்று உள்ளது? அன்றே சதசத்தாகிய உயிர்களும் உள்ளன வாய் அன்றே அவ்வுயிர்களை அசத்தாகிய பாசம் பற்றி நிற்கும். இவ்வாறு நிற்றல் எதுபோலவெனின்? நீருக்கு இடங்கொடுத்திருக்கும் ஆகாயமாகிய கடலும், நீரும், உப்பும் போலவாம். (எ...று)

ஆகாயமாகிய கடலும், நீரும், உப்பும் அனாதியேயாகவும் ஓரிடத்திலிருப்பவும் அவற்றுள் உப்பானது இடமாகிய ஆகாயத்தைப் பற்றாது நீரைப்பற்றிநிற்கும். அவ்வாறு பற்றாமைக்கும்பற்றுவதற்கு ங்காரணம் ஆகாயத்தின்சூக்குமமும் நீரின்தூலமுமேயாம். இதுபோலப் பதி பசு பாசம் மூன்றும் அனாதியாய் ஓரிடத்திருப்பினும் பாசம் சூக்குமாகிய பதியைப்பற்றாது, தூலமாகிய பசுவைப்பற்றி நிற்கும். அவ்வாறு பற்றுவதற்குப்பசுவின் தூலத்தன்மையே காரணம். அப்பாசப்பற்றே பதியைப் பசு அறிதற்குங் காரணமாயிற்று. எவ்வாறெனின், பாசத்தைப்பற்றி நிற்றலால் துன்பமெய்திய உயிர் துன்ப நீக்கத்தை வேண்டி பாசத்தினின்றும் நீங்கி பதியைப்பற்றி நின்று அப்பதியை யறியுமென்க. (௬)

சிவம் சூக்குமசித்தாவதற்கும் சீவன் தூலசித்தாவதற்குங் காரணம் பற்றுந்தன்மையின்மையும் பற்றுந்தன்மை யுண்மையுமே னக் கூறுகின்றது.

அறிவிக்க வறித லானு மழிவின்றி நிற்ற லானுங்
குறிபெற்ற சித்துஞ் சத்துங் கூறுவ துயிருக் கீச
னெறிநித்த முத்த சுத்த சித்தென நிற்ப னன்றே
பிறிவிப்பன் மலங்க ளெல்லாம் பின்னுயிர்க் கருளி னாலே.

(கொ-டு) அறிவிக்க அறிதலானும் (அறிந்தபின்) அழிவின்றி நிற்றலானும் உயிருக்குக் குறிபெற்ற சித்தும் சத்துங் கூறுவது ஈசன் உயிர்க்கு மலங்களெல்லாம் பின் அருளினாலே பிறிவிப்பன் நெறிநித்த முத்த சுத்தசித்(து சத்)தென நிற்பன் அன்றே.

(பொ-ரை) சிவம் சூக்கும சித்தென்பதும் சீவன் தூலசித்தென்பதும் எதனாலறியப்படுகின்றனவெனின்; உயிர் தன்னறிவுதொழிற்படவேண்டுமாயின் சகலத்தில் கருவிமுதலிய துணையையும் சுத்தத்தில் திருவருட்டுணையையும்

இன்றி முடியாமையால் தூலசித்து. அவ்வாறறிந்து என்றும் அழிவின்றி நிற்றலால் தூலசத்துமாம். சிவம் தனக்கொரு துணைவேண்டாது தானே அறியும் முறைமையினை யுடையதால் சூக்குமசித்து. உயிர்க்கு மலத்தை அருளால் நீக்கித் தன்னுண்மையினை அறிவிக்கும் உயிர்த்துணையாத லுடைமையால் சூக்குமசத்துமாம். (எ...று)

தூலசித்தென்பது பிறபொருளாகிய தூலத்தைக் கொண்டறியுங் காரணத்தால் வந்தது. இது பிறவொளியைக் கொண்டறியுங் கண்ணொளி போலவாம். சூக்கும சித்தென்பது பிறபொருளாகிய தூலம் வேண்டாது தானே அறியுங் காரணத்தால் வந்தது. இது தானே அறியும் சூரியனொளிபோலாம். மேலைச்செய்யுளில் பதி, பசு, பாசம் மூன்றுக்கும் கடல், நீர், உப்பை உவமை கூறியது அம்முப்பொருள்களின் இருப்புக்கும் பாசம் பசுவைப்பற்றுதற்கும் பதியைப் பற்றாமைக்கும் எனவும், இவ்விடத்துக்கூறிய சூரியனொளி கண்ணொளி உவமை அம்முப்பொருள்களின் இலக்கணமாகிய வியாபகத்திற்கும் பாசம் பதியைப் பற்றாது பசுவைப் பற்றுவதற்குக் காரணம் பற்றுந்தன்மை பசுவிற்கு உண்டெனவும் பதிக்கு இன்றெனவும் உணர்த்துதற்கும் எனவும் அறிக. எவ்வாறெனின், கடல் நீர் உப்பு உவமை பதி பசு பாசம் மூன்றும் அநாதியே உள்ளனவென்றும் பாசம் பதியைப் பற்றாது பசுவைப்பற்றுமெனவும் உணர்த்தும். சூரியனொளி பதிக்குப்பூரண வியாபகமுண்டென்பதையும் கண்ணொளி பசுவுக்கு ஏகதேச வியாபகம் உண்டென்பதையும் உணர்த்திக் கண்ணொளியை மறைக்கும் இருளுக்கு சமவியாபகங் காணப்படுதல்போல பல உயிர்களோடுங்கலந்து நிற்கும் பாசத்திற்குச் சமவியாபகமுண்டென்பதையும் உணர்த்தும். சமவியாபகமாவது மறைக்கப்படும் பொருளின் சக்திக்குக் குறையாமலும் கூடாமலும் அதனளவாக நிற்றல். குறையின் ஒருகாலத்துத்தானே நீக்குதல் கூடும். கூடின் எக்காலத்தும் எவராலும் நீக்குதல் கூடாது. ஆதலின் நீக்கப்படும் பாசம் சம வியாபகமாய் நின்றது. இவ்வாறு இருப்புக்கும் இலக்கணத்திற்கும் கூறிய உவமை வேறுபாடு கண்டுகொள்க. (௪)

மூன்றும் அதிகாரணம் முடிந்தது

ஏழாஞ்சூத்திரம் முடிந்தது.

ஆகத் திருவிருத்தம் உ௫௨.

# எட்டாஞ் சூத்திரம்.

---

மேலைச்சூத்திரத்தால் பதிப்பொருளை அடைவதற்கு உயிர் உரிமையுடையது எனக் கூறியதனால் அவ்வுயிர் பதிப்பொருளை எவ்வாறடையு மென ஆசங்கை நிகழுமன்றே? அந்நிகழ்ச்சி பற்றி செய்ய வேண்டுவது இது வென்று கூறுதற்கு எட்டாஞ் சூத்திரம் எழுந்தது.

அடைதற்குரிய உரிமை தனக்கே உண்டென்பதை உணர்ந்த உயிர்க்கு பதியை அடைதலாகிய அப்பேறு தனக்கு வேண்டுமென்பதையும், அப்பேறடைவதற்குச் சிறந்த சாதனம் இது வென்பதையும், அச்சாதனம் எவ்வாறு வருமென்பதையும் அறிந்தாலன்றி பதியை அடைதற்குரிய மன எழுச்சி கூடாது. ஆதலால் உயிர்க்கு மனவெழுச்சி உண்டாகும் பொருட்டு பதியை அடைய வேண்டிய தவசிய மென்றும், அதற்குச் சிறந்த சாதனம் இது வென்றும், அது ஞான சற்குருவால் வருமென்றும் மூவகையாகப் பிரித்து செய்ய வேண்டுவதை இச்சூத்திரத்தாற் கூறுகின்றார்.

இறைவன் குருவாகி வந்து உணர்த்துவனென சூத்திரப் பொருளைத் தொகுத்துக் கூறுகின்றது.

மன்னவன்றன் மகன்வேட ரிடத்தே தங்கி
வளர்ந்தவனை யறியாது மயங்கி நிற்பப்
பின்னவனு மென்மகனீ யென்றவரிற் பிரித்துப்
பெருமையொடுந் தானாக்கிப் பேணு மாபோற்
றுன்னியவைம் புலவேடர் சுழலிற் பட்டுத்
துணைவனையு மறியாது துயருறுந்தொல் லுயிரை
மன்னுமருட் குருவாகி வந்தவரி னீக்கி
மலமகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன்.

(பொ—ரை) அரச குமாரனாகிய ஒருவன் பிள்ளைமைப் பருவத்து மடமையால் வேடரிடத்துப் பொருந்தி அவ்வேடன் வசமாய் நின்று தன் ஜாதிக்குரிய பெருந் தகைமையினை இழந்து இழிதொழில் செய்து வளர்ந்து தந்தையாகிய அரசனையும் தன்னையும் அறியாது மயக்கத்தைப் பொருந்தி நிற்

குங்கால் பின்பு தந்தையாகிய அவ்வரசன் வந்து மகனைப் பார்த்து "நீ வேட குமாரனல்லன், என்மகனென்று அறிவுறுத்தி அவ்வேடரினின்றும் அவனை நீக்கி அரசகுமாரனுக்குரிய பெருந் தகைமையுடன் அரசனாகிய தானும் வண்ணஞ் செய்து போற்றுமாறு போல, நிலைபெற்ற உயிர் தன்னிலையினின்று வேறு பட்டு நெருங்கிய ஐம்பொறியாகிய வேடருடைய சுழலிற்பட்டு அறிவினை இழந்து தன்னை அறியாமையே யன்றி தலைவனையும் அறியாது வருந்துவதை அறிந்து அவ்வுயிர் செய்த மிகுந்த தவமுதிர்ச்சியால் இரங்கி நித்த முத்த சுத்தசித்தெனப்படும் தலைவனாகிய அவ்வீசன் குருவடிவங் கொண்டெழுந்தருளி வந்து தன்னையும் தலைவனையும் அறியும் வண்ண முணர்த்தி அவ்வைம் பொறியினின்று நீங்குதற்கு அதனோடு கூடும்படி செய்த மலவலியைக் கெடுத்து அதனின்றும் மீட்டிப் பழைய நிலையாகிய தன் வண்ணமாக்கி அவ்வுயிரை மலர்போலும் தனது திருவடிக்கீழ் வைத்து வாழ்விப்பன். (எ—று)

இச்செய்யுள் முதனூல் எட்டாஞ்சூத்திரம்போல நான்கு கூற்றையுடையது. அவற்றுள்

முதற்கூறு—குருவாகி வந்துணர்த்தி.

இரண்டாங்கூறு—மன்னுமருளால் உணர்த்தி.

மூன்றாங்கூறு—மன்னவன்றன்.................................. பேணுமாபோல் துன்னிய ஐம்புல வேடர் சுழலிற்பட்டு துணைவனையும் அறியாது துயர் உறும் தொல்லுயிர்.

நாலாங்கூறு—அவரினீக்கி மலமகற்றி தானாக்கி மலரடிக் கீழ் வைப்பன்.

முதற்கூற்றிலும் இரண்டாங் கூற்றிலும் உணர்த்தி யென்பது வருவிக்கப்பட்டது. (க)

---

# முதலதிகாரணம்.

## குருவாகி வந்துணர்த்தி என்பது:

உணர்த்தும் முறையில் தீக்கையால் உணர்த்துவனாதலின் அத்தீக்கை சாதார தீக்கை நிராதார தீக்கை என இருவகைப்படுமெனவும், சாதார தீக்கைக்குரியார் சகலரும் நிராதார தீக்கைக்குரியார் பிரளயாகலரும் விஞ்ஞானகலருமெனவுங் கூறுகின்றது.

உரைதருமிப் பசுவர்க்க முணரின் மூன்று
முயரும்விஞ்ஞா னகலர்பிர ளயாகலர் சகலர்
நிரையின்மல மலங்கன்ம மலங்கன்ம மாயை
நிற்குமுத லிருவர்க்கு நிராதார மாகிக்
கரையிலருட் பரன்றுவிதா சத்திநிபா தத்தாற்
கழிப்பன்மலஞ் சகலர்க்குக் கன்ம வொப்பிற்
றரையிலா சான்மூர்த்தி யாதார மாகித்
தரித்தொழிப்பன் மலஞ்சதுர்த்தா சத்திநிபா தத்தால்.

(கொ-டு) உரைதரும் இப்பசு உணரின் உயரும் விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் மூன்றுவர்க்கமாம் நிரையின்மலம் மலம்கன்மம் மலம்கன்மமாயை நிற்கும் சகலர்க்கு கன்ம ஒப்பில் சதுர்த்தா சத்திநிபாதத்தால் தரையில் ஆசான் மூர்த்திதரித்து ஆதாரமாகி மலம் ஒழிப்பன் முதல் இருவர்க்கும் துவிதாசத்திநிபாதத்தால் கரையி லருட்பரன் நிராதாரமாகி மலங்கழிப்பன்.

விஞ்ஞானகலரென்பது செய்யுளாதலின் விஞ்ஞான கலரென நின்றது.

(பொ-ரை) பதியைஅடைதற்கு உரிமைஉடையதெண மேற்கூறியஆன்மாக்கள் எண்ணிறந்தன. ஆராயுமிடத்து அவ்வான்மாக்கள் உயர்ந்த விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலரெனமூவகைப்படுவர். அவருள் விஞ்ஞானகலர் ஆணவமலம் ஒன்றுடையர். பிரளயாகலர் ஆணவமலம், கன்மமலம் இரண்டுமுடையர். சகலர் ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலமும் உடையர். அவருள் மும்மலங்களுமுடைய சகலவருக்கத்து உயிர்கள் இருவினையொப்பால் மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதர மென்னும் நால்வகையான சத்திநிபாதத்தைப் பொருந்துதற்குரியர். ஆதலால் அச்சகலவர்க்கத்துயிர்களுக்கு இருவினை ஒப்பு வந்தவிடத்து பொருந்திய சத்திநிபாதத்திற்கேற்ப உணர்த்தவேண்டுவதுமுறைமையாதலின்? அவ்வாறுஉணர்த்துவதற்கு இவ்வுலகின்கண் இறைவன்குருமூர்த்தியைஆதாரமாகக்கொண்டுதோன்றி சாதாரதீக்கைசெய்து மலத்தை நீக்குவன். பிரளயாகலராகிய உயிர்கள் தீவிர தீவிரதர சத்திநி பாதத்தைப் பொருந்துதற்குரியராதலால் அவருக்கு இறைவன் மான்மழு சதுர்ப்புஜங்களுடைய திருமேனியோடுதோன்றி நிராதாரதீக்கைசெய்து மலத்தைநீக்குவன். விஞ்ஞானகலராகிய உயிர்கள் தீவிரதர சத்திநிபாதத்தைப் பொருந்துதற்குரியராதலால் அவருக்கு அளவிடுதற்கரிய கருணைவடிவாகிய இறைவன் அவரறிவின் உள்ளீடாகநின்று உணர்த்தி உணர்த்துமுறையில் நிராதாரதீக்கைசெய்து மலத்தை நீக்குவன். ()

சகலர் பிரளயாகலர் விஞ்ஞானகலர் என ஆன்மாக்களை வகுத்ததற்குக் காரணம் என்னை? யெனின், கலர் என்பது கலையை உடை-

யவரெனப் பொருள் படும். படவே கலை முதலிய தத்துவங்களோடு கூடிய ஆன்மாக்களைச் சகலரென்றும், கலை முதலிய தத்துவங்களைப் பிரளயத்தில் நீக்கப் பெறும் ஆன்மாக்களைப் பிரளயாகலரென்றும், கலை முதலிய தத்துவங்களை விஞ்ஞானத்தால் நீக்கப் பெறும் ஆன்மாக்களை விஞ்ஞானாகலரென்றும் பிரித்தவாறும். பிரளயாகலரென்பதை பிரளய அகலரென்றும், விஞ்ஞானாகலரென்பதை விஞ்ஞான அகலரென்றும் பிரித்து பிரளயத்திற் கலையற்றவர் விஞ்ஞானத்தால் கலை யற்றவர் எனக் கொள்ளல் வேண்டும்.

இவ்வாறு வருத்ததற்குத் தான் காரணம் என்னை? யெனின், விஞ்ஞானாகலர்—அநாதி கேவலத்தில் ஆன்மாக்களெல்லாம் ஆணவமலத்தால் மறைப்புண்டு கிடக்கும். மலத்தின் சத்திபலவாதலால் மறைப்பும் பல வேறு வகைப்படும். அங்ஙனம் மறைப்புண்டு கிடக்கும் ஆன்மாக்களுக்கு மலநோயைத் தீர்க்கச் சிவபெருமான் திருவுளங் கொண்டருளுவன். கொண்டருளுங்கால் கன்மமல மாயாமலங்களைக் கூட்டாமலே விஞ்ஞானத்தால் ஆணவ மலத்தை நீக்குதற்குரிய மறைப்பினையுடைய ஆன்மாக்களுக்கு விஞ்ஞானத்தால் ஆணவமலத்தை நீக்குவன். விஞ்ஞான மென்பது விசேட ஞானம். அதாவது பாசஞானம் பசு ஞானங்களின்றும் மேம்பட்ட பதி ஞானமாம். இப்பதி ஞானத்தை இறைவன் எவ்வாறு நின்று உணர்த்துவனெனின், அறிவினுள் அறிவாய் நின்று உணர்த்துவனென்க. அவ்வாறு உணர்த்துவதற்குக் கலை முதலிய தத்துவங்களாலாக்கப்படும் சரீரமும் புவனமும் இன்றியமையாது வேண்டப்படும். படவே சுத்த மாயாகாரியமாகிய கலாதி தத்துவங்களாலாக்கப்பட்ட சரீரத்தைக் கொடுத்து அசுத்த மாயைக்கு மேல் வைகும்படி செய்வன். இவ்வாறு கலாதி தத்துவங்களைப் பெற்று விஞ்ஞானத்தால் அத்தத்துவங்களிற் கட்டுப்படா திருத்தலின் விஞ்ஞானாகலரெனப் பெயராயிற்று. இத்தகைய ஆன்மாக்களுக்கு ஆணவமலபந்த மிருத்தலால் இவர் ஒரு மலமுடைய ரெனப்படுவர். இவ்விஞ்ஞானாகலரும் பக்குவர் அபக்குவரென இருதிறப்படுவர். பக்குவர் அப்பொழுதே சிவ சாயுச்சியத்தைப் பெறுவர். அபக்குவர், உத்தமர் மத்திமர் அதமரென முத்திறப்பட்டு உத்தமர், அணுசதாசிவர் முதலியோராய் சதாசிவ தத்துவத்திலும், மத்திமர், அட்டவித்தியேசுவ

ரர் முதலியோராய் ஈசுவர தத்துவத்திலும், அதமர், மூன்றரைக் கோடி தேவர்களாய் சுத்தவித்தியா தத்துவத்திலும் வசித்து அதிகார முடையராய் பிரளயத்திலும் மத்தியிலும் முத்தியடைவர். இந்த விஞ்ஞானகலருக்கு எடுத்த சன்மத்தை யன்றி வேறு சன்மங் கிடையாது. இவ்விடத்துக் கூறிய தேவர்கள் வேறு, சகல வருக்கத்துத் தேவர்கள் வேறு.

பிரளயாகலர்—கன்மமலத்தைக் கூட்டி ஆணவமலத்தை நீக்குதற்குரிய மறைப்பினையுடைய ஆன்மாக்களுக்கு அசுத்தமாயா காரியமாகிய கலாதி தத்துவங்களாலாக்கப்பட்ட சரீரத்தைக் கொடுத்து அவ்வசுத்த மாயையின் மத்தியில் வைகும்படி செய்து பிரளயத்தில் இறைவன் தடத்தத் திருமேனி கொண்டு அருள் செய்வன். இவருக்குப் பிரளயத்தின் பின் பிறவி இல்லாமையால் பிரளயாகலரெனப் பெயராயிற்று. விஞ்ஞானகலரில் பிரளயத்தில் முத்தியடைபவருக்கும் இவருக்கும் வேற்றுமை யென்னையோ? வெனின், விஞ்ஞானகலருக்குக் கன்மமலம் இல்லாமையால் பிரளயம் வரை ஒரு பிறவியே யன்றி மறுபிறவி யில்லை. பிரளயாகலருக்குக் கன்மமலம் உண்மையால் ஒரு பிரளயத்துள் சில பிறவிகளுள. இவையே வேற்றுமையாம். இவர் ஆணவம் கன்மமென்னும் இருமலமுடையர்.

சகலர்—கன்மமலம் மாயா மலத்தைக் கூட்டி ஆணவ மலத்தை நீக்குதற்குரிய மறைப்பினையுடைய ஆன்மாக்களுக்கு அசுத்த மாயா காரியமாகிய கலாதி தத்துவங்களாலாக்கப்பட்ட சரீரத்தைக் கொடுத்து பிரகிருதி மாயையில் வைகும்படி செய்து பக்குவம் வந்த காலத்து இறைவன் குருமூர்த்தியாய்த் தோன்றி நின்று அருள் செய்வன். இவர் ஆணவம் கன்மம் என்னும் இரண்டுடனே மாயா மலமுடையராதலின் மயக்கத்தினால் பிரளயம் வரை பல பிறவிகளை யெடுத்து பிரளயத்தில் கலாதிகளுடன் ஒடுங்கிக் கிடந்து புனருற்பவம் ஆகுங்கால் மீண்டுந் தோன்றி இவ்வாறே பிறப்பிறப்பிற் பட்டுழலுவராதலின் சகலரெனப் பட்டார். தேவர் முதல் எறும்பீறாக உள்ள உயிர்கள் சகலரெனப்படும்.

சகலரிலும் பிரளயாகலத் தன்மை விஞ்ஞானகலத் தன்மை சித்தித்தல் கூடும். அதாவது பிரகிருதி மாயாபுவனப் பற்று நீங்கப்

பெற்றவர் சகலரில் பிரளயாகலராவர். இவருக்கு இறைவன் தடத் தத்திருமேனியைத் தரிசித்தல் கூடும். பிரகிருதி மாயாபுவனம் அசுத்த மாயாபுவனமாகிய இருபுவனங்களின் பற்றும் ஞானத்தால் நீங்கப்பெற்றவர் சகலரில் விஞ்ஞானகலராவர். இவருக்கு இறைவன் அறிவுக்குள் அறிவாய் நின்று உணர்த்துவன் சகலரில் விஞ்ஞானகலத்துவம் வந்தால் மேல் பிறவியில்லை. பிரளயாகலத்துவம் வந்தால் சிலபிறவியுண்டு. மேற்கூறிய விஞ்ஞானகலர் பிரளயாகலர் அநாதியாயுள்ளவர். சகலரில் விஞ்ஞானகலர் பிரளயாகலர் ஆதியாயுள்ளவர்.

சத்திநி பாதமென்பது—சத்திபதிதலெனப் பொருள்படும். அதாவது திருவருட் சத்தியின் விளக்கம் ஆன்ம அறிவின் கண் உண்டாதல். அது மந்ததரமாக உண்டாதலென்பது அதிக மந்தமாக என்றபடியாம்.

அதாவது அருட் சத்தியின் விளக்கம் சிறிது உண்டாகி அதற்கேற்றவாறு சிறிது மல வாசனை நீங்குதல். இதனை மந்ததர முதல் நான்கு வகையாக பிரித்ததின் கருத்து மல வாசனையை நான்கு கூறாக்கியும், அவ்வாறே திருவருட் சத்தியை நான்கு கூறாக்கியும், ஒரு கூறு திருவருட் சத்தி தோன்ற ஒரு கூறு மலவாசனை நீங்குதலை மந்ததர சத்திநி பாத மென்றும், இருகூறு திருவருட்சத்தி தோன்ற இருகூறு மலவாசனை நீங்குதலை மந்த சத்திநி பாதமென்றும், மூன்று கூறு திருவருட்சத்தி தோன்ற மூன்றுகூறு மல வாசனை நீங்குதலை தீவிர சத்திநி பாதமென்றும், நான்குகூறு திருவருட்சத்தி தோன்ற மல வாசனை முற்றும் விடுபடுதலை தீவிரதர சத்திநி பாதமென்றும் பிரித்துக் கூறினர். இதனால் மலபரிபாகமும் நான்கு வகைப்படுமென்பதறிக. மலபரிபாக மென்பது மல சத்தி தேய்தல்.

சகல வர்க்கத்துயிர்கள் பிரகிருதி மாயா புவனவாசிகளாதலால் நால்வகைச் சத்திநி பாதத்தையும் பொருந்துதற்குரியர். பிரளயாகலர் விஞ்ஞானகலருக்கு பிரகிருதி மாயா புவனமின்மையால் மந்ததரம், மந்தமென்னும் இருவகைச்சத்திநி பாதம் இல்லை.

இருவினை ஒப்பு என்பதை முதற்சூத்திரம் ௩௪-வது செய்யுள் உரையிற் கூறியிருக்கின்றமையால் அவ்விடத்துக்காண்க.

சாதார தீக்கை என்பது ஆதாரத்தோடு கூடி நின்று செய்யும் தீக்கை எனப்படும். அதாவது:இறைவன் குருமூர்த்தியை ஆதாரமாகக்கொண்டு நின்றுசெய்யும் தீக்கையாம்.

நிராதாரதீக்கை என்பது ஆதாரமின்றி நின்றுசெய்யும் தீக்கையாம். அது இருவகைப்படும். அவற்றுள் ஒன்று இறைவன் தடத்தத்திருமேனியோடு முன்னின்றுசெய்யும் தீக்கை, மற்றொன்று சொரூபத்திருமேனியாகிய ஞான சொரூபியாய் அறிவினுள் நின்று உணர்த்துவதாகியதீக்கை. (உ)

சாதார தீக்கையாவது நோக்கம் முதலாக பலவகைப்படுமெனவும்,அவற்றுள் அவுத்திரி சிறந்ததெனவும்,அவ்வவுத்திரி,ஞானவதி, கிரியாவதியென இருவகைப் படுமெனவும், அவ்விரண்டும் தனித்தனி நிர்ப்பீசம், சபீசமென இரண்டிரண்டாக நால்வகைப்படு மெனவும் கூறுகின்றது.

பலவிதமா சான்பாச மோசனந்தான் பண்ணும்
படிநயனத் தருள்பரிசம் வாசகமா னதமு
மலகில்சாத் திரம்யோக மவுத்திராதி
யநேகமுள வவற்றினவுத் திரியிரண்டு திறனு
மிலகுஞா னங்கிரியை யெனஞான மனத்தா
லியற்றுவது கிரியையெழிற் குண்டமண்ட லாதி
நிலவுவித்துச் செய்தல்கிரி யாவதிதா னின்னு
நிர்ப்பீசஞ் சபீசமென விரண்டாகி நிகழும்.

(கொ-டு) அவற்றின் அவுத்திரி இலகுஞானம் கிரியைஎன இரண்டுதிறனும் எழிற்குண்ட மண்டலம் ஆதிமனத்தால் கிரியை இயற்றுவதுஞானம் நிலவுவித்துச்செய்தல் கிரியாவதிதான் இன்னும் நிர்ப்பீசம்சபீசமென இரண்டாகி நிகழும்.

(பொ-ரை) சகலவர்க்கத்து உயிர்களுக்கு மலபரிபாகம் மந்ததரம் முதலாக பலவகைப் படுதலின் அவற்றிற்கேற்ப ஆசிரியன் அம்மலத்தைக் கெடுக்கும் படி செய்யும் சாதாரதீக்கையும் இருவகைப்படும். அவற்றுள் திருவருள்நோக்கம்,

பரிசம், வாக்கு, பாவனை, நூல், யோகம் என ஆறும் ஒருவகை. அவ்வாறுடனே கூடிய அவுத்திரி சாம்பவம் மற்றொருவகை. அவுத்திரி தீக்கைக்குரியரல்லாதாருக்கு அந்தஆறு தீக்கைமட்டுஞ் செய்யப்படும். அவ்வவுத்திரியும் ஞானவதி கிரியாவதியென இருதிறப்படும். அவற்றுள் அழகினையுடைய குண்டம், மண்டலம், அங்கி, நெய்முதலிய அனைத்தும் மனத்தாற் கற்பித்துக் கொண்டு விதிப்படி ஆகுதிமுதலிய கிரியையை அகத்தேசெய்வது ஞானவதியாம். அவையனைத்தும் புறத்தேஅமைத்துக்கொண்டு அக்கிரியையைப்புறம்பேசெய்வதுகிரியாவதியெனப்படும். இவ்விருவகைப்பட்ட அவுத்திரி தீக்கையும் நிர்ப்பீசம் சபீசமென இருவகைப்பட்டு ஞானத்தில் நிர்ப்பீசம், ஞானத்தில் சபீசம், கிரியையில் நிர்ப்பீசம், கிரியையில் சபீசமென நால்வகைப்படும். (எ...று)

நோக்கம்—சட்சு தீட்சை எனப்படும். அதாவது கண்ணால் பார்த்தல். பார்வை அநுக்கிரக மென்றும் நிக்கிரக மென்றும் அவ்விரண்டுமின்றிய பொதுவான அழகென்றும் மூன்றுவகைப்படும். அவற்றுள் அநுக்கிரகமான பார்வையே சட்சுதீட்சையாம். அதாவது ஆசிரியன் உண்மைப்பொருளிலே சித்தத்தைவைத்து அச்சித்தவிருத்தியோடுகூட மாணாக்கனுடைய பந்தம் நீங்கும்படி பார்த்தல்.

பரிசம்—பரிசதீட்சை எனப்படும். அதாவது ஆசிரியன் தனது வலதுகையில் சிவபெருமானைப் பாவனை செய்து பூசித்து அக்கையால் மாணாக்கன் தலையைப்பரிசித்து அதாவது கையைத்தலைமேல்வைத்து பாசநீங்கும்படி செய்தல்.

வாக்கு—வாசகதீட்சை எனப்படும். அதாவது மாணாக்கனுடைய வருணத்திற்கும் ஆச்சிரமத்திற்கும் ஏற்றவாறு பஞ்சாக்கர மந்திரத்தை உபதேசித்தல்.

பாவனை—மானத தீட்சை எனப்படும். அதாவது ஆசிரியன் தன்னுடைய யோகாப்பியாசத்தால் மாணாக்கனுடைய இருதயத்தில் பிரவேசித்து அம்மாணாக்கன் அறிவில் சிவமாந் தன்மை விளங்கும்படி செய்தல்.

நூல்—சாஸ்திரதீட்சை எனப்படும். அதாவது ஞான சாஸ்திரப்பொருள்களை எல்லாம் தொகுத்து பதி, பசு, பாசங்களினுடைய இலக்கணங்களையும் சிவ சீவர்களுடைய ஐக்கியத்தையும் நூல்வழியாகப் போதித்தல்.

யோகம்—யோகதீட்சை எனப்படும். அதாவது சிவ யோகத்தை அப்பியாசம் பண்ணும்படி உபதேசித்தல்.

அவுத்திரி—அவுத்திரி தீட்சை எனப்படும். அதாவது ஓமத்தோடு கூடிச்செய்யுந் தீட்சையாம்.

சாம்பவம்—சத்திதீட்சை எனப்படும். அதாவது சத்தியோடு கூடிச்செய்யுந் தீட்சையாம்.

ஞானவதி, கிரியாவதி என்பன ஞானவழி, கிரியாவழி எனப்படும். அதாவது ஞானமார்க்கம், கிரியாமார்க்கமாம்.

நிர்ப்பீசம்—பீசமில்லாதது எனப் பொருள்படும். அதாவது செபிக்கக்கூடிய மந்திரத்திற்குமூலமாகிய பீசாக்கர மின்றி மந்திரத்தைமட்டும் உபதேசிப்பது நிர்பீசமாம்.

சபீசமாவது பீசாக்கரத்தோடு கூட மந்திரத்தை உபதேசிப்பது. (ரு)

நிர்ப்பீச தீட்சைக்கு அதிகாரி இவரெனவும் அத்தீக்கையின் இலக்கணம் இதுவெனவும் அது நிரதிகார தீக்கைஎனச் சொல்லப்பட்டு சமயம், விசேடம், நிருவாணமெனமூன்றாய் விளங்குமெனவுங் கூறுகின்றது.

பாலரொடு வாலீசர் விருத்தர்பணி மொழியார்
பலபோகத் தவர்வியாதிப் பட்டவர்க்குப் பண்ணுஞ்
சீலமது நிர்ப்பீசஞ் சமயாசாரந்
திகழ்சுத்தி சமயிபுத் திரர்க்கு நித்தத்
தேறுமதி காரத்தை யியற்றித் தானு
மெழிநிரதி காரையென நின்றிரண்டாய் விளங்குஞ்
சாலநிகழ் தேகபா தத்தி னோடு
சத்தியநிர் வாணமெனச் சாற்றுங் காலே.

(கொ-டு) நிர்ப்பீசம் பாலரொடு வாலீசர் விருத்தர் பணிமொழியார் பல போகத்தவர் வியாதிப் பட்டவர்க்கு திகழ் சமயாசாரஞ் சுத்தி நித்தத்து ஏறும் அதிகாரத்தை இயற்றி எழில் நிரதிகாரை எனநின்று அதுதானும் சமயிபுத்திரர்

க்குப் பண்ணும் சீலம் சாற்றுங் காலே சாலநிகழ் தேகபாதத்திேைடு சத்திய நிர்வாணமென இரண்டாய் விளங்கும்.

(பொ-ரை) மேற்கூறிய நிர்ப்பீசம் சபீசமென்னும் இரண்டனுள் நிர்ப்பீச தீக்கையாவது மலபரிபாகம்உடையராயும் சமயாசாரங்களை அனுட்டிக்கும் ஆற்றலும் கர்மத்தை யநுட்டிக்கும் அறிவும் இல்லாதவருமாகிய பாலரும், அறிவில்லாதவரும், வயதில் முதிர்ந்தவரும், மாதரும், போகானுபவம் மிகுதியுமுடையவரும், நோயினையுடையவருமாகிய இவர் முதலாயினோர்க்குச் செய்யப்படுவதாம். செய்யுங்கால் அவர் அனுபவிக்கவேண்டிய கன்மங்களை ஆகுதியினால் ஆசிரியன் சுத்திசெய்து அநுட்டிக்கவேண்டிய சமயாசாரங்களையும் அவ்வாறே ஆகுதியால் சுத்திசெய்து கன்மங்களையும் சமயாசாரங்களையும் அநுபவத்திற்குவராமலும் செய்யவேண்டுவ தில்லாமலும் நீக்கி நித்தியகன்ம மாத்திரையில் இயன்றவாறு அநுட்டிக்கும் அதிகாரத்தைக் கொடுத்து நைமித்திக கன்மத்தும் காமிககன்மத்தும் அதிகாரம் கொடாதிருக்கப் படும். நைமித்திகத்தும் காமிகத்தும் அதிகாரமில்லாமையினால் இத்தீக்கை நிரதிகாரதீக்கை எனவும் படும். இவ்வாறு செய்யப்படும் அவுத்திரி தீக்கையும் சமயம், விசேடம், நிர்வாணமென மூன்றாம். அவற்றுள் சமயம் சமயிக்கும் விசேடம் புத்திரருக்கும் செய்யப்படும். நிர்வாணம் சத்தியோ நிர்வாணம் அசத்தியோ நிர்வாணமென விளங்கும். சத்தியோ நிர்வாணமாவது தீட்சை செய்த அப்பொழுதே முத்தியைத்தருவது. அசத்தியோ நிர்வாணமாவது பிராரத்ததேகம் ஒழிந்த பின்னர் முத்தியைத்தருவது. இந்தநிர்வாணதீட்சை மோட்ச விருப்புடையாருக்குச் செய்யப்படுவது. (எ...று)

நித்தியகன்மம் என்பது—நாள்தோறும் செய்ய வேண்டிய சந்தியாவந்தன முதலிய கிரியைகள்.

நைமித்திககன்மமாவது—விசேடகாலமாகிய கிரஹணமுதலிய புண்ணியதினங்களில் விசேடமாகச் செய்யும் செபம் ஆராதனை முதலியன.

காமிகமென்பது—சித்திமுதலிய பயனைவேண்டிச் செய்யும் விசேடக்கிரியை.

சமய தீட்சையாவது—சமயத்தில் பிரவேசிக்கச் செய்வதாகிய தீட்சையாம். ஆதலின் இவர் சமயி எனப்படுவர்.

விசேட தீட்சையாவது சமயப்பிரவேசம் செய்தவனுக்கு சிவ பூஜை முதலியஆராதனங்கள் செய்யும்படி செய்வதாம். ஆராதித் தலின் இவர்புத்திர ரெனப்படுவர்.

நிர்வாண தீட்சையாவது—பாசபந்த மனைத்தையும் அறவே நீக்கி சிவபெருமான் திருவடியை அடையும்படி செய்வதாம்.

மந்ததரபக்குவ முடையார்க்கு சமய தீட்சை ஒன்று செய்து சரியை யினையும் மந்த பக்குவ முடையார்க்கு சமய விசேடம் இர ண்டுஞ் செய்து கிரியையினையும், தீவிர பக்குவமுடையார்க்கு அவ்வி ரண்டு தீக்கையும் செய்து யோகத்தினையும், தீவிரதர பக்குவமுடை யார்க்கு நிருவாண தீக்கை செய்து ஞானத்தினையும் அநுட்டிக்கும் படி செய்வர். சபீசதீட்சைக்கும் இவ்வாறே கொள்க. (ச)

சபீசதீக்கைக்கு அதிகாரி இவரெனவும், அத்தீக்கையின் இல க்கணம் இது எனவும், அது சாதிகார தீக்கை என்று சொல்லப்பட்டு சமயம் முதலிய நான்காய் விளங்கு மெனவும், இத்தீக்கை யுடை யார் சாதகர் ஆசாரியரென இருதிறப்படுவ ரெனவும், இத்தீக்கை யும் உலகதருமிணி சிவதருமிணி யென ஆச்சிரம பேதம் பற்றி இரு திறப்படுமெனவுங் கூறுகின்றது.

ஓதியுணர்ந் தொழுக்கநெறி யிழுக்கா நல்ல
வுத்தமர்க்குச் செய்வதுயர் பீசமிவர் தம்மை
நீதியினு னித்தியநை மித்திககா மியத்தி
னிறுத்திநிரம் பதிகார நிகழ்த்துவதுஞ் செய்து
சாதகா சாரியரு மாக்கி வீடு
தருவிக்கு முலோகசிவ தருமிணியென் றிரண்டா
மாதலினு லதிகாரை யாஞ்சமய விசேட
நிருவாண மபிடேக மிவற்றடங்கு மன்றே.

(கொ-டு) உயர்பீசம் ஓதி உணர்ந்து ஒழுக்கநெறி இழுக்கா நல்ல உத்தமர் க்கு நிறுத்திச்செய்து இவர்தம்மை நீதியினுன் நித்திய நைமித்திககாமியத்தின் நிரம்பு அதிகாரம் நிகழ்த்துவதும் செய்து அதிகாரையாம் சாதகாசாரியரும் ஆக் கி வீடு தருவிக்கும் உலோக (தருமிணி) சிவதருமிணியென் றிரண்டாம் ஆதலி னுல் இவற்று சமயவிசேட நிருவாணம் அபிடேகம் அடங்குமன்றே.

(போ-ரை) இனி உயர்ந்த சபீச தீக்கையாவது மலபரிபாகத்தோடுகூட கற்றறிந்து ஒழுக்க வழியில் வழுவாது நிற்கும் ஆற்றல் மிக்குடைய உத்தமத்தில் உத்தமராயினோர்க்குச் செய்யப்படுவதாம். செய்யுங்கால் அதிகாரியினுடைய பக்குவத்தை அறிந்து அநுட்டிக்கவேண்டிய சமயாசார கன்ம மாத்திரம் அனுட்டிக்கும்படி நிறுத்தி உலகபோகானுபவத்திற்குரிய ஏனைய கன்மங்களைச் சுத்தி செய்து அதாவது அனுபவத்திற்கு வரவொட்டாமல் சிவாக்கினியால் கெடுத்து ஒழித்து நித்தியம், நைமித்திகம், காமிக மென மூன்றினும் பேரதி கார முடையராகச் செய்யப்படும். இவ்வாறு செய்தலால் இத்தீக்கை சாதிகார தீக்கை யெனவும் பெயர் பெறும். இத்தீக்கைப் பேறுடையார் சாதகரும் ஆசாரியரு மென்றிருதிறப்படுவர். அவ்வா றிருதிறப்படுதற்குக் காரணம் தீக்கையின் வேறுபாடேயாம். அவ்வேறுபாடாவது இச்சபீச தீக்கை சமயம், விசேடம், நிர்வாணம், அபிடேக மென நால்வகைப்பட்டு அவற்றுள் சமயம், விசேடம் நிர்வாணம் மட்டும் செய்யப் பெற்றவர் சாதகரும், அம்மூன்றுடன் அபிடேகமும் செய்யப் பெற்றவர் ஆசிரியருமாவ ரென்பதேயாம். இவ்வாறு செய்யும்படியான இத்தீக்கையும் இல்லற முடையாருக்கு சிகையோடு கூடிச் செய்வதாகிய உலோகதருமிணி என்றும் துறவறமுடையாருக்கு சிகாச்சேதத்தோடு செய்வதாகிய சிவதருமிணி என்றும் இருதிறப்படும். உலோக தருமிணியை பவுதிக தீக்கை என்றும் சிவதருமிணியை நைட்டிக தீக்கை என்றுங் கூறுவர். இவ்வாறுதலில் நிர்ப்பீசம், சபீசமென்னும் இருவகைத் தீக்கையினுள் சமயம், விசேடம், நிர்வாணம், அபிடேக மென்னும் பேதமெல்லாம் அடங்கும். (எ—று)

சமயாசார கன்ம மென்பது சந்தியா வந்தன, சிவபூஜை முதலிய கருமங்கள்.

சாதிகார தீக்கை அதிகாரத்தோடு கூடின தீக்கை.

அபிடேக மென்பது ஆசிரியனுதற்குரிய மந்திரக்கிரியைகளை கும்பத்திற் செய்து ஸ்நானஞ் செய்விப்பது.

பவுதிக தீக்கை என்பது பவுதிகம் பூதத்தின் காரியமாதலால் பூதகாரியமாகிய உலகத்தோடு கூடியிருக்கும்படி செய்யும் தீக்கை எனப்படும்.

நைட்டிக தீக்கை என்பது நைட்டிகம் நிட்டையாதலால் நிட்டையோடு கூடி யிருக்கும்படி செய்யும் தீக்கை எனப்படும். (ரு)

தீக்கை செய்யும் ஆசிரியன் சிவமெனவும் செய்யும் விதமாகிய அத்துவ சுத்தி இவ்வாறெனவுங் கூறுகின்றது.

அழிவிலாக் கிரியையினு ளாகல்சத்தி மத்தா
னாதலத்து வாசுத்தி பண்ணிமல மகற்றி
யொழிவிலாச் சிவம்பிரகா சித்தற்கு ஞான
முதிப்பித்துற் பவந்துடைப்ப னரனொருமூ வர்க்கும்
வழுவிலா வழியாறு மந்திரங்கள் பதங்கள்
வன்னங்கள் புவனங்க டத்துவங்கள் கலைகள்
கழிவிலா துரைத்தமுறை யொன்றிலொன்று வியாத்தி
கருதுகலை சத்தியின்கண் சத்திசிவன் கண்ணும்.

(கொ-டு) அரன் ஒரு மூவர்க்கும் அழிவிலாச்சத்திமத்தானாதல் கிரியையினுனாதல் மந்திரங்கள் பதங்கள் வன்னங்கள் புவனங்கள் தத்துவங்கள் கலைகள் ஆறும் வழுவிலா வழி உரைத்த முறை ஒன்றிலொன்று கழிவிலாது வியாத்தி கருதுகலை சத்தியின்கண் சத்திசிவன் கண்ணும் அத்துவாசுத்தி பண்ணி மலம் அகற்றி ஒழிவிலாச் சிவம் பிரகாசித்தற்கு ஞானம் உதிப்பித்து உற்பவந் துடைப்பன்.

(பொ-ரை) மேற்கூறியவாறு தீக்கையை சிவபெருமானே குருமூர்த்தியை வாயிலாகக் கொண்டு நின்று செய்வன். தீக்கையைப் பெறும் மாணுக்கர் ஞான மார்க்கத்திற் குரியவரும் கிரியா மார்க்கத்திற் குரியவரு மென இரு திறப்படுவர். அவ்விரு திறத்தவரும் உத்தமர், மத்திமர், அதமர் என முத்திறப்படுவர். அவருள் மேற்கூறியவாறு கற்றறிந்து ஒழுக்க நெறியில் நிற்பவர் உத்தமர். கற்றறிந்து ஒழுக்க நெறியில் நில்லாதவர் மத்திமர், கற்றறிதலும் ஒழுக்க நெறி நில்லாமையு முடையர் அதமர். ஒழுக்க நெறி நில்லா ரென்பதற்கு சரியையாதி ஒழுக்க மில்லார் என்பது பொருளே யன்றி இழுக்க நெறியுடையாரென்பது பொருளன்று. இத்தகைய பக்குவருக்கு அவரவர் பக்குவத்திற் கேற்ப ஞான தீக்கை, கிரியாதீக்கை என்கின்ற இரண்டனுள் ஒன்றை ஆசிரியர் செய்வர். எவ்வாறு செய்வரெனில், மந்திரங்கள், பதங்கள், வன்னங்கள், புவனங்கள், தத்துவங்கள், கலைகள் என அறுவகைப்படுவதான குற்றமில்லாத ஆறத்துவாக்களுள் மந்திரம் பதத்திலும், பதம் வன்னத்திலும், வன்னம் புவனத்திலும், புவனம் தத்துவத்திலும், தத்துவம் கலையிலும் அடங்க நீக்கமின்றி ஒடுக்கி அவற்றுள் முடிவான கலையை திரோதான சத்தியினும், அத்திரோதான சத்தியைச் சிவத்தினும் அடங்குமாறு ஒடுக்குவர். அவ்வாறு ஒடுக்குவதனால்பிறவிக் கேதுவாகிய மலத்தைத் கெடுத்து எங்கணும் வியாபகமாகிய சிவம் பிரகாசித்தற் கேதுவாகிய ஞானத்தைக் கொடுத்துப் பிறவியை ஒழிப்பர். (எ...று)

மந்திரமுதலிய அத்துவாக்களை வழி என்று கூறுவர். அவ்வழியும் உயிருக்கு இதம், அகிதம் என்னும் கன்மம் வருகின்ற வழி எனவும், உயிர் இறைவனை அடைவதற்கு வழி எனவும், இருவகைப்படும். அவற்றுள் கன்மம் வரும் வழி என்பது எவ்வாறெனில்,

மந்திரங்களை உரத்துச் சொல்லல், மெல்லச் சொல்லல், உச்சரிப்பின் பேதம் ஆகிய இம்முறைமையில் எந்த மந்திரத்தை எவ்வாறு சொல்லவேண்டுமோ அவ்வாறு சொல்லில் புண்ணியமும், தப்பிச் சொல்லில் பாவமுமாம்.

பதங்களில் பிரிக்கக் கூடிய பதமாயின் பிரித்தும் பிரிக்கக்கூடாத பதமாயின் பிரியாமலும் இருப்பின் புண்ணியமும் இதற்கு மாறுபடின் பாவமுமாம்.

வன்னமென்பது அக்கரம். அவ்வக்கரங்களில் குறிலைக் குறிலாகவும் நெடிலை நெடிலாகவும் அளபெடையை அளபெடையாகவும் அந்தந்தத் தானங்களில் உச்சரிக்கில் புண்ணியமும் மாறுபடிற் பாவமுமாம்.

புவனங்களுக்குப் பதியாகிய தெய்வத்தைப் பூஜிக்கில் புண்ணியமும் பூஜியாது நிந்தை செய்யில் பாவமுமாம்.

தத்துவங்களாகிய ஞானேந்திரியம், கன்மேந்திரியம், அந்தக்கரணங்களினாலே பிறர்க்குச் செய்யும் இதம், புண்ணியம். அகிதம், பாவம். நல்வழியில் திரவியத்தைத் தேடிப் போக மனுபவிப்பது புண்ணியம். தீவழியில் திரவியத்தைத் தேடிப் போக மனுபவிப்பது பாவம்.

பஞ்ச கலைகளுக்கு அபிமானிகளான பஞ்ச சத்திகளுக்குப் பூஜை செய்யிற் புண்ணியம். பூஜை செய்யாது இருப்பது பாவம். இவ்வாறு மந்திர முதலிய ஆறின் வழியாலும் உயிர்க்குக் கன்மம் வருவதை அறிக.

பஞ்ச கலைகளுக்கு அபிமானிகளான பஞ்ச சத்திகளாவன:— நிவிர்த்தி கலைக்குக் கிரியா சத்தியும், பிரதிட்டா கலைக்கு ஞான சத்தியும், வித்தியா கலைக்கு இச்சா சத்தியும், சாந்தி கலைக்கு ஆதி சத்தியும், சாந்தியதீத கலைக்குப் பரா சத்தியும் அபிமானிகளாம்.

இனி இந்த ஆறத்துவாக்களும் சொற் பிரபஞ்சம், பொருட்பிர பஞ்சமென இருவகைப்படும். அவற்றுள் மந்திரம், பதம், வன்னம் மூன்றும் சொற்பிரபஞ்சம். புவனம், தத்துவம், கலை மூன்றும் பொருட் பிரபஞ்சம். பிரபஞ்சமெல்லாம் சொல் பொருளென்னு மிரண்டினில் அடங்கும். அவற்றுள் சொல்லாவது எழுத்து, அவ் வெழுத்தாலாகிய பதம், பதத்தாலாகிய சொல் (மந்திரம்) என விரி யும். பொருள் உடலும், உலகமும், அவற்றை ஆக்கும் சத்தியுமென மூவகைப்படும். அவற்றுள் உடல், இந்திரிய அந்தக் கரணம் முத லிய தத்துவவடிவாயிருக்கும். புவனம் பஞ்சபூத வடிவாயிருக்கும். சத்தி கலை வடிவா யிருக்கும். இவ்வாறு பிரபஞ்ச வடிவா யிருக் கிற சொல்லும் பொருளுமாகிய ஆறத்துவாக்களும் ஆணவ கேவ லத்துட் கிடந்து அறிவு விளங்காத ஆன்மாக்கட்கு அறிவு விளங்கு வதற்கு வழியாய்த் தோன்றி அதனல் அறிவு விளங்கும். அவ்வறிவு விளக்கம், ஏகதேசமென்பதை உணர்ந்தபின்னர், இவ்வத்துவாக்கள் ஆறினையும் ஒன்றினென்று ஒடுக்கும் வழியினல் இறைவனை அடை தற்கும் வழியாயிற்று.

ஒன்றினென்று. ஒடுங்குவதற்குக் காரணம் மந்திரமென்னும் சொல் பதத்தையின்றி யில்லாமையால் மந்திரம் பதத்தில் ஒடுங்கும். பதம் எழுத்தை யின்றி யில்லாமையால் பதம் எழுத்தி லொடுங்கும். இம் மூன்றும் சொல்லாதலால் சொல் பொருளைக் குறித்தன்றி நில் லாமையால் அச் சொல் பொருளில் ஒடுங்கும். அப்பொருள் புவனம் தத்துவம், கலை ஆதலால் அவற்றுள் வெளிப்படையாகக்காணப்படும் புவனத்தில் முதற்கண் சொல் லொடுங்கும். புவனம் தத்துவத்தை யின்றி இல்லாமையால் தத்துவத்தில் ஒடுங்கும். தத்துவம் கலையை யின்றித் தோன்றாமையால் கலையில் ஒடுங்கும். அதாவது பேச்சை நிறுத்தி உலகை வெறுத்து உடலைத் தானல்லவென அறிந்து அரு ளால் தன்னையுந் தலைவனையும் அறியு முறையாம்.

கலை நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்திஅதீதை என ஐவகைப்பட்டு சத்தி கலை என்றும் சத்தி அதிட்டித கலைஎன் றும் ஒவ்வொன்றும் இருவகைப்படும். அவற்றுள்,

சத்தி கலையாவது சத்தியின் அம்சமெனப் பொருள்படும். அவ் வம்சம் உயிருக்கு பிரபஞ்ச விடுதலையை உண்டுபண்ணுங்கால் நிவிர்

த்தி கலை என்றும்,விடுதலைசெய்த பிரபஞ்சத்தை மீளப்பற்றாது விடுதலையை நிலைப்படுத்துங்கால் பிரதிட்டா கலை என்றும், விடுதலை அடைந்த உயிருக்கு உண்மைப்பொருளை உணர்த்துங்கால் வித்தியா கலை என்றும், உண்மைப் பொருளை உணர்ந்த உயிர் அப்பொருளில் அடங்கி இருக்கச் செய்யுங்கால் சாந்திகலை என்றும், அவ்வாறடங்கின உயிர் அடங்கி யிருக்கின்றோ மென்னும் போத மிறந்து அதீதப்படச் செய்யுங்கால் சாந்தி அதீதகலை என்றும் திருவருட் சத்தியே செயல் வேறுபாட்டால் இவ்வாறு ஐவகைப்படும். இச் செயல் சுத்தாவத்தையில் உயிர் அறிவின் கண் செய்வது.

இனி,சத்தி அதிட்டிதகலையாவது பிறிதொன்றின் வாயிலாகத் தொழிற் செய்யும் சத்தியின் அம்சமாம். அதாவது திருவருட்சத்தி பிரமாவைவாயிலாகக் கொண்டு கேவலத்தி லிருந்த ஆன்மாக்கட்கு அக்கேவலத்தை நிவிர்த்தித்துப் பிரபஞ்சத்தைத்தோற்றுவிக்கையால் நிவிர்த்தி கலை என்றும்,தோற்றியபிரபஞ்சத்தைவிட்டுணுவின் வாயிலாய் நின்று நிலைப்படுத்தும் சிவசத்தி பிரதிட்டா கலை என்றும், வேறோர் புவனத்தை அறிவிக்கு நிமித்தம் நிலைப்படுத்திய புவனத்தை உருத்திரன் வழியாய் நின்று அழிக்கும் சிவ சத்தி வித்தியா கலை என்றும், புவனத்திற் றங்கி போகங்களை அனுபவிக்குங்கால் கன்மத்திற் கேற்ற போகங்களில் அமைந்து அனுபவிக்கும்படி மகேசன் வாயிலாகச் செய்யும் சிவசத்தி சாந்திகலை என்றும், அனுபவிக்கவேண்டிய போகப் பொருள்களை அனுபவிக்கும்படி சதாசிவர்வாயிலாகக் கூட்டி வைக்கும் சிவ சத்தி சாந்தி அதீதகலை என்றும் ஐவகைப்படும். இச் செயல் உயிரின் சகலாவத்தையில் தநு, கரண புவன, போகங்க ளிடத்துச் செய்வது.

திரோதான சத்தி என்பது மறைத்தற் சத்தி. அது மேற் கூறிய மகேசன் வாயிலாய் நின்று செய்யும் சாந்தி கலையாகிய சத்திக்கும் இப் பஞ்ச கலை கட்கும் ஆதாரமாகிய சத்திக்கும் பெயராம். மகேசன் வாயிலாக நிகழும் திரோதான சத்தி உயிர்க்கு போகத்தில் அமையும்படி செய்வதெனை மேற் கூறியாயிற்று. இனிப் பஞ்ச கலை கட்கும் ஆதாரமாகிய திரோதான சத்தியாவது ஞான சொரூபமாகிய சிவசத்தி பஞ்சகலைகளாக மாறுதற்குரிய அவசரபேதமாம். ()

நிவிர்த்தி பிரதிட்டை என்னும் இரண்டு கலைகளுள் அடங்குவனவாகிய ஏனைய அத்துவாக்களின் தொகை இவையெனக் கூறுகின்றது.

மந்திரங்கண் முதலைந்துங் கலையைந்தின் வியாத்தி
மருவுமந் திரமிரண்டு பதங்க ணாலே
ழந்தநிலை யெழுத்தொன்று புவன நூற்றெட்
டயனிதத் துவமொன்று நிவிர்த்தியயன் றெய்வம்
வந்திடுமந் திரமிரண்டு பதங்கண் மூவேழ்
வன்னங்க ணாலாறு புரமைம்பத் தாறு
தந்திடுந்தத் துவங்களிரு பத்து மூன்று
தரும்பிரதிட் டாகலைமா லதிதெய்வந் தானும்.

(கொ-டு) மந்திரங்கள் முதலைந்தும் கலையைந்தின் வியாத்தி நிவிர்த்தி மந்திர மிரண்டு பதங்கள் நாலேழ் அந்த நிலைஎழுத்து ஒன்று புவன நூற்றெட்டு அவனி தத்துவம் ஒன்று மருவும் அயன் தெய்வம் பிரதிட்டாகலை வந்திடு மந்திர மிரண்டு பதங்கள் மூவேழ் வன்னங்கள் நாலாறு புரம் ஐம்பத்தாறு தந்திடுந் தத்துவங்கள் இருபத்து மூன்று தரும் அதி தெய்வம் மால் தான் ஆம்.

(பொ-ரை) மேற்கூறிய அத்துவாக்களுள் மந்திரம், பதம், வன்னம் மூன்றும் சுத்தமாயாகாரியமாதலால் சுத்தாத்துவாவெனப்படும். தத்துவம் சுத்தமாயை அசுத்தமாயா காரியமாதலால் மிச்சிராத்து வாவெனப்படும். புவனம் சுத்தமாயை அசுத்தமாயை பிரகிருதி மாயாகாரியமாதலால் சுத்தாத்துவா மிசிராத்துவா அசுத்தாத்துவா வெனப்படும். ஆகவே சுத்தம், மிச்சிரம், அசுத்தமென்னும் மூவகை அத்துவாக்களும் மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவமென்னும் ஐந்தாக விரியும். இவ்வைந் தத்துவாக்களும் ஒன்றினொன்றாக மேற்கூறியவாறு நிவிர்த்தி முதலிய பஞ்ச கலைகளுள் எவ்வாறடங்குமெனின், நிவிர்த்தி கலையில் சத்தியோசாதம், இதயமாகிய மந்திரமிரண்டும், ஓம் நமோ நமவென்னும் பத முதலாக மகாதேவ என்னும் பத மீறாக இருபத்தெட்டுப் பதங்களும், முடிவான க்ஷகார அக்கரமொன்றும், காலாக்கினி ருத்திரபுவன முதல் வீரபத்திரர் பத்திரகாளி புவன மீறாக புவனம் நூற்றெட்டும், பிருதிவி தத்துவ மொன்றும் ஆகிய இவைகள்மேற் கூறிய முறையே ஒன்றின் ஒன்றாக அடங்கும். இந்த நிவிர்த்திகலைக்கு அதிதெய்வம் பிரமன். பிரதிட்டாகலையில் வாமதேவம், சிரசு ஆகிய மந்திரமிரண்டும், மகேசுவரமுதலிய பதமுதலாக அரூபின் முதலிய பதமீறாக பதங்கள் இருபத்தொன்றும், ளகாரமுதலாக டகார மீறாக எழுத்துக்கள் இருபத்து நான்கும் அமரேசாதி புவன முதல் சீக

ண்ட புவனமீறாக புவனம் ஐம்பத்தாறும், அப்புதத்துவமுதல் பிரகிருதியீறாக தத்துவங்கள் இருபத்துமூன்றும் ஒன்றினொன்றாக ஒடுங்கும். இப் பிரதிட்டாகலைக்கு அதிதெய்வம் விட்டுணு. (எ...று) (எ)

வித்தை, சாந்தி என்னும் இரண்டு கலைகளுள் அடங்குவனவாகிய ஏனைய அத்துவாக்களின் தொகை இவையெனக் கூறுகின்றது.

வித்தையின்மந் திரமிரண்டு பதநா லைந்து
 விரவுமெழுத் தேழுபுர மிருபத் தேழு
தத்துவமு மோரேழு தங்குமதி தெய்வந்
 தாவிலுருத் திரனாகுஞ் சாந்தி தன்னின்
வைத்தனமந் திரமிரண்டு பதங்கள்பதி னொன்று
 வன்னமொரு மூன்றுபுரம் பதினெட் டாகு
முத்தமமாந் தத்துவமு மொருமூன் றாகு
 முணரிலதி தேவதையு முயரீச னாமே.

(பொ-ரை) வித்தியாகலையில் அகோரம், சிகையாகிய மந்திரமிரண்டும் வியாபின் என்னும் பதமுதலாக தியானகாராயா என்னும் பதமீறாக பதங்களிருபதும், ஞகாரமுதல் வகாரமீறாக அக்கரங்கள் ஏழும், வாமாதி புவனமுதல் அங்குட்ட ருத்திராந்த புவன மீறாக புவன மிருபத்தேழும், புருடதத்துவமுதல் மாயை யீறாக தத்துவங்கள் ஏழும் ஒன்றின் ஒன்றாக ஒடுங்கும். இவ்வித்தியா கலைக்கு அதிதெய்வம் முடிவில்லாத ருத்திரன். சாந்தி கலையில் தற்புருடம் கவசமாகிய மந்திரமிரண்டும், நித்திய யோகினே என்னும் பத முதல் வியோம வியாபினே என்னும் பத மீறாக பதம் பதினொன்றும், மவகா என்னும் எழுத்து மூன்றும், வாமை புவனமுதல் சாதாக்கிய புவன மீறாக புவனம் பதினெட்டும், சுத்தவித்தை, ஈசுவரம், சதாக்கியமாகிய தத்துவங்கள் மூன்றும் ஒன்றினொன்றாக அடங்கும். இச்சாந்தி கலைக்கு அதிதெய்வம் மகேசுவரன். (எ...று) ()

சாந்தி யாதீதகலையில் அடங்குவனவாகிய ஏனைய அத்துவாக்களின் தொகை இவையெனக் கூறுகின்றது.

சாந்தியா தீதகலை தன்னின்மந் திரங்க
 டாமூன்று பதமொன்றக் கரங்கள்பதி னாறு
வாய்ந்தபுர மூனைந்து தத்துவங்க ளிரண்டு
 மருவுமதி தேவதையு மன்னுசதா சிவனா

மேய்ந்தமுறை மந்திரங்கள் பதினொன்று பதங்க
ளெண்பத்தொன் றக்கரங்க ளைம்பத்தொன் றாகு
மாய்ந்தபுர மிருநூற்றோ டிருபத்து நாலா
மறிதருதத் துவமுப்பத் தாறுகலை யைந்தே.

(பொ-ரை) சாந்தியதீத கலையில் ஈசானம், அத்திரம், மூலமந்திரமாகிய மந்திரங்கள் மூன்றும், ஓம் என்னும் பதம் ஒன்றும், அகாரம் முதல் அஃ வரை அக்கரங்கள் பதினாறும், நிவிர்த்தி முதல் சாந்தியதீத மீறாக புவனம் ஐந்தும், இந்திகை முதல் அனுசிருதை ஈறாக புவனம் பத்தும் ஆகப் புவனம் பதினைந்தும், சத்திதத்துவம் சிவதத்துவங்களாகிய தத்துவமிரண்டும் ஒன்றிலொன்றாக அடங்கும். இச்சாந்தியதீத கலைக்கு அதிதெய்வம் சதாசிவதேவர். இவ்வாறு சத்தியோசாதம் முதலிய பதினொரு மந்திரங்களும் சிவாய நமோ நம முதலிய எண்பத்தொருபத மந்திரங்களும் க்ஷகாரம் முதலாகிய அக்கரம் ஐம்பத்தொன்றும் அனுசிருத புவனமுதல் புவனம் இருநூற்றிருபத்துநாலும் பிருதிவி முதல் தத்துவம் முப்பத்தாறும் நிவிர்த்தி முதலிய கலை ஐந்தும் ஒடுங்கும் முறையில் வைத்துக் கண்டுகொள்க. (எ...று)

மந்திரமுதலிய ஆறத்துவாக்களும் வியாபகமாம். இன்றேல் எல்லா ஆன்மாக்களோடும் பொருந்துதல் கூடாது. ஆயினும் ஒன்றிலொன்று மேலான வியாபகமாம். அவ்வாறு இன்றேல் உயர்ந்த வியாபகமாகிய கலையில் மந்திரமுதலியன அடங்குமாறில்லை. அவ்வாறாயின் மேல் ஆறாவது செய்யுளில் "மந்திரங்கள்முதலைந்தும் கலை ஐந்தின் வியாத்தி" என ஒன்றிலொன் றடங்குமாறு கூறியதனோடு இவ்விடத்து எல்லாம்வியாபகமென்றல்முரணுமேதா வெனின், முரணாது. எவ்வாறெனின், மேற்கூறியவாறு ஒன்றிலொன்றடங்குவதான வியாபகமாதலினாலென்க. இவ்வாறு கூறியதன் கருத்தென்னை எனின், ஏகதேசவியாபகமாகிய வியாப்பியத்திற்கு ஒடுக்கமும் அடக்கமாகிய வியாத்திக்குக் கேடுமே உரிமையாம். இது சூரியன் ஒளிமுன் வியாப்பியமாகிய கண்ணொளி ஒடுங்குதலும் வியாத்தியாகிய இருள் கெடுதலும்போலவாம். ஆதலின் மேல் ஆறாவது செய்யுளில் வியாத்தி என்றதனால் கேடு சொல்லல்வேண்டும். இவ்விடத்து ஒடுங்குமென்றதனால் வியாப்பியம் சொல்லல் வேண்டும். இவ்வாறு சொல்லுங்கால் வியாத்தி என்றதனோடு வியாப்பியமென்றது முரணும். அவ்வாறு முரணாமல் வியாத்தி என்றது ஒன்றி லொன்ற

டங்கும் வியாபகத்தையே குறித்ததென்று கொள்ளுதற் பொருட்டாம் என்க.

பூரணவியாபகம் ஏகதேச வியாபகம் சமவியாபகமென வியாபகம் மூத்திறப்படும். அவற்றுள் ஏகதேச வியாபகத்தை வியாப்பியமென்றும் சமவியாபகத்தை வியாத்தியென்றுங் கூறுவர்.

வியாப்பியம் பிறிதொன்றால் வியாபிக்கப்படுவது. வியாத்திபிறிதொன்றின் அடங்கியிருப்பது. வியாபகம் பிறிதொன்றால் வியாபிக்கப்படுதலும் பிறிதொன்றின் அடங்குதலுமின்றி யுள்ளது. வியாபகத்திற்கு உவமை சூரியன். வியாப்பியத்திற்குவமை கண்ணொளி. வியாத்திக்குவமை இருள். இவ்விருள் கண்ணளவில் மறைத்தலால் சமவியாபகமெனப்பட்டது. இவ்வாறே பதி பசு பாசம் மூன்றினிடத்துங் கண்டுகொள்க. (௬)

கன்மங்கள் யாவும் அத்துவாவாகிய வழியால் வருதலின் அத்துவ சுத்தியே சிறந்ததென்றும் இவ்வத்துவ சுத்தியால் ஆணவம் கன்மமாகிய ஏனைய மலங்களும் சுத்தியா மென்றுங் கூறுகின்றது.

மூன்றுதிறத் தணுக்கள்செயுங் கன்மங் கட்கு
முன்னிலையா மூவிரண்டா மத்து வாவி
னொன்றமுறை யவையருத்தி யறுத்துமல முதிர்வித்
தரும்பருவ மடைதலுமே யாசா னாகித்
தோன்றிநுக ராதவகை முற்செய் கன்மத்
துகளறுத்தங் கத்துவாத் துடக்கறவே சோதித்
தேன்றவுடற் கன்மமனு பவத்தினா லறுத்திங்
கினிச்செய்கன்ம மூலமல ஞானத்தா லிடிப்பன்.

(கொ-டு) அணுக்கள் மூன்று திறத்துச் செயுங் கன்மங்கட்கு முன்னிலையாம் மூவிரண்டாம் அத்துவாவின் ஆன்ற முறை அவை யருத்தி யறுத்து மலம் முதிர்வித்து அரும் பருவம் அடைதலுமே ஆசானாகித் தோன்றி அத்துவாத்துடக்கு அறவே சோதித்து அங்கு நுகராத வகை முன் செய் கன்மத்துகள் அறுத்து உடல் என்ற கன்மம் அனுபவத்தினால் அறுத்து ஞானத்தால் மூலமலம் இங்கு இனிச் செய் கன்மம் இடிப்பன்.

(பொ-ரை) மேற்கூறியவாறு இறைவன் குருமூர்த்தியை ஆதாரமாய்க் கொண்டு நின்று செய்யும் தீக்கையில் ஆணவமலம் கன்மமலங்களைச் சுத்திசெய்யாது மாயாமலமாகிய அத்துவ சுத்தியே செய்வனென அத்துவ சுத்தியைச் சிறந்தெடுத்துக் கூறிய தென்னை யெனின், ஆன்மாக்கள் மனம் வாக்குக் காய மென்னும் மூன்றினாலும் செய்யப்படுங் கன்மங்களுக்கு முன்னிலையாய்ப் பற்றுக் கொடுத்து நிற்பது அத்துவாக்கள் ஆறுமேயாம். இவ்வத்துவாவாகிய வழியால் செய்த கன்மங்களை செய்த முறையானன்றி அக்கன்மங்கள் பக்குவமான முறையில் அனுபவிக்கும்படி இறைவன் செய்து அந்தக் கன்மத்தை ஒழிப்பன். அவ்வாறு செய்தலால் ஆணவ மலத்தைத் தேயும்படி செய்து அவ்வாணவமலம் தேய்தலால் உண்டாகிற அருமையான பக்குவம் நோக்கி அவ்விறைவனே குரு வடிவாய் எழுந்தருளி வந்து அத்துவ சோதனை செய்து தன்னுடைய கிரியா சத்தி விருத்தியாகிய தீக்கையினால் மாணக்கன் அனுபவிக்கவேண்டியதாய் பக்குவப்படாமல் கட்டுப்பட்டிருக்கும் சஞ்சித கன்மத்தைச் சுத்தி செய்து அனுபவியாதபடி ஒழித்து பிராரத்த கன்மத்தை அனுபவிக்கும்படி செய்தொழித்து ஞான சத்தியினால் ஆணவமலத்தையும் வாதனை பற்றி நிகழும் ஆகாமிய மலத்தையும் ஒளி முன் இருள் போல ஒழிப்பன். (எ...று)

இதனால் ஆணவமலம், கன்ம மலங்கள் அத்துவாக்கள் இடமாக தொழிற்பட வேண்டுதலானும் அத்துவ சுத்தியால் அவ்விரு மலங்களும் சுத்தி யெய்துமாதலானும் அத்துவ சுத்தியே சிறந்தெடுத்துக் கூறிய தென அறிக. சுத்தி யென்பது இவ்விடத்தில் நீக்கம்.

கன்மானுபவத்தால் மல சத்தி எவ்வாறு கெடுமெனின், கன்ம பலன்களை அனுபவிக்கும்படி செய்தலால் இளைப்புத் தோன்றும். தோன்றவே அவ்விளைப்பாகிய துன்பத்தின் நிவிர்த்தியைநாடும். அவ்வாறு நாடும் நாட்டம் மலசத்தியின் தேய்வைக் குறிக்குமாதலால் கன்ம பலனை அனுபவிக்கும்படி செய்தல் மலசத்தி கெடுதற்கு உபாயமாயிற்று. (௪௦)

முதலதிகரணம் முடிந்தது.

---

# இரண்டா மதிகரணம்.

## மன்னுமருளால் உணர்த்தி என்பது

---

புறச் சமய நெறி முதல் படிமுறையால் மேம்பட்டு சைவத்தை அடைந்தவர்க்கு அத்துவ சுத்தி எய்துதற்குரிய பருவமுண்டாமெனவும் அச்சைவமாகிய தவநெறியும் சரியைமுதல் நான்கு வகைப்படுமெனவும் கூறுகின்றது.

புறச்சமய நெறிநின்று மகச்சமயம் புக்கும்
புகன்மிருதி வழியுழன்றும் புகலுமாச் சிரம
வறத்துறைக ளவையடைந்து மருந்தவங்கள் புரிந்து
மருங்கலைகள் பலதெரிந்து மாரணங்கள் படித்துஞ்
சிறப்புடைய புராணங்க ளுணர்ந்தும் வேத
சிரப்பொருளை மிகத் தெளிந்துஞ் சென்றாற் சைவத்
திறத்தடைவ ரிதிற்சரியை கிரியா யோகஞ்
செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்.

(பொ-ரை) மேல் கன்ம நுகர்ச்சியால் அத்துவ சுத்தி எய்துதற்குரிய அரும் பருவம் உண்டாமெனக் கூறப்பட்டது. அவ்வரும் பருவம் எவ்வாறு உண்டாகுமெனின், உலோகாயதம், பௌத்தம், ஆருகதம், மீமாம்சம், மாயாவாதம், பாஞ்சராத்திர மென்னும் நூலமாகிய புறச்சமயங்களினின்று அவ்வாறொழுகியும், அவ்வொழுக்கத்தின் முதிர்ச்சியால் அப் புறச்சமயத்தினின்று நீங்கி சைவம், பாசுபதம், வாமம், பைரவம், மாவிரதம், காளாமுக மென்னும் சூக்குமமாகிய அகச் சமயங்கள் ஆறிற் புகுந்து அந்நூல் வழியே ஒழுகியும், மனு முதலியவராற் சொன்ன தரும சாத்திரம் பதினெட்டின் வழியே சென்றொழுகியும், வேதத்திற் சொல்லப்பட்ட பிரமசரிய முதலான ஆச்சிரமங்கள் நான்கின் நெறிகளில் வழுவா தொழுகியும், அனுட்டித்தற்கரிதாகிய பஞ்சாக்கினி முதலியவற்றினின்று அரிய தவங்களைச் செய்தும் கற்பதற்கரிதாகிய கலை ஞானங்கள் பலவற்றைப்பயின்றும், இருக்கு முதலிய நான்கு வேதங்களை ஓதியும், சிறப்பினையுடைய பதினெண் புராணங்களை ஓதி உணர்ந்தும், வேதாந்தமாகிய உபநிடதப் பொருளைமிக ஆராய்ந்து தெளிந்தும் இவ்வாறு படி முறையாக பல பிறவிகளினும் அப்பியாசம் பண்ணி அவைகள் முற்றுப் பெற்றால் சைவக் கூற்றின் முடிவாகிய சித்தாந்த சைவத்தை அடைவர். இவ்வாறு படி முறையால் அன்றி ஒரு காலத்து எல்லாம் பெற முடியாது, முறையே ஒன்றன் பின் ஒன்றாகப்

பயின்று முடிவில் அடையப்படும் இச் சித்தாந்த சைவத்தினும் சரியை கிரியா யோகங்களை முறையாய் அனுட்டித்து முற்றிய பின் ஞானத்தைப் பெற்று அந்த ஞானத்தால் சிவபெருமான் திருவடிகளைச் சேர்வர். (எ...று) (கக)

புறச் சமய நெறி முதல் பல வேறு வகைப்பட்ட நெறிகளின் பயனாகிய முத்திகளின் இலக்கணமும் சைவ முத்தியின் இலக்கணமும் இவை எனக் கூறுகின்றது.

இம்மையே யிரெட்டாண் டெய்தியெழி லாரு
மேந்திழைபார் முத்தியென்று மிருஞ்சுவர்க்க முத்தி
யம்மையே யென்று முத்தி யைந்து கந்த
மறக்கெடுகை யென்றுமட்ட குண முத்தி யென்று
மெய்ம்மையே பாடாணம் போல்கை முத்தி யென்றும்
விவேகமுத்தி யென்றுந்தன் மெய்வடிவாஞ் சிவத்தைச்
செம்மையே பெறுகைமுத்தி யென்றுஞ்செப் புவர்கள்
சிவனடியைச் சேருமுத்தி செப்புவதிங் கியாமே.

(கொ-டு) அம்மையே இருஞ்சுவர்க்கம் முத்தியென்றும் ஐந்து கந்தம் அறக்கெடுகை முத்தியென்றும் எனவும் இங்கேயாம் செப்புவது சிவனடியைச் சேருமுத்தி எனவுங்கூட்டுக.

(பொ-ரை) சித்தாந்த சைவமல்லாத ஏனைச் சமய நூலாருக்கும் முத்திகளுள. அம் முத்திகள் படி முறைபால் நில முதல் நாத மீறாகிய முப்பத்தாறு தத்துவங்களில் ஒவ்வொன்றில் இருப்பனவாம். அவை வருமாறு: உலோகாயதன் இவ்வுலகமேஉள்ளது. பரலோகமாகியசுவர்க்கம்நரகமென்பதொன்றில்லை. ஸ்நான, போஜன முதலிய சவுக்கியமே சுவர்க்கம். இவைகளின்றி தரித்திரத்தினாலும் வியாதியினாலும் துன்பப்படுவதே நரகம். அழகினையுடைய பதினாறுண்டுள்ள ஆபரணங்க ளணிந்த பெண்களுடனே கூடி இன்புறுதலே முத்தி எனக்கூறுவன். மீமாம்ச நூலார் வேதோக்தமான யாகாதி கன்மானுஷ்டானங்களைச் செய்து இந்தத் தேகம் நீங்கிய பின் மறுமையில் திவ்ய தேகத்தைப் பெற்று பெரிய போகத்தை உடைத்தாகிய சுவர்க்க லோக போகம் அனுபவித்தலே முத்தி என்பர். பௌத்தன் ரூபம், வேதனை, குறிப்பு, பாவனை, விஞ்ஞானமாகிற ஐவகைக் கந்தங்களும் முற்றக் கெடுதலே முத்தி என்பன். சைனனாகிய ஆருகதன், அனந்த ஞானம், அனந்த தெரிசனம், அனந்த வீரியம், அனந்த சுகம், நிர்நாமம், நிர்க்கோத்திரம், நிராயுஸ்யம், சகல சம்யதாபாவம் ஆகிய எண்குணமும் அடைதலே முத்தி என்பன். வைசேடிகர் ஆத்ம ஞானத்தினாலே சக

துக்கங்களும் அவற்றிற்கேதுவாகிய ஞானமும் நீங்க பாடாணம் போல ஓரறிவும் அற்றிருப்பதே மோட்ச மென்பர். சாங்கியர் பிரகிருதி புருஷ விவேகத்தைப் பண்ணி பிரகிருதி விகாரங்களுக்கு ஆன்மாவாகிய தான் அன்னியமாக யான் என தென்பதற நிற்பதே மோட்சமென்பர். மாயாவாதி மாயை பிரமங்களை விசாரித்து மாயையைநீக்குவதேமோட்சமென்பர். பாஞ்சராத்திரிகள் மகா விஷ்ணுவின் கிருபையினால் இத் தேகத்தினின்றும் நீங்கி சத்திய சொரூபமாகிய சுத்த சித்து ரூபியாய் விட்டுணுவிற்குச் சமானமாய் சகல போகங்களும் மகா விஷ்ணுவைப் போலவே நித்தியமாய் உடைத்தா யிருக்கை மோட்சமென்பர். சிவ சமவாதி முதலிய சைவர்கள் சிவானுக் கிரகத்தாலே ஆணவம் முதலிய மும்மலங்களும் நீங்க சத்தியமும் சுத்தமுமாகிய ஆத்மாவின் முன் ஞானக் கிரியைகள் பிரகாசிக்கப் பெற்று அந்த ஞானக் கிரியைகளின் பிரகாசத்தால் சர்வஞ்ஞத்துவாதி ஆறு குணங்களும் விளங்கப் பெற்று சிவ சமமா யிருப்பதே மோட்சமென்பர். இதுவும் சிவபிரானுடைய உண்மை நிலையை அறிந்து இன்புறாத நிலையாதலால் பத முத்தியேயாம். இவ்விடத்து வேதாகம நூலுண்மையின்படி யாம்கூறும் முத்தியாவ தெது வெனின், ஆன்மாவும் சிவமும் அநாதியே பிரிவற்றுள்ளன. அப்பிரிவில்லாமையைத்தோன்றாதபடிஅநாதியே ஆணவ மலம் ஆன்மாவின் அறிவைத் தடுத்திருப்பதால் அந்த வுபாதியினால் அசத்தியமாகிய போகங்களைச் சத்தியமென மயங்கிநின்று சிவானுக்கிரகத்தாலேஅம்மயக்கம் நீங்க கண்ணினது காசம் நீங்கிய விடத்து அக்கண் காட்சியைப் பெற்றது போல அம் மயக்கம் நீங்கிய விடத்து சிவனுடைய பிரிவில்லாமையை அநன்னியமாக நின்று கண்டு சிவானந்த பரவசத்தினாலே முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்த சிவபெருமான் திருவடியை அடைதலேயாம். (எ...று)

'திருவடி' யென்பது இறைவனுடைய சித்துத் தன்மை. இக்கருத்துப்பற்றியே "அடியெனுமதுவும் அருளெனுமதுவும் அறைந்திடிற் பூரண நிறைவு" எனத் தாயுமான சுவாமிகளருளிச் செய்வாராயினர்.

அடைதலென்றதனால் வேறாகப் பிரிந்திருந்து அடைந்த தென்பது பொருளன்று. தன்னுடைய பிள்ளையானவன் வியாதியினாலே மிகவும் துன்பப்பட்டு குணமானபொழுது இந்தப் பிள்ளையை இப்பொழுது பெற்றேனென்றது போல யான் என தென்னும்போதத்தினால் சிவானுபவம் விளங்காதிருந்து அப்போதம் அறுதியில் அச்சிவானுபவம் விளங்கினதை அடைந்த தென்று சொல்லிய தென அறிக. (கஉ)

நேசமொடுந் திருவடிக்கீழ் நீங்காதே தூங்கு
நினைவுடையோர் நின்றிடுவர் நிலையதுவே யாகி
யாசையொடு மங்குமிங்கு மாகிபல மருவோ
ரரும்பாச மறுக்கும்வகை யருளின்வழி யுரைப்பாம்.

(கொ-டு) நேசமொடும் திருவடிக்கீழ் நீங்காதே தூங்கும் நினைவுடையோர் நிலையதுவேயாகி நின்றிடுவர் எனவும் படுகுட்டத்தில் கல்லினை விட்டெறியப்படும்பொழுது நீங்கி அது விடும்பொழுதில் பரக்கும் பாசினவும்கூட்டுக.

(பொ-ரை) மேற்கூறியவாறு சிவபெருமானிடத்து நீங்காத அன்போடு அச்சிவத்தைப் பொருந்தி பொருந்தி நிற்கின்றோமென்னும் நிலையினையும் கடந்த அதீதத்தை அடையவிரும்புவோர் அச்சிவமாய் நிற்பர். ஒரோவிடத்து பாசி பொருந்திய தடாகத்தில் கல்லெறியும் போது பாசிநீங்கியும் கல்லெறியாதபோது பாசிபடர்ந்தும் காண்பது போல சிவபெருமான் திருவடியை உணரும் போது மல மாயா கன்மங்கள் நீங்கியும் அத்திருவடியை உணராத பொழுது அச்சமயம் பார்த்து மல மாயா கன்மங்கள் வந்து தலைப்பட்டும் நிற்கும். அவ்வாறு மல மாயா கன்மங்கள் தலைப்பட்டு நிற்குமாயின் அந்நிலை பழைய வாசனை பற்றி நிகழ்வதாம். அவ்வாசனையால் சிவத்தினிடத்தும் கருவிகளிடத்தும் நிலைபெறாது சுழல்பவர் அவ்வாசனையைப்போக்கும் வண்ணம் முன்னர் ஒன்பதாம் சூத்திரத்திற் சொல்லும் உபாயத்தைக் கடைப் பிடித்து அனுட்டித்து அவ்வாசனையை நீக்கிக்கொள்ள வேண்டும். (எ...று) (௧௧)

நான்காமதிகரணம் முடிந்தது.

எட்டாஞ் சூத்திரம் முடிந்தது.

ஆகத்திருவிருத்தம் ௨௧௧.

---

## ஒன்பதாஞ்சூத்திரம்.

---

மேலைச் சூத்திரத்தால் பதிப்பொருளை அடைவதே பேறு. அப்பேற்றிற்குச் சிறந்தசாதனம் ஞானம். அந்தஞானம் ஞானசிரியனால் உண்டாமென்றுணர்ந்த பின்னர் ஞானத்தை அனுட்டிக்குமுறை எவ்வாறென்னும் ஆசங்கை நிகழுமன்றே. அந்நிகழ்ச்சிபற்றி அனுட்டிக்குமுறையைக் கூறுதற்கு ஒன்பதாஞ்சூத்திரம் எழுந்தது.

அனுட்டிக்கும் முறை தெரியாதவிடத்து அனுட்டிக்க முடியாதாதலின் அனுட்டிக்கும் முறையை வகுத்து இச்சூத்திரத்தாற் கூறுகின்றார்.

பதிஞானத்தால் சிவனை அடைதல் கூடுமெனவும் அப்பதி ஞானத்தில் நிலைபெறவொட்டாது செய்யும் வாசனையைக் கெடுக்கும் உபாயங்கள் இவையெனவும் சூத்திரப் பொருளைத் தொகுத்துக் கூறு கின்றது.

பாசஞா னத்தாலும் பசுஞானத் தாலும்
பார்ப்பரிய பரம்பரனைப் பதிஞானத் தாலே
நேசமொடு முள்ளத்தே நாடிப் பாத
நீழற்கீழ் நில்லாதே நீங்கிப் போதி
ஞாசைதரு முலகமெலா மலகைத்தே ராமென்
றறிந்தகல வந்நிலையே யாகும் பின்னு
மோசைதரு மஞ்செழுத்தை விதிப்படியுச் சரிக்க
வுள்ளத்தே புகுந்தளிப்ப னூனமெலா மோட.

(கொ-டு) பதிஞானத்தாலே உள்ளத்தே நாடி நேசமொடும் பாதநீழற்கீழ் எனவும் பின்னும் உள்ளத்தேபுகுந்து ஊனமெலாம்ஓட அளிப்பன் ஓசைதரும் அஞ்செழுத்தை விதிப்படி உச்சரிக்க எனவும் கூட்டுக.

(பொ-ரை) கருவிகளோடு கூடி அறிவதாகிய பாசஞானத்தாலும் நான் பிரமமென்னும் பசுஞானத்தாலும் பரசிவனை அடைய முடியாது. அவ்விரு ஞானங்களாலும் அடையமுடியாத பரம்பரனை அவனது திருவடி ஞானமாகிய பதிஞானம் ஒன்றனே தன்னறிவின்கண் வைத்தாராய்ந்து அன்புடன் அத்திரு வடி நீழலின் கீழ் நீங்காதே தூங்கப் பெறவேண்டும். அங்ஙனம் நிற்கப்பெறாது பிரபஞ்சத்தை நாடவருமாயின் அப்பிரபஞ்சம் யாவும்கானற் சலத்தின் தன்மை போல அசத்திய மெனக் கண்டு கழிப்பின் அந்நிலை கைகூடும். அங்ஙனம் கழிப்பதற்கு அறிவு சலனமின்றி நிற்க வேண்டுமாதலின் பண்டைப் பயிற்சி வயத்தால் வாசனை பற்றி சலிப்புஉண்டாமாயின் சலியாதிருத்தற் பொருட்டு பிர பஞ்ச நீக்கமும் சிவப்பேறும் தருவதாகிய முத்தி பஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரிக்க வேண்டும். (எ...று)

இச்செய்யுள் முதனூல் ஒன்பதாஞ்சூத்திரம் போல முக்கூற் றை உடையது. அவற்றுள்

முதற்கூறு—பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரனை பதிஞானத்தாலே நேசமொடுமுள்ளத்தே நாடிப் பாத நீழற் கீழ் (நிற்க)

இரண்டாங் கூறு—நில்லாதே நீங்கிப் போதி ஞாசை தருமுலக மெலாமலகைத்தேரா மென்றறிந்தகலவந்நிலையேயாகும்.

மூன்றாங்கூறு—பின்னுமோசைதருமஞ்செழுத்தை விதிப்படி யுச்சரிக்க வுள்ளத்தே புகுந்தளிப்ப னூனமெலாமோட. (க)

# முதலதிகாணம்.

பாசஞானத்தாலும்.........பாத நிழற் கீழ் (நிற்க) என்பது

, பாசஞானம் பசுஞானம் பதிஞானங்களின் இலக்கணம் இவை எனக் கூறுகின்றது.

வேதசாத் திரமிருதி புராணகலை ஞானம்
விரும்பசபை வைகரியா தித்திறங்கண் மேலா
நாதமுடி வானவெல்லாம் பாச ஞான
நணுகியான் மாவிவைகீழ் நாட லாலே
காதலினு னான்பிரம மென்னு ஞானங்
கருதுபசு ஞானமிவ னுடலிற் கட்டுண்
டோதியுணர்ந் தொன்றென்று வுணர்ந்திடலாற் பசுவா
மொன்றாகச் சிவனியல்பி னுணர்ந்திடுவன் காணே.

(கொ-டு) பாசஞானம் வைகரி ஆதித்திறங்கள் வேதம் சாத்திரம் மிருதி புராணம் கலைஞானம் விரும்பு அசபைமேலாம் நாதமுடி வான்வெல்லாம் கருது பசு ஞானம் நணுகி(ய) ஆன்மா இவைகீழ் நாடலாலே காதலினான் நான் பிரம மென்னும் ஞானம் எனவும் சிவன் இயல்பின் ஒன்றாக உணர்ந்திடுவன்காணே எனவும் கூட்டுக.

(பொ-ரை) மேற் கூறிப்போந்த மூவகை ஞானங்களுள் பாசஞானமாவது—வைகரி முதலிய வாக்கின் பகுதியவாகிய வேத சாத்திர முதலிய கலை ஞானங்களும் விரும்புகின்ற அசபையுமாகிய சொற்பிரபஞ்சமும், நில முதல் நாத மீறாகிய பொருட்பிரபஞ்சமும் ஆகிய இருவகைப் பிரபஞ்சங்களின் வாயிலாய் ஆன்மாவின் கண் நிகழும் ஏகதேச ஞானமாம். பசு ஞானமாவது—இப்பிரபஞ்சங்களைப் பொருந்திய ஆன்மா இவை யனைத்தும் தன்கீழ் அடங்கிய தென் றறிந்து அவற்றினின்றும் நீங்கிய பொழுது அப் பிரபஞ்சமாகிய பாச நீக்கத்தால் அனுதியே பாசத்தினீங்கி யிருக்கின்ற சிவனை ஒப்பேனென்று சடுதியில் மதிக்கவருவதோர் சிவசமவாதஞானமாம். கருவிகளினீங்கிய இந்ஞானத்தை யுடைய பசுவை சிவனோடு சமமென்றதனுல் இழுக் கென்னை எனில், இவ்வான்மா தூல சூக்கும காரண தேகங்களால் கட்டுப்பட்டும் நூலுணர்வால் உணர்த்த உணர்ந்தும் ஒவ்வோரிந்திரியங்களை உணர்ந்தும் இவ்வா றுணர்வதாகிய பாசத் தடையை ஞானத்தால் இடையே நீங்கப் பெறுதலின் அவ்வான்மா ஆதி முத்தனெனப்படும். பதி ஒருவன் உணர்த்த உணர்தலின்றி தானே மு...

தும் ஒருசேர அறிந்து அநாதியே பாசத்தடை நீங்கிய பேரறிவனுதலின் அநாதி முத்தனெனப்படும். ஆதலால் ஆதி முத்தனுகிய பசுவை அநாதி முத்தனுகிய பதியோடு சமமென்றல் கூடாது. இவ் வேற்றுமையைத் தெளிவாய் அறிந்து அப்பதியினுள் ளடங்கி அப்பதி வாயிலாய் நிகழும் ஞானம் பதி ஞானமாம். (எ..று)

பதிஞானமா மென்றது "ஒன்ருகச் சிவனியல்பின் உணர்ந்திடுவன் காணே" என்றதனுல் பெறப்பட்டது.

வேத சாத்திரங்க ளெல்லாம் பாச ஞான மெனக் கழிப்பின் ஞான நூல்தனை ஓதல் ஓதுவித்தல் முதலியன, ஞான பூசையென மேற்கூறியதோடு முரணுதோ வெனின், முரணுது. என்னை? அவ் வேத சாத்திரங்கள் பதி ஞானம் விளங்குதற்கு ஏதுவாக பயன் படுதல் கூடும் ஆதலா லென்க.

பசு ஞானத்தை சடுதியில் மதிக்க வருவதோர் ஞானமென்றது— ஆன்மா தனித்து நில்லாமையை விளக்கி நின்றது. அதாவது கரணங் கடந்த விடத்து பதியில் அழுந்த வேண்டும். அங்ஙனம் அழுந்தாது சீவன் தனித்து நிற்க முடியாது. நின்றதாக எண்ணுதலேயன்றி நிற்குமாறில்லை. அவ் வெண்ணமும் சடுதியில் மாறிக் கருவிகளோடு கூடு மென் றறிக. (உ)

பாடாண வாத ஞானமும் பேதவாத ஞானமும் பசு ஞானமே யெனவும் பதி ஞானத்தா லன்றி பசுத்துவ வாதனை நீங்காதெனவும் கூறுகின்றது.

கரணங்கள் கெடவிருக்கை முத்தியா மென்னிற்
கதியாகுஞ் சிலைமுட்டை கருமரத்தி னுயிர்கண்
மரணங்கொண் டிடவுறங்க மயங்கிமூர்ச் சிக்க
வாயுத்தம் பனைபண்ண வல்விடத்தை யடையச்
சரணங்கள் புகுநிழல்போற் றனையடையுஞ் சமாதி
தவிராது மலமிதுவும் பசுஞான மாகு
மரணங்க ளெரித்தவன்ற னடியையறி விறந்தங்
கறிந்திடீர் செறிந்ததுக ளகற்றி டீரே.

(கொ-டு) சிலைமுட்டை கருமரத்தின் உயிர்கள் (மருவக்) கதி ஆகும் சரணங்கள் புகும் நிழல்போல் தனை அடையும் சமாதி (முத்தியாமென்னில்( மர

ணங்கொண்டிட வுறங்க மயங்கி மூர்ச்சிக்க வாயுத்தம்பனை பண்ண வல் விடத்தையடைய (கதிஆகும்) இதுவும் பசுஞானமாகும் அறிவு இறந்துஅங்கு அரணங்கள் எரித்தவன்றன் அடியை அறிந்திடீர் செறிந்ததுகள் அகற்றிடீரே மலந் தவிராது.

(பொ-ரை) மேற் கூறியவாறு நான் சிவமென நிகழும் ஞானம் முத்தியாகாதாயினும் கரணங்களெல்லாம் கெடும்படி அவற்றினின்றும் ஆன்மா நீங்கப் பெறுதல் முத்தியாமெனின், மீனிற் றோன்றிய சினையினும், முட்டையினும், கருப்பாசயத்தினும், மரத்தினும், உயிர்கள்பொருந்துங்கால் கரணமின்றியிருத்தலின் அவையும் முத்தியாதல் வேண்டும். ஆகாமையின் இது பாடாணவாத ஞானமாம். பாடாண மென்பது கல். இனி ஒருவனுடைய நிழல் உச்சிப் போதின் கண் தன்னடியில் வந்து ஒடுங்கினாற் போல அறிவானது கரணங்களிற் செல்லாது ஆன்மாவாகிய தன்னிடத்து ஒடுங்கி நிற்பதே முத்தி எனின், மரணம், உறக்கம், மயக்கம், மூர்ச்சை, நஞ்சம் ஆகிய இவை பொருந்தியவிடத்தும் பிராண வாயு இயங்காது தம்பித்த விடத்தும், அறிவானது கரணங்களிற் செல்லாது ஆன்மாவாகிய தன் மாட்டொடுங்கி யிருத்தலால் அதுவும் முத்தியாதல் வேண்டும். ஆகாமையின் இது பேத வாத ஞானமாம். மேற்கூறிய பாடாண வாத ஞானமும் இப் பேத வாத ஞானமும் மேலைச்செய்யுளிற் கூறிய சிவ சமவாத ஞானமும் ஆகிய இவையெல்லாம் பசு ஞானங்களாம். இந்தஞானங்களால் சிவபிரானை அறிய முடியாதாதலால் முப்புரங்களையு மெரித்த சிவபிரானையும் ஆன்மாவாகிய தம்மையும் சிவ ஞானத்தால் அறியப் பெறுவீராக. அவ்வாறறிந்து உம்மைப் பந்தித்த மலத்தை நீக்கப் பெறுவீராக. மேற்கூறிய பசு ஞானங்கட் கேதுவாகிய பசுத்துவ வாதனையாகிய மலம் இச் சிவஞான முடையார்க் கன்றி நீங்காது. (எ...று) (ட)

**பதி ஞானத்தா லன்றி பசு ஞானம், பாசஞானங்களால் சிவனை அறியக் கூடாமைக் கேது அவ்விரு ஞானங்களும் தானே பிரகாசித்தலும் பிறிதோன்றைப் பிரகாசப் படுத்தலும் இல்லாமை எனக்கூறுகின்றது.**

சிவனையவன் றிருவடிஞா னத்தாற் சேரச்
செப்புவது செயல்யாக்குச் சிந்தை யெல்லா
மவனையணு காவென்று மாத லானு
மவனடியவ் வொளிஞான மாத லானு
மிவனுமியான் றுவக்குதிர மிறைச்சி மேதை
யென்புமச்சை சுக்கிலமோ விந்திரியக் கொத்தோ
வவமகல வெனையறியே னெனுமைய மகல
வடிகூட்டி யான்மாவைக் காட்ட லானும்.

(கொ-டு) சிந்தைவாக்குச் செயல் எல்லாம் அவனைஎன்றும் அணுகா ஆதலானும் இவனும் யான் துவக்கு உதிரம் இறைச்சி மேதை என்பு மச்சை சுக்கிலமோ இந்திரியக் கொத்தோ அவம் அகல எனை அறியேன் எனும் ஐயம் ஆதலானும் அவன் அடி ஞானம் அகல அவ்வொளி அடிகாட்டி ஆன்மாவைக் காட்டலானும் அவன் திருவடிஞானத்தால் சிவனைச் சேரச் செப்புவது.

(பொ-ரை) மேற்கூறிய பதி ஞானம், பசு ஞானம், பாச ஞானமாகிய மூன்றனுள் பாச ஞானமாகிய மனவாக்குக் காய முதலியன இறைவனை எக்காலத்தும் அணுகாமையால் அப் பொறிகள் வாயிலாய் ஏக தேசமாய் நிகழும் சுட்டுணர்விற்கு தானே பிரகாசித்தலும் பிறிதொன்றைப் பிரகாசப்படுத்துதலுமில்லை. பசு ஞானத்தை உடைய ஆன்மாவும் தன்னை தோல், இரத்தம் முதலியனவோ என ஐயப்பட்டு குற்றங்கள் நீங்கும்படியாக தன் சொரூபத்தை உள்ளவா றறியாது நிற்றலால் அதற்கும் தானே பிரகாசித்தலும் பிறிதொன்றைப் பிரகாசப்படுத்தலுமில்லை. ஆதலால் பாச ஞானம், பசு ஞானங்களால் பரசிவனை அறிய முடியாது. இறைவன் திருவடி ஞானமாகிய பதி ஞானம் மேற்கூறிய குற்றங்களின்றி தானே பிரகாசித்தலும், தன்னையும் ஆன்மாவையும் அவ் வான்மாவிற்கு பிரகாசப்படுத்துதலுமாய் நின்று எல்லாப் பொருளையும் இனிது விளக்குவதாம். ஆதலால் அத் தன்மைத் தாகிய பதி ஞானம் ஒன்றுனே அப்பதிப் பொருளை அறிய முடியும் என மேற்கொண்டது. (எ...று)

**ஆன்மா தன் சொரூபத்தை உள்ளவா றறியாமையாவது—கருவிகளின் வேறான சித்தெனவும் தனித்து நிற்கும் முதலன்றெனவும் உணராமையாம்.** (௪)

பசு ஞானம் பாசஞானங்கட்கு தானே பிரகாசித்தலும் பிறிதொன்றைப் பிரகாசப்படுத்துதலு மில்லாமையை அனுபவத்தில் வைத்து விளக்குகின்றது.

கண்டிடுங்கண் டனைக்காணு கரணங் காணு
கரணங்க டமைக்காணு வுயிருங் காணு
வுண்டியம ருயிர்தானுந் தன்னைக் காணு
துயிர்க்குயிரா மொருவனையுங் காணு தாகுங்
கண்டசிவன் றனைக்காட்டி யுயிருங் காட்டிக்
கண்ணுகிக் கரணங்கள் காணும னிற்பன்
கொண்டரனை யுளத்திற்கண் டடிகூடிற் பாசங்
கூடாது கூடிடினுங் குறிக்கடியி னிறுத்தே.

(கொ-டு) தனைக்காட்டி உயிருங் காட்டிக் கண்டசிவன்.

(பொ-ரை) மேற்கூறிய பசுஞான பாச ஞானங்கட்கு தானே பிரகாசித்தலும் பிறிதொன்றைப் பிரகாசப்படுத்தலு மில்லை என்றல் எவ்வாறு கூடுமெனின், பிறிதொரு பொருளை அறிகின்ற கண்ணனது தன்னியல்பையுங் காணமாட்டாது, தனக்கு முதலாகிய அந்தக் கரணங்களையும் காணமாட்டாது. கண்ணை விளக்குகின்ற அவ்வந்தக்கரணங்கள் தாமும் தன்னியல்பையும் தன்னைவிளக்குகின்ற வித்தியாதத்துவங்களையும் அறிய மாட்டாவாம். அந்தக்கரணங்களை விளக்குகின்ற அவ் வித்தியா தத்துவங்களும் தன்னியல்பையும் தனக்கு முதலாய் நிற்கும் உயிரையும் காணமாட்டாவாம். அவை போல வித்தியா தத்துவம் முதலியவற்றை விளக்குகின்ற ஆன்மாவும் தன்னியல்பையும் தனக்குயிராய் அறிவித்து நிற்கும் முதல்வனையும் காணமாட்டாது. ஆதலால் தற்சொரூபத்தையும் விளக்கி ஆன்ம சொரூபத்தையும் விளங்கச்செய்து இவ்வாறு விளங்குவதற்கும் விளங்கச்செய்வதற்கும் தனக்கொரு முதலின்றி எல்லாவற்றையும் ஒருசேர அறிந்து தானே பிரகாசித்தும் பிறவற்றைப் பிரகாசப்படுத்தியும் நிற்பது சிவஞானமாம். அவ்வாறு நிற்றலால் அச் சிவஞானத்தைத் துணையாகக் கொண்டுமுதல்வனைக் காணப்பெற்று அவன்திருவடியைக் கூடப்பெற்றால் பாச நீங்கும். நீங்கிய அப்பாசம் மீண்டும்கூடவரின் சிவபாவனையைவிடாது செய்து அவன்திருவடி ஞானத்தால் அச்சிவபிரானைச்சேரல் வேண்டும். (எ...று)

இதனல் பாச ஞானமாகிய கருவிகளும் பசுஞானமாகிய ஆன்ம அறிவும் தானே பிரகாசித்தல் அறவே இல்லை எனவும் தனக்குள் அடங்கிய பொருளை விளக்குவதாயினும் தனக்கு மேற்பட்ட பொருளை விளக்காமையால் பிறிதொன்றைப் பிரகாசப்படுத்துதல் இல்லையெனவுங் கூறியவா றறிக. (ரு)

முதலதிகரணம் முடிந்தது.

---

## இரண்டாமதிகரணம்.

நில்லாதே நீங்கிப்போதின்..................அங்கிலேயே யாகுமென்பது.

பதி ஞானம் பிரபஞ்ச வயிராக்கியத்தா லுண்டாகுமெனக் கூறுகின்றது.

குறித்தடியி னின்றட்ட குணமெட்டுச் சித்தி
கோகநதன் முதல்வாழ்வு குலவுபத மெல்லாம்
வெறுத்துநெறி யறுவகையு மேலொடுகீ ழடங்க
வெறும்பொயென நினைந்திருக்க மேலொடுகீ ழில்லா
னிறுத்துவதோர் குணமில்லான் றன்னையொரு வர்க்கு
நினைப்பரியா னென்றுமிலா னேர்படவந் துள்ளே
பொறுப்பரிய பேரன்பை யருளியதன் வழியே
புகுந்திடுவ னெங்குமிலாப் போகத்தைப் புரிந்தே.

(கொ-டு) அடியில் குறித்து நின்று எனவும் அறுவகை நெறியும் எனவும் உள்ளேவந்து நேர்பட எனவும் எங்கும் இலாப் போகத்தைப் புரிந்தே புகுந்திடுவன் எனவுங்கூட்டுக.

(பொ-ரை) மேற்கூறிய பதிஞானம் எதனால் வருமெனின், குருவருளால் ஒருகுறியின்கண் உரைத்து நின்றுகொண்டு பைசாசபதத்திற்குரிய அட்டமாசித்தியை நோக்க எண் மடங்கேற்றமாகிய அட்டசித்தியையுடைய பிரமபதமுதலிய எவ்வகைப் புவனங்களும் அப்புவனங்களின் உள்ள போக்கியங்களும் கக்கின சோறெனக் கண்டு அருவருத்துவிட்டு சுவரினுடைய வடிவைக் காணுங்காலத்து அதிலெழுதியிருக்கும் சித்திரம் காணப்படாததுபோல பிரபஞ்சம் யாவும் பொய்யெனக்கண்டு அல்வாறு கண்டகாட்சி சலியாதிருக்கப்பெற்றால் அப்பிரபஞ்சத்திற்கு வேறாகியும் மேல் கீழ் இல்லாதாகியும் ஒருகுணமில்லாதாகியும் பிரபஞ்சநாட்டமுள்ள ஒருவராலும் உணரப்படாததாயுமுள்ள ஞான சொரூபம் விளங்கித்தோன்றும். தோன்றவே அந்த ஞானத்தினிடத்துப் பெருங்காதல் அதிகப்படும். அதிகப்படவே சிவபிரான் அவ்வன்பின் வழியாகப் புகுந்து எவ்விடத்து மறிதற்கரிய பேரின்பமயமாய் உயிரின்கண் விளங்கித் தோன்றுவன். (எ...று) (௬)

இரண்டாம் அதிகரணம் முடிந்தது.

# மூன்றாமதிகரணம்.

ஓசை தரும் அஞ்செழுத்தை விதிப்படி உச்சரிக்க உள் ளத்தே புகுந்து அளிப்பன் ஊனமெலா மோட என்பது.

பிரபஞ்ச வயிராக்கியம் நிலைப்பதற்கு சிவோகம் பாவனை செய்ய வேண்டுமெனக் கூறுகின்றது.

கண்டவிவை யல்லேனு னென்றகன்று காணுக்
　　கழிபரமு நானல்லே னெனக்கருதிக் கசிந்த
தொண்டினொடு முளத்தவன்றா னின்றகலப் பாலே
　　சோகமெனப் பாவிக்கத் தோன்றுவன்வே றின்றி
விண்டகலு மலங்களெல்லாங் கருடதியா னத்தால்
　　விடமொழியு மதுபோல விமலதையு மடையும்
பண்டைமறை களுமதுநா னானே னென்று
　　பாவிக்கச் சொல்லுவதிப் பாவகத்தைக் காணே.

(கொ-டு) கண்ட இவைநான் அல்லேன் என்று காணுக்கழிபரமும் நான் அல்லேன் எனஅகன்று உளத்து அவன்றான் நின்ற கலப்பாலே கருதி கசிந்த தொண்டினொடும் சோகமெனப் பாவிக்க கருடதியானத்தால் விடம் ஒழியுமது போல வேறு இன்றித்தோன்றுவன் மலங்களெல்லாம் விண்டு அகலும் விமல தையும் அடையும்.

(பொ-ரை) உயிரானது தன்னை உடம்பென்றும் அவ்வுடம்பென்ற அறிவு நீங்கிய விடத்து பிரமமென்றும் இவ்வாறு விபரீதமாக உணரும். அவ் வாறுணராமல் சுட்டி யறியப்பட்ட உடம்புமுதலியன தன்னின் வேறாதலால் தான் அன்றென்றும், சுட்டியறியாத மேம்பட்டுநின்ற அப்பதிப்பொருள் சுட் டியறியாதாதலின் அதுவும் நான் அன்றென்றும், இவ்வாறாதலின் பாசத்திற் கும் பிரமத்திற்கும் தான் வேறென்றுங் கண்டு தன்னின் வேறாக அப்பாசத் தை மேற்கூறியவாற்றால் நீக்கவேண்டும். நீக்கி னைப் பதிப்பொருள் தன் னின் வேறாயினும் கண்ணொளியும் ஆதித்தனொளியும்போல தான் வியாப்பிய மாய் அடங்கியும் பதிவியாபகமாய் மேம்பட்டும் வேற்றுமையின்றி ஒற்றுமைப் பட நிற்றலை உணர்ந்து அவ்வாறு நிற்கும் பதிப்பொருளிடத்து தானடங்கி யிருத்தலாகிய அடிமைத் திறத்தையும் தன்னிடத்துப் பதிப்பொருள் கலந்தி ருத்தலையும் நோக்கி முன்போல் முனைப்பின்றி அருள்வழியில் நின்று சிவமே

தானென சிவோகம் பாவனை செய்யவேண்டும். செய்யின் கருடபாவனை செய்யும் மாந்திரீகனுக்கு அக்கருடனாகிய அதிதெய்வம் பிரிப்பின்றித்தோன்றி விடத்தை நீக்கித் தெளிவுசெய்யுமாறுபோல சிவபிரானும் இவ்வான்மாவிற் பிரிப்பின்றி அத்துவிதமாய்த் தோன்றி மலங்கள் முழுவதும் நீக்கி சுத்தமாகும்படி செய்வன். பழைய வேதாந்தமும் அது நான் ஆனேனென்று பாவிக்கச் சொல்வது இப்பாவனையையேயாம். யாதானுமொன்றைப்பற்றி நிற்பதன்றி தனித்துநிற்கமாட்டாத ஆன்மா பாசத்தை நீக்கியவிடத்து சிவோகம் பாவனை செய்யவில்லையாயின் மீண்டும் பாசத்தைப் பற்றுமென்பது கருத்தென அறிக. (எ...று)

பதியும் ஆன்மாவும் இவ்வாறு பிரிப்பின்றி நிற்கும் அத்துவித நிலையை உணராது ஒருபொருள் மற்றொரு பொருளாதல் எவ்விடத்துமில்லாமையால், அது நான் ஆனேனென்னும் மகா வாக்கியத்திற்கு ஒன்று கெட்டுப் பிறிதொன்றாமென பரிணாம வாதங்கூறுவர் ஓர் சாரார். இனி அம்மகா வாக்கியத்திற்கு அதுவென்றதும் நானென்றதும் விட்டுவிடாத இலக்கணை எனக்கொண்டு கேவலாத்துவிதம் கூறுவர் மற்றொரு சாரார். விட்டுவிடாத இலக்கணையாவது பிரம்மசாரியாய் மதுரையில் இருந்தவனே சந்நியாசியாய்க் காசியிலிருக்கின்றானென்னுமிடத்து ஆச்சிரமத்தையும் இடத்தையும் தள்ளில் ஒருவனேயாதல்போல ஜீவ உபாதி ஈசுவர உபாதிகளைத் தள்ளினால் பிரமம் ஒன்றே எனக்கூறுதல். இவர் அத்துவிதச்சொல்லிற்கு இரண்டாவது பொருள் ஒன்றுமில்லையென்று கொண்டதால் கேவலாத்துவிதி எனப்பட்டார். ஒன்றுமில்லாத நிலை கேவலம். இனி அம்மகா வாக்கியத்திற்கு அதுவென்னும் பதி பல பேதப்படினும் அப்பேதமெலாம் ஆகுபெயரினால் ஒரு கடவுளையே குறிக்குமென்பர் பிறிதொரு சாரார். இவர் கடவுளின் வேறாகிய ஆன்மாவையும் பாசத்தையும் ஒப்புக்கொண்டு கடவுள் ஒன்றே என்பது அத்துவிதச் சொல்லின் பொருளெனக்கொண்டாராதலின் விசிட்டாத்துவிதி எனப்பட்டார். விசிட்டம் விசேடணத்தை யுடையது. விசேடணம் பசுபாசங்களாம். இவ்வாறு கூறுவாரெல்லாம் வேதாந்தத்தில் கூறும் அது நான் ஆனேனென்னும் மகா வாக்கியத்தையும் அவ்வாறாதற்குரிய சம்பந்தத்தை விளக்கும் அத்துவிதச் சொல்லையும் பிரமாணமாகக் கொண்டுள்ளாராகலின் அவ்வாக்கியங்கட்கு அவர் கொண்ட பொருள் உண்மையல்லவென்பதை உணர்த்

துவதற்குப் பண்டை மறைகளும் அது நான் ஆனேனென்று பாவிக்கச் சொல்லுவது இப்பாவகத்தைக் காணே யென்றருளிச் செய்தவாறறிக.

ஆகவே வேதாந்தமும் சித்தாந்தமும் உண்மையாய் நோக்குவார்க்கு அதுவென்னும் பதிப்பொருளொன்றும் நானென்னும் பசுப்பொருளொன்றும் ஆக இருபொருளுண்டெனவும் ஆனேன் என்றதனால் ஆகவொட்டாது தடைசெய்து நின்ற ஏனைப் பாசப் பொருள் பிரிக்கப்படுவதுபோல் அவ்விருபொருளும் பிரிக்கமுடியாதெனவும் ஆதலால் பிரிக்கக்கூடிய பாசத்தைப் பிரித்து பிரிக்கமுடியாத பதிப்பொருளை சார்ந்த பொருளின் தன்மையை யடைதற்குரிய ஆன்மா தானாக பாவிக்கில் பதியே யாகுமெனவும் நன்கு விளங்கும். (எ)

சிவோகம் பாவனை நிலைப்பதற்கு பஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரிக்கவேண்டுமெனக் கூறுகின்றது.

அஞ்செழுத்தா லான்மாவை யரனுடைய பரிசு
 மரனுருவு மஞ்செழுத்தா லமைந்தமையு மறிந்திட்
டஞ்செழுத்தா லங்கசர நியாசம் பண்ணி
 யான்மாவி னஞ்செழுத்தா லிதயத் தர்ச்சித்
தஞ்செழுத்தாற் குண்டலியி னனலை யோம்பி
 யணைவரிய கோதண்ட மணைந்தருளின் வழிநின்
றஞ்செழுத்தை விதிப்படியுச் சரிக்கமதி யருக்க
 னணையரவம் போற்றோன்று மான்மாவி லரனே.

(கொ-டு) (ஆன்மா அரனுக்கு உடைமையாம் பரிசும்) ஆன்மாவை அரனுடைய பரிசும் அஞ்செழுத்தால் (அறிந்திட்டு) அரனுருவும் அஞ்செழுத்தால் அமைந்தமையும் அறிந்திட்டு அங்கசர நியாசம் அஞ்செழுத்தாற் பண்ணி இதயத்து ஆன்மாவின் அஞ்செழுத்தால் அர்ச்சித்து குண்டலியின் அஞ்செழுத்தால் அனலையோம்பி எனவும் அரனே ஆன்மாவிற் றோன்றும் மதியருக்கன் அணையரவம்போல் எனவுங்கூட்டுக.

ஆன்மாவை அரனுடைய பரிசும் என்றதிலுள்ள உம்மையால் ஆன்மா அரனுக்கு உடைமையாம் பரிசும் வருவிக்கப்பட்டது.

(பொ-ரை) மேற்கூறியவாறு பதியினிடத்து தானடங்கியும் தன்னிடத்து பதிகலந்தும் இருக்கின்றதனால் சிவோகமெனப் பாவிக்குமிடத்து அப்பாவனை நிலைத்தற்காக தானாகிய ஆன்மா அரனுக்கு உடைமையாந்தன்மையும் ஆன்மாவை அரன் உடையனுமாய் நிற்கின்ற தன்மையும் ஐந்தெழுத்து ஓதும்

முறையில் வைத்தறிந்து அஙன் திருமேனியும் ஐந்தெழுத்தா லமைந்திருப்பதை உணர்ந்து அடிமையும் உடையானுமாய் நிற்கின்ற அம்முறையே அங்கநியாச கரநியாசங்களும் அவ்வைந்தெழுத்தாற் செய்து கொண்டு இருதயத்தில் ஆன்மாவில் ஐந்தெழுத்தால் இறைவனைப் பூஜித்து உந்தியில் அவ்வஞ்செழுத்தால் ஓமஞ்செய்து அணைதற்கரிய புருவநடுவைப் பொருந்தி இறைவன் திருமேனியைத் தியானித்து அவனருள் வழியாக நின்று அவ்வஞ்செழுத்தை மானதமாக உச்சரிக்கவேண்டும். இவ்வாறு சிவோகம் பாவனையும் ஐந்தெழுத்து மந்திரமும் அகத்தே செய்யும் பூஜை, ஓமம், தியானம் என்னும் கிரியையும் ஆகிய இம் மூன்றனும் சலனமின்றி நின்றுகொண்டு அவ்வைந்தெழுத்தை உச்சரிக்கப் பெறுவார்க்கு பசுபாசங்கள் போல விளங்கித் தோன்றாத அப்பதிப்பொருள் ஆன்மாவின் மாட்டு விளங்கித்தோன்றும். தோன்றுதல் எதுபோலவெனின் நவக்கிரகங்களுள் ஏனைய கிரகங்கள்போல தனித்து விளங்காத இராகு கேதுக்கள் கிரகணகாலத்தில் சூரிய சந்திரர் மாட்டு விளங்கித் தோன்றுவதுபோலவாம். (எ...று)

ஐந்தெழுத்தின் பொருள் சிவம், அருள், ஆன்மா, திரோதை மலம் என ஐவகைப்படும். இவற்றுள் மலம் திரோதையை நீக்கி ஆன்மா அருளால் சிவனுடன் கலக்கு முறையை உணர்த்துவதாய ஐந்தெழுத்தே இங்கு கூறப்பட்டது. அது சிவோகம் பாவனையை உணர்த்துவதாம். அம்மந்திரத்தின் முறையை குருவினிடத்து உபதேச வாயிலாக அறிக.

பசு விளங்கித் தோன்றுதலாவது—யான் இதனை அறிந்தேன், அறிகின்றிலேன் என உணர்தல்.

பாசம் விளங்கித் தோன்றுதலாவது—என் கண், என் மனம் என உணர்தல். (அ)

பஞ்சாக்கரத்தால் இதயத்தில் இறைவனைப் பூசிக்குமுறை இவ்வாறெனை வகுத்துக்கூறுகின்றது.

நாட்டுமித யந்தானு நாபியினி லடியாய்
ஞாலமுத றத்துவத்தா லெண்விரலு ளத்தாய்
மூட்டுமோ கினிசுத்த வித்தைமல ரெட்டாய்
முழுவிதழெட்டக்கரங்கண் முறைமையினி னுடைத்தாய்க்
காட்டுகம லாசனமே லீசர்சதா சிவமுங்
கலாமூர்த்த மாமிவற்றின் கண்ணுறுஞ் சத்தி
வீட்டையருள் சிவன்மூர்த்தி மானுகிச் சத்தி
மேலாகி நிற்பனிந்த விளைவறிந்து போற்றே.

(கொ-டு) நாபியினில் ஞாலம் அடியாய் முதல்தத்துவத்தால் எண் விரல் நாளத்தாய் மூட்டுமோகினி சுத்தவித்தை மலரெட்டாய் முழுஇதழ் எட்டு அக்கரங்கள் முறைமையினில் உடைத்தாய் ஈசர் சதாசிவமுங் கலாமூர்த்தமாம் சத்தி இவற்றின் கண்ணுதும் நாட்டும் இதயகமலந்தானும் காட்டு ஆசனம் மேல் சத்தி மேலாகி வீட்டையருள் சிவன் மூர்த்தி மானுகி நிற்பன் இந்தவிளைவு அறிந்து போற்றே.

(பொ-ரை) மேற்கூறியவற்றுள் இதயத்தில் இறைவனைப் பூசிக்கும் முறை எவ்வாறெனின், உந்தியில் பிருதிவி தத்துவம் கிழங்காகவும் ஏனைய அப்பு முதலிய இருபத்துமூன்று தத்துவங்களும் அவ்வுந்தியினின்று தோன்றி எண் விரல் அளவாயுள்ள தண்டாகிய நாளவடிவாகவும் வித்தியா தத்துவங்கள் ஏழும் சுத்ததத்துவத்தில் வித்தை ஒன்றும் ஆக எட்டுத் தத்துவங்களும் எட்டு இதழ் வடிவாகவும் அவ்விதழ் எட்டும் பிரணவமுதலிய எட்டு அக்கரங்களை உடையதாகவும் ஈசுவரம், சதாசிவமென்னும் இரண்டு தத்துவமும் அறுபத்துநான்கு பேதப் படுமாதலால் அறுபத்துநான்கு கேசரமாகிய பூந்தாதுவடிவமாகவும் சத்திதத்துவம் அக்கேசரங்களுக்குள்ளாகிய கொட்டையாகிய பொகுட்டு வடிவமாகவும் அச்சத்திதத்துவமே அப்பொகுட்டிற் காணப்படும் ஐம்பத்தொரு அக்கரமாகிய பீசவடிவாகவும் உடைய இருதயகமலம் ஆசனமாம். அவ்வாசனத்தின்மேல் சத்தியே வடிவாகவும் அவ்வடிவத்தில் வீடுதருகின்றவனுகிய சிவபிரான் வடிவத்தை உடையவனுகவும் நிற்பன். இம்முறையை அறிந்து பூசிப்பாயாக. இவ்வாறு செய்யும் பூசை அந்தரியாக பூசையெனப்படும். (எ...று)

மேல் இறைவன் வடிவம் ஐந்தெழுத்தெனக் கூறி அதன்பின் ஆன்மாவில் அர்ச்சிக்கவேண்டுமென்று கூறி இவ்விடத்து சத்தியில் விளங்குவனெனக் கூறியதன் கருத்தென்னை எனின், இறைவனுக்கு ஐந்தெழுத்து தூலவடிவம். ஆன்மா சூக்குமவடிவம். சத்தி அதிசூக்குமவடிவமென்பதை அறிவித்தற்கு இவ்வாறு கூறினர். ஐந்தெழுத்து தூலவடிவமாவது எவ்வாறெனின், அவ்வைந்தெழுத்தும் பதி, பசு பாசமென்னும் முப்பொருளையும் குறிக்கும். அம்முப்பொருளினும் இறைவன் கலந்துநிற்கின்ருன். அந்நிலை அவ்விறைவனுக்குத் தூலம். அம்முப்பொருள்களுள் ஆன்மாவிற் கலந்துநிற்கும் இறைவன் நிலை சூக்குமம், சிற்சத்தியிற் கலந்துநிற்கும் இறைவன் நிலை அதிசூக்குமம். சத்தியினின்று பிரிந்து தோன்றுதல் இல்லையாதலால் அதற்குமேல் நிலையில்லை. (கூ)

அந்தரியாக பூசைக்கு வேண்டிய பூசாதிரவியங்கள் சேகரிக்கும் முறை இதுவெனவும் இப்பூசை அவசியம் வேண்டுமெனவும் கூறுகின்றது,

அந்தரியா கந்தன்னை முத்திசா தனமா
வறைந்திடுவ ரதுதானு மான்மசுத்தி யாகுங்
கந்தமலர் புகையொளிமஞ் சனமமுது முதலாக்
கண்டனவெ லாமனத்தாற் கருதிக் கொண்டு
சிந்தைதனி லர்ச்சிக்கச் சிவனைஞா னத்தாற்
சிந்திக்கச் சிந்திக்கத் தர்ப்பணத்தை விளக்க
வந்திடுமவ் வொளிபோல மருவியர னுளத்தே
வரவரவந் திடுவன்பின் மலமான தறுமே.

(கொ-டு) கந்தம் மலர்புகை ஒளிமஞ்சனம் அமுது முதலாக் கண்டன வெலாம் மனத்தால் கருதிக்கொண்டு சிந்தைதனில் சிவனை ஞானத்தால் அர்ச்சிக்கச் சிந்திக்கச் சிந்திக்க தர்ப்பணத்தை விளக்க வந்திடும் அவ்வொளிபோல அரன் உளத்தேமருவி வரவர வந்திடுவன் பின்மலமானது அறுமே அதுதானும் ஆன்மசுத்தியாகும் அந்தரியாகந்தன்னை முத்திசாதனமா அறைந்திடுவர்.

(பொ-ரை) மேற்கூறிய அந்தரியாக பூசைசெய்யுமிடத்து சந்தனம், புட்பம், தூபம், தீபம், திருமஞ்சனம், திருவமுது முதலிய பூசா திரவியங்களெல்லாம் மனத்தால் கற்பித்துக்கொண்டு அபிஷேகம் அலங்காரம் தூப தீப ஆராதனை நைவேத்தியம் முதலியனவும் மனத்தால் செய்து ஆன்மாவினிடத்தில் சிவனை ஞானத்தால் அர்ச்சித்தலும், ஓமித்தலும், தியானித்தலும் செய்யவேண்டும். அவ்வாறு செய்யச் செய்ய கண்ணுடிக்குப் பொடியிட்டு விளக்க விளக்க ஒளி மேலிட்டு மாசு நீங்கு மாறுபோல அச்சிவம் உள்ளத்தில் மேலிட்டு மேலிட்டு விளங்கித்தோன்றி மலம் பற்றறக் கழியும். அங்ஙனம் கழிதல் ஆன்ம சுத்தியாம். மலங்கழிதலாகிய அவ்வான்மசுத்திக்கு இவ்வந்தரியாக பூசை அவசியம் வேண்டப்படும். ஆதலின் இப்பூசையை முத்திசாதனமாக அறிக.(எ...று)(௧0)

மலம் கழிதலாகிய ஆன்மசுத்திக்கு புறப்பூசையும் அங்கமெனவும் அப்பூசை செய்யுமுறை இவ்வாறெனவும் கூறுகின்றது.

புறம்பேயு மரன்கழல்கள் பூசிக்க வேண்டிற்
பூமரத்தின் கீழுதிர்ந்த போதுகளுங் கொண்டு
சிறந்தாருஞ் சீர்ச்சிவனை ஞானத்தா லங்குச்
சிந்திக்கும் படியிங்குச் சிந்தித்துப் போற்றி

யறம்பாவங் கட்குநா மென்கடவே மென்று
　　மாண்டவனைக் கண்டக்கா லகம்புறமென் னுதே
திறம்பாதே பணிசெய்து நிற்கை யன்றே
　　சீரடியார் தம்முடைய செய்தி தானே.

(கொ-டு) சிறந்துஆரும் சீர்ச்சிவனை ஞானத்தால் அங்குச் சிந்திக்கும்படி புறம்பேயும் இங்குச் சிந்தித்து வேண்டின் பூமரத்தின்கீழ் உதிர்ந்தபோதுகளுங் கொண்டு அரன்கழல்கள் போற்றிப்பூசிக்க ஆண்டவனைக் கண்டக்கால் அறம் பாவங்கட்கு நாம் என்கடவே மென்றும் அகம் புறம் என்னுதே திறம்பாதே பணிசெய்து நிற்கையன்றே சீரடியார் தம்முடைய செய்திதானே.

(பொ-ரை) மேற்கூறியவாறு சிவபெருமானை அகத்துப் பூசித்தலே யன்றி புறத்துப் பூசித்தலும் அவனை அடைவதற்கு அங்கமாதலின் அப்புறப் பூசைசெய்யவேண்டுமாயின் சிறந்து விளங்கும் புகழையுடைய அம்முதல்வனை ஞானத்தால் அகத்து ஆன்மாவில் பூசித்ததுபோல புறத்தே ஒரு வடிவத்தில் இறைவனைச் சிந்தித்து பூசாதிரவியங்கள் வேண்டுமாயின் தான் வருந்துதலும் பிறரை வருத்துதலுமின்றி மரத்தின் கீழுதிர்ந்த பூக்களும் யாறு குளம் முதலியவற்றுள் உளதாகிய நீரும் யாசகமின்றி வந்த அமுது முதலியனவும் கொண்டு அம்முதல்வன் திருவடிகளைப் பூசிக்கக்கடவர். பூசிக்குங் காலத்து அகத்தாவது புறத்தாவது ஒரு குறியின்கண் இறைவனைக் காணப்பெறுங்கால் அகம் புறம் என்னும் வேற்றுமையால் இவ்வுலகத்தார்போலப் பூசித்தலும் புண்ணிய பாவங்கட்கு யாம் என்செயக் கடவேமெனச் சிந்தித்தலும் அது வேறு இது வேறென்னும் வேற்றுமையுமின்றி எவ்விடத்தும் சிவனையே பார்க்குந் தன்மையராய் எச்செயலும் அவனருள்வழியே செய்துநிற்றல் மெய்யடியார் செய்தியாதலால் அவ்வாறு செய்யவேண்டும். (எ...று) (கக)

புறப்பூசை, அகப்பூசை இரண்டினுள்ளும் அகப்பூசையே விசேடமெனக் கூறுகின்றது.

இந்தனத்தி னெரிபாலி னெய்பழத்தி னிரத
　　மெள்ளின்க ணெண்ணெயும்போ லெங்குமுள னிறைவன்
வந்தனைசெய் தெவ்விடத்தும் வழிபடவே யருளு
　　மலமறுப்போ ரான்மாவின் மலரடிஞா னத்தாற்
சிந்தனைசெய் தர்ச்சிக்கச் சிவனுளத்தே தோன்றித்
　　தீயிரும்பைச் செய்வதுபோற் சீவன் றன்னைப்
பந்தனையை யறுத்துத்தா னாக்கித்தன் னுருவப்
　　பரப்பெல்லாங் கொடுபோந்து பதிப்பனிவன் பரலே.

(கொ-டு) இறைவன் எங்கும்உளன் எவ்விடத்தும் வந்தனைசெய்து வழிபடவே அருளும் எனவும் சிவன்உளத்தே தோன்றிப்பந்தனையை அறுத்து எனவும் இவன்பாலே பதிப்பன் எனவுங்கூட்டுக.

(பொ-ரை) இறைவன் உலகத்தார்க்கு விறகினிடத்துத் தீப்போல சிறிதும் தோன்றாது மறைந்து உடனாயும் மந்ததரமலபாகமுடைய சரியையாளருக்கு பாலில் நெய்போல ஒருவாற்றாற் றோன்றியும் தோன்றாது மறைந்து உடனாகியும் மந்தமலபாகமுடைய கிரியையாளருக்கு பழத்தில் இரதம்போல உய்த்துணருமிடத்துத் தோன்றுவதாய் உடனாகியும் தீவிரமலபாகமுடைய யோகிகளுக்கும் தீவிரதர மலபாகமுடைய ஞானிகட்கும் எள்ளின்கண் எண்ணெய்போல விளங்கித்தோன்றினும் பிரித்தறியப் படாது உடனாகியும் நிற்பன். இவ்வாறு அகம்புறமென்ற பிரிவின்றி இறைவன் எவ்விடத்து முளனாதலால் மேற் கூறியவாறு அகத்தாதல் புறத்தாதல் எவ்விடத்து வழிபடினும் அனுக்கிரகிப்ப னென்பதே தேற்றம். அவ்வாறாயினும் பண்டைப்பயிற்சி வயத்தால் வாதனாமலம் வந்து தாக்கப் பெறுவோர் அம்மலத்தை நீக்கும் பொருட்டு அம்மலத்திற் கிருப்பிடமாகிய ஆன்மாவிடத்தில் பதிஞானத்தால் சிவனை வழிபடுதலாகிய அகப்பூசை அம்மலநீங்குதற்குரிய இயைபு நோக்கி விசேடமாம். அவ்வாறு அகப்பூசைசெய்யின் சிவன் ஆன்மாவினிடத்து விளங்கித்தோன்றி வாசனையைப்பற்றறத்துடைத்து இரும்பைத் தன் வண்ணமாக்கும் தீப்போலசிவனை தன் வண்ணமாக்கி தனது சர்வஞ்ஞத்துவாதி எண்குணங்களாகிய பேரானந்தப் பெருஞ் செல்வ முழுவதும் இவனுடையதாகச் செய்தருள்வன். (எ...று)

ஆன்மாவினிடத்து அர்ச்சிக்க மலம் அறுமென மேல் பத்தாவது செய்யுளில் சொல்லிவிட்ட படியால் இவ்விடத்துச் சொல்லவேண்டுவதின்று. ஆயினும் பாச நீக்கம் சிவப்பேறு என்னும் பயன் இரண்டனுள் மேல் பாச நீக்கம் கூறி இவ்விடத்து "தானாக்கி தன்னுருவப் பரப்பெல்லாம் கொடுபோந்து பதிப்பன்" என சிவப்பேறு கூற வேண்டியதற்காக கூற வேண்டாத அதனையும் இயைபுபற்றிக் கூறினர். ஆதலின் இது வேண்டாது கூறி வேண்டியது முடித்த தாம்.

எண் குணங்களாவன—தன் வயத்தனாதல், தூய வுடம்பினனாதல், இயற்கை யுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை என்பனவாம். இவற்றுள் தன்வயத்தனாதலை சுவதந்திரத்துவம் எனவும் தூய வுடம்பினனாதலை விசுத்ததேகமெனவும் இயற்கை யுணர்வினனாதலை நிராமயான்மா எனவும் முற்று

முணர்தலை சருவஞ்ஞத்துவ மெனவும் இயல்பாகவே பாசங்களி னீங்குதலை அநாதிபோத மெனவும் பேரருளுடைமையை அலுப்த சத்தி எனவும் முடிவிலாற்ற லுடைமையை அநந்த சத்தி எனவும் வரம்பிலின்ப முடைமையை திருப்தி எனவுங் கூறுவர். இவ்வெண் குணங்களுடைய இறைவனை குணாதீத னென்று கூறுதல் எவ்வாறு பொருந்துமெனின், மாயையாகிய சடத்தின் குணமும் ஞானமாகிய சித்தின் குணமுமென குண மிரு வகைப்படும். அவற்றுள் மாயை யின் குணம் சாத்துவிகம், இராசதம், தாமத மென மூத்திறப்படும். இம்முக் குணங்களும் மாயாகாரியமாகிய தனுகரண புவன போகங்க ளிற் கட்டுப்பட்டிருக்கும் ஆன்மாவி னிடத்து நிகழ்வனவாம், இம் முக்குணங்களுள் சாத்துவிகம் சாந்தத்தையும் இன்பத்தையுந்தரும். இராசதம் பிரவிருத்தியையுந் துன்பத்தையுந் தரும். தாமதம் மோகத்தையும் மூடத்தையுந் தரும். இவ்வாறு ஒன்றோடொன்று மாறுபடுகின்ற இம் முக்குணங்களும் பந்த ஏதுவாம். இறைவன் மாயாரகித னைதால் இம் முக்குணங்களையுங் கடந்தவ னென்பது தோன்ற குணாதீதனென்றது பொருந்தும். இவ்வாறன்றிக் குணா தீத னென்பதற்கு ஞான குணமு மில்லாதவ னென்பது பொருள ன்று. ஞான குணமு மில்லாதவனாயின் குணமில்லாத குணி இல்லை யாதலால் இறைவனும் இல்லையென்ற நிரீச்சுரவாதமாகும். அன்றி யும் ஒரு குணமுமில்லாத பொருள் வெறும் பாழெனப்பட்டு அப்பாழ் உயிர்களின் நன்மை தீமைகளை யறியு மென்றலும் அநுக்கிரகஞ் செய்யுமென்றலும் பொருந்தாதாய் முடியும். ஆதலால் ஞான குண முடையவ னென்பதே தேற்றம்.

இனி அந்த ஞான குணம் எட்டு வகைப்படுவானே னெனின், எட்டுத்தன்மை இறைவனுக்கு வேண்டப்படுதலால் எட்டுவகைப்பட் டனவாம். எட்டுத் தன்மை வருமாறு—உயிர்க்கு வினையின்பயனாகிய இன்ப துன்பப் பயனை ஊட்டுவித்தற்கும் வினை யொப்பு வந்தவர்க்கு முத்தி கொடுத்தற்கும் எண்ணியதை இடையூறு புகுதாமல் எண் ணியபடி முடிக்குந் தன்மையாகியதன்வய மென்னுஞ் சுவதந்திரத் துவம் வேண்டப்படுவ தாயிற்று. இவ்வாறு செய்யு மிறைவனுக்கு வடிவம் உருவமாயின் வியாபகமாய் எவற்றையும் அறிதல் கூடாதா தலின் வியாபகமாய் எவற்றையும் அறியுந்தன்மையாகிய தூயவுடம் பென்னும் விசுத்த தேகம் வேண்டப்படுவதாயிற்று. அதாவதுசித் துருவென்ற படியாம். சித்துருவாயினும் ஆன்மாவாகிய சித்துப்

போல்அறிவிக்க அறியுமாயின் சுவதந்திரமாகிய தன்வயத்துக்கிழுக்காதலின் தானே அறியுந்தன்மையாகிய இயற்கை யுணர்வென்னுநிராமயம்வேண்டப்படுவதாயிற்று. ஆமயம் என்பது துன்பம்,அதுமலத்தைக்குறிக்கும். நிராமயம் என்பது மலமில்லாமை. மலமில்லா திருப்பினும் மலம் நீங்கிய முத்தான்மாவைப் போல ஏகதேச அறிவுடையதாயின் பஞ்ச கிருத்தியங் கூடாதாதலின் முற்றுமுணர்தலாகிய சருவஞ்ஞத்துவம் வேண்டப்படுவதாயிற்று. சருவஞ்ஞத்துவம்மலம் நீங்கிய முத்தான்மாவிடத்துக் காணப்படுதல் போலவாயின் இயற்கையுணர்வினனென்றல் பொருந்தாதாதலின் இயல்பாகவேபாசங்களினீங்குதலாகிய அநாதிபோதம் வேண்டப்படுவதாயிற்று. பாசமில்லா திருப்பினும் அருளுடையனாயிருந்தாலன்றி அநுக்கிரகிக்க முடியாதாதலின் பேரருளுடைமை என்னும் அலுப்தசத்தி வேண்டப்படுவதாயிற்று. லுப்தம்-கொடாமை. அலுப்தசத்தி-கொடுக்கும்சத்தி. பேரருளுடைமைஎன்பதுஉயிர்கள் மாட்டுத் தோன்றும் அருள்போலன்றிஎல்லா உயிர்க்கும் அஞ்ஞானப்பிணியை நீக்கும் அருளைக்குறித்தது. அருளுடையனுபினும் அளவிறந்த உயிர்களின்பொருட்டு அவரவர் கன்மத்துக் கேற்பபல வேறு தொழிற்செய்ய வேண்டுதலின் முடிவிலாற்றலென்னும் அநந்தசத்தி வேண்டப்படுவதாயிற்று. அநந்தசத்தி இருப்பினும் அதனுல் துன்பமில்லாமல் பூரண இன்ப முடையவனுயிருந்தாலன்றி உயிர்களுக்கு ஆனந்த பூர்த்தி செய்தல் கூடாதாதலின் வரம்பிலின்ப மென்னுந் திருப்தி வேண்டப்படுவ தாயிற்று.

இவ்வெண் குணங்களுள் இயற்கை யுணர்வை இயல்பாகவே பாசங்களினீங்குதலினும் தூய உடம்பை பேரருளுடைமையினும் அடக்கி ஆறெனவுங்கூறுவர். இயல்பாகவே பாசநீக்க மிருப்பின் இயற்கை யுணர்வுண்டாதலும் பேரருளுடைமை யிருப்பின் ஞானத்திருமேனி யிருத்தலுங் கூடுமாறு அறிக.

இனி இவ்வெண் குணங்களும் சத்து சித்து ஆனந்தமென்னு மூன்றனுள் அடங்கும். எவ்வாறெனின் எக்காலத்தும் ஒரு தன்மையாயிருக்கும் பொருள் சத்து. அதற்குத்தான் தன்வய மாந்தன்மை கூடும். ஆதலால் தன்வயம் சத்திலடங்கும். வரம்பலின்பம் ஆநந்தத்தில் அடங்கும். ஏனைய ஆறும் சித்திலடங்கும். இன்னும் விரிப்பிற் பெருகும். (௬௨)

மூன்றும் அதிகாரணம் முடிந்தது.

ஒன்பதாஞ் சூத்திரம். முடிந்தது.

ஆகத்திரு விருத்தம்-௩0௩.

# பயனியல்.

## பத்தாஞ் சூத்திரம்.

மேல் ஏழாஞ் சூத்திரம் முதல் மூன்று சூத்திரத்தால் சாதன இயல் கேட்ட பின்னர் இச் சாதனத்தா லுண்டாம் பயன் யாதோ வெனவும் அப்பயனை உடையார் தன்மை யாதோ வெனவும் ஆசங்கை நிகழுமன்றே. அந்நிகழ்ச்சி பற்றி பயன் பாச நீக்கமும் சிவப் பேறுமென இருதிறப்படுமாதலின் அவற்றை இரண்டு சூத்திரத்தானும் பயனை உடையார் தன்மையை ஒரு சூத்திரத்தானும் ஆக மூன்று சூத்திரத்தால் பயனியல் கூறத் தொடங்குகின்றார்.

மேல் அடுத்து நின்ற ஒன்பதாஞ் சூத்திரத்தால் சாதனஞ்செய்யுமுறை கூறினாராதலின் அவ்வாறு சாதித்தவருக் குண்டாம் பாச நீக்கத்தை வகுத்துக் கூறுதற் கெழுந்தது பத்தாஞ் சூத்திரம். மேலைச் சூத்திரத்திலேயே பாசநீக்கமும் சிவப்பேறும் கூறியிருக்க ஈண்டுங் கூறுதல் எற்றுக்கெனின், அவ்விடத்து சாதனம் செய்யுமுறையைக் கூறுங்கால் ஏனைய செயல்போலன்று இச்செயலென்பது தோன்ற பயனும் தொகுத்து உடன் கூறினர். இவ்விடத்து அப்பயனை வகுத்துக் கூறுதற்குத் தொடங்கினாரென அறிக.

ஏகனுய் நிற்றல், இறை பணி நிற்றலென்னும் இருதிறத்தானும் மும்மலங்களும் நீங்குமென சூத்திரப் பொருளைத் தொகுத்துக் கூறுகின்றது.

இவனுலகி லிதமகிதஞ் செய்த வெல்லா
மிதமகித மிவனுக்குச் செய்தார்பா லிசையு
மவனிவனுய் நின்றமுறை யேக ஞகி
யரன் பணியி னின்றிடவு மகலுங் குற்றஞ்
சிவனுமிவன் செய்தியெல்லா மென்செய்தி யென்றுஞ்
செய்ததெனக் கிவனுக்குச் செய்த தென்றும்
பவமகல வுடனாகி நின்றுகொள்வன் பரிவாற்
பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கிவிடுமே.

(கொ-டு) அவன் இவனாய் நின்றமுறை ஏகனாகி அரன் பணியின் நின்றிடவும் சிவனும் இவன் செய்தியெல்லாம் என் செய்தியென்றும் (உடனாகி நின்று கொள்வன்) இவனுக்குச் செய்தது எனக்குச் செய்ததென்றும் பவம் அகல உடனாகி நின்றுகொள்வன் பரிவால் பாதகத்தைச் செய்திடினும் (புண்ணியத்தைச் செய்திடினும்) பணி ஆக்கிவிடுமே உலகில் இவனுக்கு இதம் அகிதஞ் செய்தார்பால் இவன் செய்த இதம் அகிதமெல்லாம் இசையும் குற்றம் அகலும்.

(பொ-ரை) மேலைச் சூத்திரத்து இறுதிச் செய்யுளில் கூறியவாறு பதிஞானத்தால் காணப்பட்ட இறைவன் பெத்தநிலையில் உடனாய் நிற்பினும்வேறு காணப்படுமாறின்றி ஆன்மாவேயாய் ஒற்றுமைப்பட்டு ஆன்மாவின் வழி நிற்பன். அம்முறைபோல மேற்கூறியவாறு அகத்து இறைவனை வழிபடுகின்ற இம்முத்திக்காலத்து அம்முதல்வனோடு ஆன்மா உடனின்றறியினும் ஆன்மாவாகிய தான் வேறு காணப்படாத வாறு அவ் விறைவனோடு ஒற்றுமைப்பட்டு நிற்கவும் அவன் அருள் வழியில் வழுவாது நிற்கவும் பெறவேண்டும். பெற்றால் அவ்விரண்டனுள் ஒற்றுமைப்பட்டு ஏகனாய் நிற்றலால் யான் எனதென்னும் செருக்கறும். அச் செருக்கறுதலால் அவ் விறைவன் இவன் செய்யும் இதம், அகிதங்களெல்லாம் யான் செய்யும் இதம், அகிதங்களென உடனாய் நின்று என்று கொள்வன். அருள்வழி நிற்றலாகிய அரன்பணியில் நிற்றலால் இந்திரியங்களின் வசமாய் நிற்கும் பாதந்திரம் ஒழியும். ஒழியவே இவனுக்கு இன்பத்துன்பம் அனுபவிக்கும்படி பிறர் செய்யும் இதம் அகிதங்களெல்லாம் அவ்விறைவன் தனக்கு அனுபவிக்குமாறு செய்தனவேயாமென உடனாய்நின்று என்றுகொள்வன். இவ்வாறு ஏகனாய் நிற்றல் இறைபணி நிற்றலென்னும் இருதிறத்தினுள் ஏகனாய் நிற்றலால் அன்புடன் இவன் செய்யும் இதம், அகிதங்கள் வினையாய் முடியாமல் இறைவன் பணியாய் முடியும். இறைபணி நிற்றலால் இவனுக்கு இதம் அகிதம் செய்தாரிடத்து அவ்வித மகிதங்கள் செய்த அவ்வளவினன்றி மிகுதிப்படுதற்கு இவன் செய்த இதம் அகிதங்கள் துணைக் காரணமாய்ப் பொருந்தும். இவ்வாறுவினையும் வினைப்பயனின் அநுபவமும் இவனைப் பந்தப்படுத்தாது ஒழியவே வினை செய்தலாலாகிய ஆகாமியமும் வினைப்பயன் அநுபவித்தலாலாகிய பிராரத்துவமும் ஒழிந்தனவாம். அவ்விரு வினைகளும் ஒழியவே எனைச் சஞ்சித வினையும் மாயையும் ஆணவமுமாகிய குற்றங்கள் மூன்றும் இவனைப் பந்திக்க மாட்டாவாய் விட்டுப்போம். (எ...று)

இவன் செய்த இதம் அகிதங்கள் இவனுக்கு இதம் அகிதஞ் செய்த பிறர்பால் அவ் வித மகிதங்கள் மிகுதிப்படுதற்கு துணைக்காரணமாதலன்றி இவன்செய்த இதம் அகிதங்களை இவனுக்குச் செய்தாரிடத்துப்பொருந்துமென்று சொல்லில்செய்த அவருடைய இதம்

அகிதங்கள் எவ்வாறுதுமென வினுபினர்க்கு விடையின்மையும் அவ ரவர் வினையை அவரவர் அனுபவிக்க வேண்டுமென்ற நியதிதப்புத லும் சிவஞானச் செயலுடையோர் கையிற் றனம் திலமளவே செய் திடினும் அத்தானமே நிலமலைபோற் றிகழுமென்றுற் போல் வன வற்றோடு முரணுதலு மாகிய குற்றங்கள் உளவாமாறு உணர்க.

இச்செய்யுள் முக்கூற்றை உடையது அவற்றுள்

முதற்கூறு—அவனிவனுய் நின்ற முறை ஏகனுகி (நின்றிடவும்) சிவனும் இவன் செய்தி எல்லாம் என் செய்தி என்றும்

இரண்டாங் கூறு—அரன் பணியில் நின்றிடவும் இவனுக்குச் செய்தது எனக்குச்செய்ததென்றும் பவமகல உடனுகி நின்று கொள் வன் பரிவால் பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கிவிடுமே உல கில் இவனுக்கு இதமகிதம் செய்தார்பால் இவன் செய்த இதமகித மெல்லாம் இசையும்.

மூன்றுங்கூறு—குற்றமகலும்

இவற்றுள் குற்றமகலு மென்பதை முதனூலில் வேறு கூறுக வைத்தோதாது இருகூறுகக் கூறினர். இந்நூலில் அம்மூன்றுங் கூற்றை பதினென்றுஞ் சூத்திரத்தில் விரித்துக் கூறுகின்றாராத லின் இச்சூத்திரத்தால் இரண்டு கூறு கூறுகின்றார். (௧)

---

## முதலதிகாரணம்.

---

அவனிவனுய்..........................
என் செய்தி என்றும் என்பது.

ஏகனுகி நின்றலன்றி யான் என தென்னுஞ் செருக்கறுதலில்லை எனக் கூறுகின்றது.

யான்செய்தேன் பிறர்செய்தா ரென்னதியா னென்னு
மிக்கோணை ஞானவெரி யால்வெதுப்பி நிமிர்த்துத்
தான்செவ்வே நின்றிடவத் தத்துவன்று னேரே
தனையளித்து முன்னிற்கும் வினையொளித்திட் டோடு

நான்செய்தே னெனுமவர்க்குத் தானங் கின்றி
நண்ணுவிக்கும் போகத்தைப் பண்ணுவிக்குங் கன்ம
முன்செய்யா ஞானந்தா னுதிப்பி னல்லா
லொருவருக்கும் யானெனதிங் கொழியா தன்றே.

(கொ-டு) யான் என்னது எனவும் அத்தத்துவன்றான் தனை அளித்து நேரே முன்னிற்கும் எனவும் போகத்தை நண்ணுவிக்கும் கன்மம் பண்ணுவிக்கும் எனவுங்கூட்டுக.

(பொ-ரை) மேலைச் சூத்திரத் தோதியவாறு ஆன்மாவினிடத்து இறைவனை ஆராதித்து ஆராதிக்கின்ற ஆன்ம ஞானத்தினுல் அவ்விறைவனைத் தரிசித்தலே அமையும்; அதன் மேலும் ஏகனுய் நிற்கவேண்டு மென்று கூறுவானேன் எனின், யான் என தென்னும் செருக்கு விளைதற்கேதுவாகிய மலத்தினுலுண்டாம் அறிவின் கோணுதலை இறைவனேடேகனுய் நிற்கும் ஞானுக்கினியினுற் காய்ச்சித் தீர்த்து தான் இறைவன் அருள் வழி நிற்க அவ்விறைவன் தனது சொருபத்தை ஆன்மாவிற்கு விளக்கி வெளிப்பட்டுத் தோன்றுவன். அவ்வாறு தோன்றுதலான் இவன் செய்யும் இதம் அகிதங்கள் இவனுக்கு வினையாகாமல் இறைபணியாகியும் அவ் வித மகிதங்களே இவனுக்கு இத மகிதங்கள் செய்தவரிடத்து செய்த அவ் வித மகிதங்கள் செய்த அளவினன்றி மிகுதற்குத் துணைக் காரணமாகவும் ஆகும். மேற் கூறிய யான் எனதென்னும் செருக்குடையாருக்கு முதல்வன் விளங்கித் தோன்றுதலின்றி அவர் செய்த கன்மத்திற் கீடாக போகத்தைப் புசிப்பித்து அங்ஙனம் புசிப்பிக்கும் முறையில் மேல் ஆகாமிய வினையும் ஏறச்செய்வன். ஆதலால் மாயா கருவிகளைப் பொருந்தி அறிகிற சிற்றறிவினின்றும் நீங்கி இறைவனேடு ஏகமாய் நிற்கும் ஞானம் பெற்றாலன்றி யாவருக்கும் யான் என தென்னும் செருக்கறுதலில்லை. (எ-று)

இறைவனைத் தரிசிக்குங்கால் மாயா கருவிகள் நீங்கப் பெறுதோ வெனின், பெறுது. மாயா கருவிகள் சிவ கருவிகளாக மாறித் தரிசித்தலே யன்றி நீங்கினதில்லை. சிவ கருவி என்பது—சிவத்தின் வழிச் செல்லுங் கருவியாம். நீங்காமைக்கு ஏது வென்னை யெனின், ஆணவ மலம் நீங்கப் பெற்றும் அம்மலத்தின் வேரறுக்கப் படாமையேயாம். வேர் என்பது பற்றெனப்படும். மலம் அறியாமையைச் செய்யும். பற்று செருக்கைச் செய்யும். அப்பற்றறுதி இறைவனைப் பற்றி ஏகமாய் நிற்றலினுலுண்டாம். இப்பற்றையே திருவாளைக்காப் புராணத்தில் கச்சியப்ப முனிவர் "வன்மலவேர்" என்றருளினர். மலத்திற் கன்னியமாகப் பற்று என்பதொன் றுண்டென்

பதை அநாதியே மலத்தைப் பற்றுதல் உயிரின் வினை யென சிவ ஞான போதச் சிற்றுரை நான்காஞ் சூத்திரம் இரண்டாம் அதிகா ணத்திறுதியில் மாதவச் சிவஞான யோகிகள் அருளியவாற்றானறிக. இக்கருத்துப் பற்றியே "பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும்" என்றார் தேவரும். (௨)

முதலதிகரணம் முடிந்தது.

---

## இரண்டாமதிகரணம்.

---

"அரன் பணியினின்றிடவும்..............................
..................................இசையும் என்பது"

இறை பணியில் நின்றாலன்றி இந்திரியங்களின் வழிப்பட்டுச் செல்லும் பர தந்திரம் நீங்குதலில்லை எனக்கூறுகின்றது.

இந்திரிய மெனைப்பற்றி நின்றேயென் வசத்தி
    னிசையாதே தன்வசத்தே யெனையீர்ப்ப திவற்றைத்
தந்தவன்ற னாணைவழி நின்றிடலா லென்றுந்
    தானறிந்திட் டிவற்றினொடுந் தனையுடையான் றாள்கள்
வந்தனைசெய் திவற்றின்வலி யருளினால் வாட்டி
    வாட்டமின்றி யிருந்திடவும் வருஞ்செயல்க ளுண்டேன்
முந்தனுடைச் செயலென்று முடித்தொழுக வினைகண்
    மூளாவங் காளாகி மீளா னன்றே.

(பொ-ரை) ஏகனாய் நிற்றலே அமையும்; அதன்மேலும் இறைபணியில் நிற்க வேண்டு மென்பானேன் எனின், உலகத்தில் ஊர்க்காவல் செய்பவரா யுள்ளார் பிழை செய்துள்ளாரை தம் மெண்ணப்படி தண்டிக்கின்றனர். தண்டிப்பது தம்மை அவ்வாறு செய்யும்படி நியமித்திருக்கும் அரசனது ஆணை வழியேயாம். அவ்வரசன் ஆணையின்றி இவர் தானாக ஒன்றும் செய்ய முடியாது. அவ்வுண்மையை அறிந்து அவ்வூர்க் காவலருக்கும் தமக்கும் இறை வனாகிய அவ்வரசனைச் சிநேகிக்கப் பெற்று அவன் கருத்தின் வழி நடக்க வல்லனாயவிடத்து அவர் அவ்வூர்க் காவலர் கீழ் அடங்குதலினின்றும் நீங்கி அக்காவலரையும் தம் ஆணை வழியில் அடங்கும்படி அரசனருளால் செய்து கொள்ள

வல்ல சுதந்தரராவர். அதுபோல இறைவனாணையால் இந்திரியங்கள் என்னைக் கூடிநின்று எனக்குள் அடங்காமல் என்னைத் தம்முளடக்கி நிற்கு மென்பதை அறிந்து அவ்விறைவனைக் கூடப் பெறின் அவ்விறைவன் திருவருளால் அவ்விந்திரியங்களை தன்னாணைவழி அடக்கி நிறுத்திக் கொள்ள வல்லவனாவன். அவ்வாறு நின்றவிடத்தும் பண்டைப் பயிற்சி பற்றி சில சமயம் அவ்விந்திரியங்களின் குறும்பு நிகழும். நிகழுங்கால் இந்திரியங்கட்கும் எனக்கும் கூடுகிற சுதந்தரம் இல்லாமையால் இந்திரியங்களையும் என்னையும் கூட்டுவித்த முதல்வன் செயலே என்று இறைபணியில் நிற்க வேண்டும். அவ்வாறு நிற்கில் அவ்விந்திரிய வழியாய்ப் புகுந்து பந்தப்படுத்தக்கூடிய வினைகள் பந்திக்க மாட்டாவாய் மடங்கி ஒழியும். அவ்வாறு அடிமைத்திறத்து நின்றவன் மீண்டும் இந்திரியங்களின் வழிப்பட மாட்டான். (எ-று) (ரு)

இறைபணி நிற்றல் இவ்வாறெனவும் இறைபணி நின்றார் செயலை இறைவன் தன் செயலென ஏன்று கொள்ளுதலும் பிறர் செயலை அவ்வாறேன்று கொள்ளாது அவர் செயலாகப் பயனனுபவிக்கச் செய்தலும் பற்றி இறைவன் நடுவுநிலைக்குக் குறையாகா தெனவும் கூறுகின்றது.

சலமிலனாய் ஞானத்தாற் றனையடைந்தார் தம்மைத்
 தானாக்கித் தலைவனவர் தாஞ்செய்வினை தன்னா
னலமுடனே பிறர்செய்வினை யூட்டியொழிப் பானாய்
 நணுகாமல் வினையவரை நாடிக் காப்ப
னுலகினிலென் செயலெல்லா முன்விதியே நீயே
 யுண்ணின்றுஞ் செய்வித்துஞ் செய்கின்றா யென்று
நிலவுவதோர் செயலெனக்கின் றுன்செயலே யென்று
 நினைவார்க்கு வினைகளெல்லா நீங்குந் தானே.

(கொ-டு) நீயே உள் நின்றும் (செய்கின்றாய்) உலகினில் நிலவுவதோர் செயல் எனக்கு இன்று என் செயலெல்லாம் உன்விதியே யென்றும் செய்வித்தும் செய்கின்றாய் உன்செயலே என்றும் நினைவார்க்கு வினைகளெல்லாம் நீங்குந்தானே தலைவன் ஆய் ஞானத்தால் தனை அடைந்தார் தம்மை தானாக்கிக்காப்பன் நாடியும் அவரை நணுகாமல்வினை அவர் தாம்செய்வினை தன்னால் பிறர் செய்வினை நலமுடனே ஊட்டி ஒழிப்பானாய் சலம் இலன்.

(பொ-ரை) இறைபணி நிற்றல்எவ்வாறெனின், ஏகனாய்நின்ற நிலையில்நின்று நீங்கி சில சமயம் தன்னால் புறத்துச் செயல் நிகழுமாயின் அப்பொழுது அவர்

இறைவனைநோக்கி நீயே எனக்கு உள்நின்று செய்கின்றாயாதலின் உலகின்கண் எனக்குச் செயலில்லை எனவும் என்னால் செய்யப்படும் இதம் அகிதங்க ளெல்லாம் நீ செய்யும் செயலே எனவும் எனக்கு பிறர் செய்யும் செயலெல்லாம் நீயே பிறரைக் கொண்டு செய்விக்கின்றாயாகலின் அவையும நீ செய்யும் செயலேயன்றி பிறிதில்லை எனவும் இவ்வாறு அவனருளை அல்லது ஒன்றனையுங் கருதாராய் தம்மை இழந்து நிற்கப்பெறுவர். இறைபணியின் முறை இதுவேயாம். பணி என்பது செயல். இறைபணி என்பது எல்லாம் இறைவன் செயலாகக் காண்டல். இவ்வாறு நிற்கப் பெறுவாரிடத்து நான்செய்தேன் பிறர் செய்தாரென்று எண்ணுதலாகிய அஞ்ஞானமும் புண்ணிய பாவங்களாய்க் கட்டுப்படும் கன்மமும் பிரவேசிக்க மாட்டாவாய் ஒழிந்து விடும். ஆதலால் சிவபெருமான் அத்தன்மை யுடைய மெய்யுணர்வால் தன்னை அடைக்கலம் புகுந்தவரை தன்னைப் போலச் சுத்தனாகச் செய்து பாது காத்தலும் மந்திர வலியால் அடங்கி இரை நுகரப்பெறாது கிடக்கும் பாம்பு யாதேனும் ஓர் சமயம் வாய்த்தவிடத்து சும்மாகிடவாது தீண்டுமாறு போல இறை பணி நிற்கும் அவரைச் சாரமாட்டாது ஒழிந்து கிடந்த ஆகாமியவினை அவருக்கு இதமகிதங்களை பிறர் செய்தவிடத்து செய்த அச்சம்பந்தம்பற்றி அவருடைய இதம் அகிதங்களுக்குத் துணையாய்ச் சென்று கூடுமாதலின் அவ்வாறு கூடும்படி செய்து பிறர் செய்த அவற்றின் பலன்களை அவர் நல்வழிப்படுதற் பொருட்டு அதிகப்படுத்தி ஊட்டுதலுஞ் செய்வன். இங்ஙனம் முத்தர் செய்த வினையை அவருக்கு இறை பணியாக்கியும் பிறர் செய்த வினையை அவருக்கு வினையாக்கியும் செய்தல் இறைவனுக்கு சலனமாகாதோ எனின், முத்தன் தன்னையே சார்ந்து நிற்றலினாலும் ஏனையோர் அங்ஙனம் சாராது நிற்றலினாலும் அவரவருக்குத் தக்கவாறு செய்தல் தகுதி யாதலின் சலன மின்மையறிக. (எ-று) (௪)

எல்லாம் சிவன் செயலென்றெண்ணும் இறைபணியில் நில்லாதார் செய்யுங் கிரியா யோகங்களால் பிறப்பு அறாதெனக் கூறுகின்றது.

நாடுகளிற் புக்குழன்றுங் காடுகளிற் சரித்து
நாகமுழை புக்கிருந்துந் தாகமுத றவிர்ந்து
நீடுபல காலங்க ணித்தரா யிருந்து
நின்மலஞா னத்தையில்லார் நிகழ்ந்திடுவர் பிறப்பி
லேடுதரு மலர்க்குழலார் முலைத்தலைக்கே யிடைக்கே
யெறிவிழியின் படுகடைக்கே கிடந்துமிறை ஞானங்
கூடுமவர் கூடரிய வீடுங் கூடிக்
குஞ்சித்த சேவடியுங் கும்பிட்டே யிருப்பர்.

(கொ-டு) நின்மல ஞானத்தை இல்லார் நாடுகளில் புக்கு உழன்றும் எனவும் இறைஞானங்கூடும் அவர் ஏடுதரும் மலர்க்குழலார் முலைத்தலைக்கே இடைக்கே எறிபடுவிழியின் கடைக்கே கிடந்தும் எனவுங்கூட்டுக.

(பொ-ரை) மேற்கூறியவாறு இறைபணியாகிய நின்மல ஞானமில்லாதவர் புண்ணிய தேயங்களிற் சென்று புண்ணிய தீர்த்தங்களில் ஆடியும் புண்ணிய தலத்தைத் தரிசித்தும் வனத்திற் சென்று கிழங்கு பழம் முதலியவற்றைப் புசித்தும் மலையிலுள்ள குகையில் யோகத்திலிருந்தும் அந்த யோகப் பயிற்சி வலியினல் பசியினையும் நீர் வேட்கை முதலியனவற்றையும் ஒழிந்தும் நெடுங்காலம் மரண மில்லாதிருந்தும் பிறப்பென்னும் துன்பத்தினின்றும் நீங்க மாட்டார் அவ்விறை பணியில் நிற்போர் இதழ் பொருந்திய மாலை யணிந்த கூந்தலையுடைய மங்கையர் கொங்கையிடம் தோயப்பெற்று இன்பம் அநுபவிக்கினும் பிறப்பினின்று நீங்கி பெறுதற்கரிய வீட்டினைப் பொருந்தி சிவந்த குஞ்சித பாதத்தின்கண் அடங்கிநிற்பர். ஆதலால் எத்துணை நன்மைகளும் இறைபணிக்கிணையாகா. எத்துணைத் தீமைகளும் இதன் பயனைக் கெடுக்க மாட்டாவாம். (எ-று)

மேல் எட்டாஞ் சூத்திரம் கூறுவது செய்யுளில் மங்கையரோடு கூடி இன்பம் நுகரினு மெனக்கூறியது நிற்போரது பெருமையை உணர்த்துதற்கும் ஈண்டவ்வாறு கூறியது நிற்பவரது தொண்டின் பெருமை உணர்த்துதற்கு மாதலின் கூறியது கூறலென்னுங் குற்றமாகாமை யறிக. (ரு)

இறைபணியில் நின்றோர் இந்திரியங்களோடு கூடினும் பற்றற்றிருப்பரென்பதை உவமை முகத்தால் விளக்குகின்றது.

அங்கித்தம் பனைவல்லார்க் கனல்சுடா தாகு
மௌடதாந் திரமுடையார்க் கருவிடங்க ளேறா
வெங்கித்தைக் கன்மமெலாஞ் செய்தாலு ஞானிக்
கிருவினைகள் சென்றணையா முற்செய்வினை யிங்குத்
தங்கிப்போம் பாத்திரமுங் குலாலன்வினை தவிர்ந்த
சக்கரமுங் கந்தித்துச் சுழலு மாபோன்
மங்கிப்போய் வாதனையா லுழல்விக்கு மெல்லா
மலங்களும்பின் காயமொடு மாயு மன்றே.

(கொ-டு) ஞானிக்கு எங்கித்தை (நின்று) கன்மமெலாம் செய்தாலும் இருவினைகள் சென்றணையா முன்செய்வினை மங்கிப்போய் வாதனையால் உழ

ழ்விக்கும் இங்குத்தங்கிப்போம் பாத்திரமுங் கந்தித்து குலாலன் வினை தவிர்ந்த சக்கரமும் சுழலுமாப்போல் எல்லாமலங்களும் பின்காயமொடு மாயும் அன்றே.

(பொ-ரை) இந்திரியங்களோடு கூடி இன்பம் அனுபவித்த காலத்தும் அவ்வின்பமும் இந்திரியமும் தன்னைத்தாக்காமலும் அதனால் மேல்வினை ஏறாமலும், இறைவனைக் கூடியிருப்பனென்றது எதுபோலவெனின், சுடுதற்கேது வாகிய அக்கினியை மந்திரத்தினால் தம்பனஞ்செய்ய வல்லவன் அவ்வாறு தம்பனஞ்செய்து அவ்வக்கினியில் மூழ்கிக்கிடப்பினும் அவனை அது சுடாதவாறு போலும் கொலைசெய்வதற்கேதுவாகிய விடங்களைத்தடுக்கவல்ல மந்திர மருந்துகளைப் பெற்றுடையான் அவற்றை உபயோகப் படுத்திக்கொண்டு விடங்களை எல்லாம் நிறைய உண்டபோழ்தும் அவனை அவ்விடம் கொல்லாதவாறுபோலும் விருப்பு, வெறுப்புக்கள் நிகழ்தற்கேதுவாகிய இந்திரியங்களை மேற்கூறிய இறைபணியில் நின்று தன்னேவல் கேட்கும்படி அடக்கவல்ல ஞானிகள் எவ்விந்திரியங்களினின்று எத்தொழிலைச்செய்தாராயினும் அதுபற்றி அவர்மாட்டு விருப்பு வெறுப்பு நிகழ்ந்துமேலைக்குவித்தாகியசஞ்சிதமாதல்செல்லாது. எனைப் பிராரத்தவினையும் தனதுசெயலை நீத்த அவர்மாட்டு பொருந்தமாட்டாமல் அக்கினியினால் வெந்தபுடைவை பார்வைக்கு வடிவம் போற் றோன்றினும் வடிவத்தின் தன்மையில்லாததுபோல சத்திகெட்டேபோய் வாசனைமாத்திரையாய் நின்று சிறிது தாக்கும். அவ்வாறு தாக்குதலினால் மேல் ஆகாமிய வினை ஏறுமாறில்லை. வாசனைமாத்திரையாய் நின்று பயனில்லாதுபோதல் எதுபோலவெனின், காயமிருந்தொழிந்த பாத்திரத்தில் அவ்வாசனை கிடந்து வாசித்தும் ஒரு கறிக்கு உபயோகமாதலில்லாததுபோலவும் குயவனானவன் குடத்தை வனையுமளவும் சுழற்றிவிட்ட திகிரியானது வனைந்தபின்னரும் அச்சுழற்றுதலாகிய தன் வேகமுள்ள அளவும் சுழன்றுமற்றொருகுடத்தினை வனைதற்கு உபயோகமாதலில்லாமை போலவுமாம். காயவாசனை பாத்திரத்தோடு ஒழிதல்போலவும் சுழற்சியானது வேகம்நின்றவுடன் ஒழிதல் போலவும் தங்கி நின்ற பிராரத்தவினையும் தேகமுள்ள அளவும் இருந்து தேகம் நீங்குங்காலத்து அதனுடன் நீங்கும். (எ...று)

வாசனை தாக்காதிருத்தற்கு கூறிய காயவுவமையும் திகிரி உவமையும் அவ்வாதனையின் வேற்றுமையை உணர்த்த நின்றன. ஆகலின் மிகைபடக் கூறலாகிய குற்றமின்று. அவை வருமாறு:—காயவாசனையானது தங்கியிருந்த பாத்திரம் உள்ள அளவும் அவ்வாசனை ஒரேவிதமாயிருத்தல் போல இறை பணி நின்ற காலத்தும் தேகம் நீங்கும் வரையும் ஒரே விதமாயிருக்கின்ற தீவிர வாதனையை அவ்வுவமை குறிக்கும். திகிரி முதற்கணத்திற் சுழலும் சுழற்சி மறுகணத்திலில்லாது அவ்வாறே கணந்தோறும் குறைந்து குறைந்து

விரைவில் நின்றுவிடுவதுபோல பிராரத்த வாதனை சிறிதுசிறிதாகக் குறைந்து வருகின்ற மந்தவாதனையை அவ்வுவமை குறிக்கும். (௬)

இரண்டாமதிகரணம் முடிந்தது.

பத்தாஞ் சூத்திரம் முடிந்தது.

ஆகத் திருவிருத்தம்—௩௦௧.

---

# பதினொன்றாஞ் சூத்திரம்.

---

மேல் பத்தாஞ்சூத்திரத்தால் ஏகனாகி நிற்றல் இறைபணி நிற்றலென்னும் இரண்டினாலும் பாசநீக்கம் கூறியபின்னர் அவ்வாறு பாசநீக்கம் எய்திய ஆன்மாவிற்கு நிகழும் சிவானுபவத்தில் அனுபவிக்கின்ற ஆன்மா, அனுபவம், அனுபவிக்கப்படும் பொருள் ஆகிய இம்மூன்றும் உண்டோ இல்லையோவென ஐயம் நிகழுமன்றே? அந்நிகழ்ச்சி பற்றி அம்மூன்றும் அத்துவிதமாய் உண்டென சிவப்பேறாகிய பயனை வகுத்துக்கூறுதற் கெழுந்தது பதினொன்றாஞ்சூத்திரம்.

சிவப்பேறென்பதே முத்தி எனப்படும். முத்தி என்பது விடுதல். அம்முத்தியும் பரமுத்தி சீவன்முத்தி என இருதிறப்படும். பரமுத்தியாவது பரனோடுகூடி நின்று பாசத்தை விடுதல். ஜீவன்முத்தியாவது ஜீவனாகி நின்றும் பாசத்தை விடுதல். அதாவது ஜீவத்தன்மையைச் செய்வதாகிய பாசத்தை இழந்து நிற்றல். இவ்விருவகை முத்தியினுள் பரமுத்தியை விதேக முத்தியென்றுங் கூறுவர். அப்பரமுத்திதான் முதற்கண் நிகழ்வது. அவ்வாறாயின் "காயமொடு மாயுமன்றே" "காயமொழிந்தாற் சுத்தனாகி" என இந்நூலிற் கூறுவதினாலும் இககருத்துத் தோன்றக் கூறும் பிறநூல்களானும் உடம்பு நீங்கிய பின்னர் பரமுத்தி உண்டென்றுணரக்கிடக்கவும் அக்கருத்தொடு முரணாதோ எனின், முரணாது. என்னை? நீங்கிய உடம்பு ஆன்மாவிற்குத் தெரியாததுபோல உடம்பிருக்கும் பொழுதே அவ்வுடம்பைப் பற்றிய எண்ணம் சிறிதுமின்றி சாதனத்தில் உறைத்து நிற்கப்பெற்றால் உடம்பு தோற்றாது. அப்பொ

முதே சிவம் தோற்றும். இந்நிலையே பரமுத்தி. ஆயினும் பிராரத்த கன்மத்தால் மீண்டும் உடம்பு தோன்றவரும். தோன்றுங்கால் முன்னர் நிகழ்ந்த சிவானுபூதியைச் சிந்திக்கில் உடம்பு மறையும். இவ்வாறு உடம்பு தோன்றுதலும் மறைதலுமாகிய நிலை பிராரத்தம் உள்ளஅளவும் நிகழும். ஆதலின் எக்காலத்தும் உடம்பு தோன்றாத பிராரத்த தேக ஒழிவு பரமுத்தி எனப்பட்டது. அப்பரமுத்தி யாகிய சிவானுபவ நிலையே சாதனத்தில் உறைத்து,நிற்றலால் முத ற்கண் விளங்குவதொன்றாதலின் பரமுத்தி முதற்கண் நிகழுமென்ப தும் பொருந்துமாறு அறிக. இதனை இச்சூத்திரத்து முதற்செய்யு ளில் "அந்நிலைமை இந்நிலையில் அடைந்த முறையாலே" என்பத னாலும் அறிக. ஆதலால் பரமுத்தியாகிய சிவப்பேறு இப்பதி னொன்றாஞ் சூத்திரத்தாற் கூறுகின்றார்.

இச்சூத்திரத்தாற் பரமுத்தியே கூறுகின்றாரென்பதை இத னுட் கூறுவதாகிய "எவ்விடத்தும்" என்றற்றொடக்கத்துச் செய் யுளை எடுத்துக்கொண்டு பரமுத்தியில் உயிருக்கு விடயமாவது ஒன் றின்மையின் வழிநூலாசிரியர் எவ்விடத்துமென்றது அமையுமா றென்னையென சிவஞானபோதச் சிற்றுரை பதினொன்றாஞ் சூத்தி ரத்து முதலதிகரணத்தில் மாதவச் சிவஞான யோகிகள் அருளுமா ற்றானுமறிக. அன்றியும் பன்னிரண்டாஞ் சூத்திரம் சீவன் முத்த னியல்பு கூறுகின்றது என்பதனாலேயே இச்சூத்திரத்திற் கூறுகின்ற முத்தி, பரமுத்தி என்பதுதானே விளங்கும்.

இறைவன் அத்துவிதமாய் நின்று காட்டிக் காணுமுபகாரத் தைச் சிந்தித்து அன்பு செய்தலினால் மலங்கள் நீங்கிச் சிவானுபவ முண்டாமென சூத்திரப்பொருளைத் தொகுத்துக் கூறுகின்றது.

காயமொழிந் தாற்சுத்த னாகி யான்மாக்
    காட்டக்கண் டிடுந்தன்மை யுடைய கண்ணுக்
கேயுமுயிர் காட்டிக்கண் டிடுமா போல
    வீசனுயிர்க் குக்காட்டிக் கண்டிடுவ னித்தை
யாயுமறி வுடையனு யன்பு செய்ப
    வந்நிலைமை யிந்நிலையி லடைந்தமுறை யாலே
மாயமெலா நீங்கியரன் மலரடிக்கீ ழிருப்பன்
    மாறாத சிவானுபவ மருவிக் கொண்டே.

(கொ-டு) காட்டக் கண்டிடுந்தன்மை உடைய கண்ணுக்கு ஏயும் உயிர் காட்டிக் கண்டிடுமாபோல உயிர்க்கு ஈசன் காட்டிக்கண்டிடுவன் காயம்ஒழிந்தால் சுத்தனாகி ஆன்மா இத்தை ஆயும் அறிவு உடையனாய் எனவும் மருவிக் கொண்டேஇருப்பன் எனவுங்கூட்டுக.

(பொ-ரை) காட்டக்காணுந் தன்மையுடைய கண்ணுக்கு உருவத்தைக் காணும்படி காட்டியும் அதாவது அறிவித்தும் கண்ணொடு நின்று அவ்வுருவத்தைக் கண்டும் உயிர் உபகரிப்பதுபோல அவ்வுயிர்க்கு விடயத்தை 'அறியும்படி அறிவித்தும் உயிரோடுகூட நின்று விடயத்தை அறிந்தும் இறைவன் உபகரித்து வருவன். ஆதலான் எல்லாமலங்களும் பின் காயமொடு மாயுமென மேலைச் சூத்திரத்து இறுதியில் கூறியவாற்றான் காயமொழிந்த பின்னர் மும்மலங்களும் நீங்கப்பெற்று சுத்தனாதற் குரிய ஆன்மா முதல்வன் அத்துவிதமாய் நின்று அறிவித்தும் அறிந்தும் வருகின்ற உபகாரமாகிய உரிமையை உறுதியாகப்பற்றி அறிந்துகொண்டு நிற்கப்பெற்றால் அம்முதல்வனை அடையவேண்டுமென்ற இச்சை இடையறாது நிகழும். அங்ஙனம் அறிவும் இச்சையும் பிறிதொன்றிற் சேரலின்றி அத்துவித நிலை ஒன்றே பற்றி முதல்வன் திருவடிக்கண் ஒருங்கு நிகழவே காயமொழிந்த பின் மல நீங்கி சுத்தனாய் நிற்றும் முறைமையை காயத்தோடு நிற்கும்பொழுதே கைகூடப்பெறும். அவ்வாறு பெறுதலால் ஏனைக்கிரியையினையும் எல்லாமலங்களையும் இம்மைக்கண்ணே நீத்தொழித்து இறைவனுடைய அறிவிச்சைகளோடு ஆன்மாவாகிய தன்னுடைய அறிவிச்சைகள் ஒற்றுமைப்பட்டு அவ்விறைவனது செங்கமலமலர் போலும் திருவடியைக் கூடி மாறுபடாத சிவாநுபூதியே சுவாநுபூதியாய்க்கொண்டு வாழ்வன். (எ...று)

இச்சூத்திரத்தில் மேலைச் சூத்திரத்தில் கூறாது விடுத்த குற்றமகனுமென்பதை விரித்துக் கூறுகின்றாராதலின் இச்செய்யுள் முக்கூற்றை உடையது. ஆயினும் முதனூல் விதியின்படி இச்சூத்திரத்தை இரண்டு கூறாக்கி மேலைச் சூத்திரக்கூற்றை ஒரு கூறாகப்பிரித்தெண்ணாது முதற்செய்யுளுடன் தொகுத்து வைக்கப்பட்டிருக்கின்றது. அம்முக்கூற்றுள் மேலைச் சூத்திரத்தின் ஒழிபாகிய கூறு—

காயமொழிந்தாற் சுத்தனாகி அந்நிலைமை இந்நிலையில் அடைந்த முறையாலே மாயமெலாம் நீங்கி

இச்சூத்திரத்து முதற்கூறு—ஆன்மா காட்டக்கண்டிடும் தன்மையுடைய கண்ணுக்கு ஏயும் உயிர்காட்டிக் கண்டிடுமாபோல ஈசன் உயிர்க்குக்காட்டிக் கண்டிடுவன்.

இரண்டாங்கூறு—இத்தை ஆயும் அறிவுடையனுப் அன்பு செய்ய அரன்மலரடிக்கீழ் மாருத சிவானுபவம் மருவிக்கொண்டே யிருப்பன். (க)

சிவாநுபவமுடைய முத்தருக்கு சிவமேயன்றி பிறபொருள் தோன்ருதெனக் கூறுகின்றது.

பரஞானத் தாற்பரத்தைத் தரிசித்தோர் பரமே
பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார் பார்க்க
வருஞானம் பலஞான மஞ்ஞான விகற்பம்
வாச்சியவா சகஞானம் வயிந்தவத்தின் கலக்கந்
தருஞானம் போகஞா திருஞான ஞேயந்
தங்கியஞா னஞ்சங்கற் பனைஞான மாகுந்
திருஞான மிவையெல்லாங் கடந்தசிவ ஞான
மாதலாற் சீவன்முத்தர் சிவமேகண் டிருப்பர்.

(கொ-டு) கலக்கந் தருவயிந்தவத்தின் ஞானம் எனவும் போகத்தங்கிய ஞாதிருஞான ஞேயஞானம் சங்கற்பனை ஞானமாகும் எனவும் இவையெல்லாங் கடந்த சிவஞானம் திருஞானமெனவுங் கூட்டுக.

(பொ-ரை) மேற்கூறியவாறு அத்துவிதமாய் நின்று உபகரிக்கும் இறைவன் உரிமையை ஆயும் அறிவாகிய பரஞானத்தால் அச்சிவத்தை நோக்கி அன்பு செய்யப்பெற்றவர் அச்சிவம் ஒன்றனையே அறிந்து நிற்பரன்றி பிராரத்தவினை தாக்குதற்குரிய ஏனைப்பொருள்களை ஒரு சிறிதும் காண்பாரல்லர். அப்பொருள்களைக் காணவரும் ஞானங்கள் கருவிகளோடு கூடிநின்றறியும் பிரத்தியட்சம், அனுமானம், ஆகமமென்னும் சுட்டுணர்வின் பேதங்களாகிய அளவை ஞானங்களாம். குருவினிடத்துக் கேட்கும் சாத்திரஞானமோ எனின், அது சுத்த மாயாகாரியமாகிய சொல்லும் பொருளுமான ஞானமாம். அச்சாத்திரம் பலவேறுவகைப்பட விரிந்து கிடக்குமாதலால் இது சரியோ அது சரியோ என்ற கலக்கமுண்டாகும். அக்கலக்கந் தீர்வதற்காக அப்பொருளை ஆராய்வதான சிந்தித்தல் ஞானமோவெனின், அது ஆராய்ச்சி ஞானமாம் சிந்தித்தபின்னர் தெளிவதாகிய சாதனஞானமோஎனின், அதுகாண்பானும் காட்சியும் காணப்படுபொருளுமாகிய பேத ஞானமேயன்றி அநுபூதி ஞானமன்று. ஆதலால் இவையனைத்திற்கும் மேலாய் இவ்விடத்திற் கூறப்பட்ட நிட்டையாகிய சிவஞான மொன்றே சிறப்புடைய ஞானமாம். இதனைப் பெற்ற சீவன் முத்தர் சிவம் ஒன்றே கண்டிருப்பரன்றி பிராரத்த வாதனையிற் படுவாரல்லர். (எ...று) (உ)

திவ்விய தேகத்தோடு இருத்தலே முத்தியென்பாரை மறுத்து சிவானுபவ முடையவர்க்கு மாயாமலம் பற்றறக் கழியு மெனக் கூறுகின்றது.

அநாதியுட லொன்றினைவிட் டொன்றுபற்றிக் கன்மா
  லாயழிந்து வருதலா லந்த மில்லை
பினாதிபருள் பெற்றவர்க ணித்தவுரு வத்தைப்
  பெற்றிருக்கை முத்தியெனிற் பெறும்பதமே யிதுவு
மினாதுநிலை யிதுதானுங் காய முண்டே
  லிருங்கன்ம மாயைமல மெல்லா முண்டா
மனாதிதரு முடலாதி காரியத்தா லநாதி
  மலமறுக்கு மருந்தற்ற லுடன்மாயுங் காணே.

(கொ-டு) உடல் அநாதி ஒன்றினைவிட்டு ஒன்று பற்றிக் கன்மால் ஆய்ப் பின் அழிந்து வருதலால் அந்தம் இல்லை ஆதிஅருள் பெற்றவர்கள் நித்த உருவத்தைப் பெற்றிருக்கை முத்தியெனில் காயம் உண்டேல் மாயை இருங்கன்மம் மலம் எல்லாம் உண்டாம் இதுதானும் இனாதுநிலை இதுவும் பதமே பெறும் மனாதிதரும் உடல்காரியத்தால் ஆதி.

(பொ-ரை) ஆன்மாக்களுக்கு அனாதியே கன்மத்தினால் நீரோட்டம் போலதொடர்ச்சியாய் தேகம் உண்டாகியும் அழிந்தும்வரும். ஆதலால்யாதேனும் ஒருதேகம் இல்லாத நிலைஇல்லை. அவ்வாறு ஒரு நிலை உண்டென்று கூறுதல் பொருந்தாது. ஆதலால் முதல்வ னருளைப் பெற்ற இடத்தும் தோற்றியழியும் உடம்பு போலின்றி நித்திய மங்கள திப்பிய சரீரத்தைப் பெற்றிருத்தலே முத்தியென்று உருவசிவ சமவாதிகள் கூறுவர். அவ்வாறாயின் உடம்பு உளதாகவே அதற்குக்காரணமாகிய மாயையும் கன்மமும் ஆணவமும் ஆகிய அனைத்தும் விட்டு நீங்குதலில்லை. ஆதலின் அந்நிலை துன்பம்பயக்கும் நிலையேயாம் அதனை முத்தியென்று நூல்களிற் கூறுவதற்கு தாத்பரியம் பதமுத்தியென்பதேயாம். அன்றியும் இவ்வுடம்பு சூக்கும சரீரத்தினின்றும் தோன்றப்படுதலினால் ஆதியேயாம் அநாதியன்று. அதுவும் ஆன்மாவை அனாதியே பற்றி இருக்கின்ற ஆணவமலமாகிய நோயைத் தீர்த்தற்கு மருந்தாகத் தோற்றுவதாம். ஆதலால் ஆணவமலம் நீங்கிய விடத்து உடம்பு நீங்குவதே அன்றிமலம் நீங்கி அருள் பெற்ற முத்தியிலும்உடம்பு உண்டென்றல் பொருந்தாது. (எ...று) (ந)

சிவானுபவ முடையார்க்கு ஆணவலம் பற்றறக் கழியு மெனக் கூறுகின்றது.

தெரிவரிய மெய்ஞ்ஞானஞ் சேர்ந்த வாறே
சிவம்பிரகா சிக்குமிங்கே சீவன்முத்த னாகு
முரியமல மௌடதத்தாற் றடுப்புண்ட விடமு
மொள்ளெரியி னொளிமுன்ன ரிருளுந் தேற்றின்
வருபரல்சேர் நீர்மருவு கலங்கலும்போ லாகி
மாயாதே தன்சத்தி மாய்ந்து காயந்
திரியுமள வும்முளதாய்ப் பின்பு காயஞ்
சேராத வகைதானுந் தேயு மன்றே.

(கொ-டு) உரியமலம் மாயாதே தன்சத்தி மாய்ந்து காயம் திரியும் அளவும் உளதாய் பின்பு காயஞ்சேராத வகை தானுந் தேயுமன்றே தேற்றின்வருபரல்சேர் நீர்மருவு கலங்கலும் ஒள் எரியின் ஒளிமுன்னர் இருளும் ஔடதத்தால் தடுப்புண்ட விடமும் போலாகி.

(பொ-ரை) மேற்கூறிய பரஞானத்தைப் பெற்ற பொழுதே சிவம் பிரகாசிக்கும். அப்பொழுதே சீவன் முத்தனவன். சீவன் முத்தியாவது சிவம் பிரகாசிக்கப்பெற்றும் பிராரத்த தேகத்தோடு கூடிய நிலையாம். தேகத்தோடு கூடியிருப்பினும் சகசமாகிய ஆணவமலம் தனது சக்திகெட்டு வாசனை மாத்திரையாய்உடம்புள்ள அளவும் நின்று உடம்பு நீங்குங்கால் பிறிதொரு பிறவிக்கேதுவின்றி அவ்வுடம்போடு பற்றறக் கழியும். மலமிருந்தும் அதன்செயலில்லாமற் போவது எவ்வாறெனின்,தேற்றான் விரை சேரப்பெற்ற நீரில் அடங்கியிருக்கும் கலங்கல் யாதானும் ஒரு காரணத்தால் மேற்படினும் மீண்டும் அத்தேற்றான்விரை அடக்கிவிடும். அதுபோல பரஞானத்தால் அடங்கியிருக்கும் மலம் பண்டை வாசனையால் மேற்படினும் மீண்டும் அப்பரஞானம் அடக்கிவிடும். அடங்கியாவது மலமிருத்தலினால் பிறிதொரு பிறவியைத் தராது கழியுமென்றல் எவ்வாறு கூடுமெனின், மிகுந்த அக்கினிப் பிரகாசத்தின் முன்னர் இருளில்லாதது போல் தேகம் நீங்கிய பின்னர் சதாசிவம் பிரகாசிக்கப்பெறுவாராதலின் அவரிடத்து மலம் பற்றறக் கழியும். கழியினும் அக்கினிப் பிரகாசம் இல்லாதவிடத்து இருளிருப்பது போல எனைப் பெத்தரிடத்தில் மலமிருக்கும். அவ்வாறாயின் தேகத்தோடு கூடியிருக்கும் போதே சிவம் பிரகாசித்து விட்டபடியால் சீவன்முத்தி நிலையினும்மலம் அறவேயில்லை யென்று சொல்லக்கூடாதோவெனின், கூடாது. எதனாலெனின்,மருந்தினால் அடப்பட்டிருக்கும் நஞ்சமானது மருந்தின் வலியின்குறைவையெதிர்பார்த்திருப்பது போல் சீவன் முத்தரிடத்து சிவபாவனையினின்றும் நழுவுதலைமலம் எதிர்பார்த்து அடங்கி இருக்கும். ஆதலால் சிவம் பிரகாசிக்கப்பெற்ற சீவன் முத்தி நிலையினும் சதா சிவபாவனைசெய்து தேகம் நீங்கப்பெற்றால் மலம் பற்றறக்கழியும். (எ...று)

(௪)

ஆணவமலம் அநாதியாதலால் பற்றறக் கழியாதென்பாரை மறுத்து பற்றறக் கழியு மென வலியுறுத்துகின்றது.

ஆணவந்தா னநாதியந்த மடையா தாகு
மடையினந்த வான்மாவு மழியுமெனிற் செம்பிற்
காணலுறுங் களிம்பிரத குளிகைபரி சிக்கக்
கழியுஞ்செம் புருநிற்கக் கண்டோ மன்றே
தாணுவின்றன் கழலிணையத் தவிருமலந் தவிர்ந்தாற்
றான்சுத்த னாயிருக்கை முத்தியரன் றானைப்
பூணவேண் டுவதொன்று மில்லையெனி னருக்கன்
புகுதவிருள் போமடியிற் பொருந்தமலம் போமே.

(கொ-டு) இரதகுளிகை பரிசிக்கச் செம்பில் காணலுறுகளிம்பு கழியும் எனவும் மலம் தவிரும் எனவும் பொருந்தவே மலம்போம் எனவுங்கூட்டுக.

(பொ-ரை) முற்கூறிய ஆணவமலம் அநாதி நித்தமாதலால் முத்தியில் அதுஅழியுமாயின் அநாதி நித்தமாகிய ஆன்மாவும் அழியுமெனப்பட்டு இருபொருளும் நித்தமென்பது இழுக்காய் முடியும். ஆதலின் முத்தி நிலையினும் சகசமாகிய ஆணவமலம் நீங்குமாறில்லை யென்பர் பாடாண வாதசைவர். மலத்தோடு கூடி அறியாமையாய் அடங்கி இருத்தலின் பாடாணவாதியெனப்பட்டார் பாடாணமென்பது கல். அநாதியாகிய செம்பினிடத்து அநாதியாயுள்ள களிம்பு இரத குளிகை பரிசித்தமாத்திரத்தில் நீங்கி செம்பு பொன்னுருவாய் நிற்கக்காண்பதுபோல் இறைவன் திருவடியாகிய மெய்ஞ்ஞானம் சாரந்தமாத்திரையே உயிரோடு சகசமாய் நின்ற ஆணவமலம் நசிக்க உயிர் சிவமாய் நிற்றற்கு இழுக்கில்லையாதலின் அப்பாடாணவாதசைவர் மதம் பொருந்ாது. இனி மலம் நீங்கப்பெற்ற மாத்திரையே மெய்ஞ்ஞானம் சாரும். அதுவே முத்தி. மலம் நீங்கியதன் மேலும் திருவடி யடைதல் வேண்டா மென்பர் பேதவாத சைவர் இவர் சிவனோடு கலவாமையின் பேதவாதி யெனப்பட்டார். இருள் நீங்கி சூரியனொளி பிரகாசித்தவிடத்தும் சூரியனொளியோடு கண்ணொளி கலந்தால் இருள் நீங்கும். கலவாது இமைகளால் மூடப்பெற்றிருப்பின் கண்ணுக்கு இருள் நீங்காதவாறுபோல ஆன்மாவின் அறிவுக்கு மெய்ஞ்ஞானம் பிரகாசித்து ஆன்மா இறைவனுடன் கலந்தால்மலம் பற்றறக்கழியும். இன்றேல் ஆன்மாவினிடத்து மலம் பற்றறக்கழியாது. ஆதலால் அப்பேதவாத சைவர் மதமும் பொருந்தாது. (எ-று) (௬)

அநாதியான அணவமலம் கெடுமென்பதற்கு உவமை கூறி கெடினும் ஏனைப் பெத்தரிடத்திருத்தலினால் நித்தத்திற் கிழுக்கில்லை எனக்கூறுகின்றது.

நெல்லினுக்குத் தவிடுமிக ளநாதி யாயே
நெல்லைவிட்டு நீங்கும்வகை நின்றநிலை நிகழ்த்தீர்
சொல்லியிடிற் றுகளற்ற வரிசியின்பா லில்லை
தொக்கிருந்து மற்றொருநெற் றோன்றி டாவா
மெல்லவிவை விடுமறவே யிவைபோல வணுவை
மேவுமல முடல்கன்ம மநாதிவிட்டே நீங்கு
நல்லசிவ முத்திபின்கட் பெத்தான் மாவை
நணுகிநிற்கு மாதலா னுசமுமின் றாமே.

(கொ-டு) நெல்லினுக்கு அநாதியாயே (முளை) தவிடு உமிகள் நெல்லை விட்டுநீங்கும்வகை நின்றநிலைநிகழ்த்தீர் தொக்கு இருந்தும் மற்றுஒருநெல் தோன்றிடாவாம் சொல்லியிடின் துகளற்ற அரிசியின்பால் இல்லை மெல்ல இவை அறவேவிடும் இவைபோல அநாதி அணுவை மேவுமலம் உடல்கன்மம் நல்ல சிவமுத்தியின்கண் விட்டேநீங்கும்.

(பொ-ரை) இரத குளிகை பரிசித்த செம்பிலும் களிம்பு தொக்கியிருக்கும். அதுபோல சிவம் பிரகாசித்த ஆன்மாவிடத்தும் மலம் தொக்கியிருக்கும். ஆதலால் அவ்வுவமையினுல் மலம் அழிந்தும் ஆன்மாஅழியாதென்று சாதித்தது பொருந்தாது எனின், அரிசியொடும் சகசமாய் நின்ற முளை தவிடு உமிகள் அவ்வரிசியை விட்டுக் கெட்டொழிய அவ்வரிசியே கேடின்றி நிலைபெறுதல் கண்டாம். அங்ஙனம் நீங்கிய அவ்வரிசியின் கண்ணும் முளை தவிடு உமிகள் நீட்டுக் குறையினுல் அடங்கிநிற்குமேனும் அவ்வரிசி வேறொரு நெல்லுத் தோன்றுதற்கு அதாவது முளைப்பதற்குக் காரணமாதல் சொல்லாமையால் அம் முளை முதலியன அடங்கி இருக்குமென்று சொல்லுதற்கு ஓரியையின்றி பாகம் செய்வதற்குரிய தொழிலால் மெல்ல மெல்ல நீங்கிவிடுமாதலின் அவை இல்லை யென்பதே தேற்றம். அதுபோல அநாதியே உயிர்களோடு சகசமாய் நின்ற மும் மலங்களும் முத்திநிலையில் விட்டொழியுமென்றே கொள்க. விட்டொழியினும் ஏனைப் பெத்தரிடத்து இருத்தலால் அம்மலங்கள் நித்தப் பொருளாதற்கும் இழுக்கில்லை. (எ...று)

உண்மை விளக்கம் என்னும் நூலில் ௬௪-வது செய்யுளில் இத்தை விளைவித்தல் மலம் எனக் கூறியிருத்தலால் முத்திநிலையில் மலம் நீங்குமென்றல் எவ்வாறு பொருந்துமெனின், துன்பத்தை விளைவிக்கும் மலம் இன்பத்தை விளைவிக்க மாட்டாது. மலம் நீக்கமே இன்பத்தை விளைவிக்குமென்பதை அவ்வாறு கூறினராதலின் மலம் நீங்குமென்றல் பொருந்தும். அச்செய்யுளில் இல்லை யென்னும் உணர்விற்கு விடயமாய் மலம் நின்றவாறு அறிக. இது அநுபலத்தி ஏதுவெனப்படும். ஆயினும் இல்லையென்று கூறவேண்

டிய மலத்தை உண்டென்று கருதும் வண்ணம் கூறியது பொருந்து மோவெனின், சுருக்கிக் கூறவேண்டிய இடங்களில் அவ்வாறு கூறுதல் நூல் வழக்காதலின் பொருந்தும். இதனை "கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்பாய்மற் றாங்கே, யெடுப்பதூஉ மெல்லா மழை" என்னுந் திருக்குறளானு மறிக.

பெத்தான்மாவை நணுகி நிற்றலினால் மலம் நித்தமென்ற இதனானே சில ஆன்மாக்கள் நித்திய பெத்தரா இருப்பரோ எனின், அன்று. ஒவ்வொரு ஆன்மாக்களும் முத்தியடைதற்குரியனவேயாம். இதுபற்றிய சங்கை உத்தரங்களை இவ்விடத்து விரிப்பிற் பெருகும். "விண்டவர்கண் மூலமலம் வீற்றிவர மீளார், பண்டைமுறை நாடல் படைப்புநிலை யீறுங், கண்டனை யிழந்த உயிர் காரணனிடத்தே, யுண்டுலவி டாதகிழி யுற்றபொருளொத்தே" என்னும் சிவதருமோத்தரச் செய்யுளானும் "பிறந்த நாண்மேலும் பிறக்கு நாள் போலுந், துறந்தோர் துறப்போர் தொகை." என்னுந் திருவருட்பயனானும் பிறவாற்றானும் உய்த்துணர்ந்துகொள்க.

இதனால் மலம்அநாதியென்றும் அதுஅழியுமென்றும் அதனால் ஆன்மா அழியாதென்றும் வலியுறுத்தப்பட்டன. (சு)

---

## முதலதிகாரணம்.

---

### ஆன்மா காட்டக் கண்டிடும்......கண்டிடுவன் என்பது.

அனாதி சம்பந்தமான ஆணவமலத்தினின்று முத்திக் காலத்து உயிர் நீங்குமாறுபோல பெத்தமுத்தி இரண்டினும் இறைவனை விட்டு உயிர் தனித்து நிற்றல் இல்லையெனக் கூறுகின்றது.

எவ்விடத்து மிறையடியை யின்றியமைந் தொன்றை
யறிந்தியற்றி டாவுயிர்க ளீசன் றானுஞ்
செவ்வினிலு ளம்புகுந்து செய்தியெலா முணர்ந்து
சேட்டிப்பித் தெங்குமாய்ச் செறிந்து நிற்ப

ணிவ்வுயிர்க டோற்றும்போ தவனையின்றித் தோற்ரு
விவற்றினுக்கம் முதலெழுத்துக் கெல்லாமாய் நிற்கு
மவ்வுயிர்போ னின்றிடுவ ஞதலாலு
மானடியை யகன்றுநிற்ப தெங்ஙகே யாமே.

(கொ-டு) எவ்விடத்தும் இறை அடியை இன்றி உயிர்கள் அமைந்திடா ஈசன்ருனும் அம்முதலெழுத்துக்கெல்லாமாய் நிற்கும் அவ்வுயிர்போல் இவ்வுயிர்கள் தோற்றும் போது அவனையின்றித் தோற்ரு இவற்றினுக்கு நின்றிடுவன் ஒன்றை அறிந்து இயற்ற செவ்விதினின் உளம்புகுந்து செய்தியெலாம் உணர்ந்து சேட்டிப் பித்து எங்குமாய்ச் செறிந்து நிற்பன் ஆதலால் நாம் அரனடியை அகன்று நிற்பது எங்கேயாமே.

(பொ-ரை) மேற்கூறியவாறு அனுதியான ஆணவமலத்தினின்று நீங்குவதுபோல அனுதியாகிய இறைவனை விட்டும் உயிர் நீங்குமோ எனின், எக்காலத்தும் இறைவனை விட்டு உயிர் நீங்காது. எதனுலெனின், பெத்த முத்தி இரண்டினும் ஆன்மாக்கட்கு இறைவன் திருவடியை இன்றி அறிவு செயல்கள் விளங்குதலும் விளங்கியபின் விடயத்திற் சென்று பற்றுதலும் கூடாவாம். அக்கரங்களை இயக்குதற் பொருட்டு அகரமாகிய நாதம் அவ்வக்கரங்களின் உடன் நிற்குமாறுபோல ஆன்மாக்கட்கு அறிவுசெயல் விளங்குதற் பொருட்டு இறைவன் அவ்வான்மாக்களோடு கலந்து நிற்பன். இது காட்டும் உபகாரம். அங்ஙனம் விளங்கிய அறிவுசெயல்கள் விடயத்திற்சென்று பற்றுதற் பொருட்டு அவ்வுயிர்களை இறைவன் இடமாகக்கொண்டு உயிர்கள் செல்லும் வழி எல்லாம் இறைவன் அறிந்து செலுத்தி விடயங்களினும் உடனுகக் கலந்து நிற்பன். இது காணும் உபகாரம். ஆதலால் ஆணவமலத்தினின்றும் நீங்கி முத்தியில் உயிர்வேறு நிற்பதுபோல இறைவனை விட்டு நீங்கி தனித்து நிற்றல் பந்த முத்தி இரண்டினுமில்லை. (எ ... று)

இதனுல் மலம் அனுதியாய்க் கூடியுள்ளதாதலால் பிரியுமெனவும், இறைவன் அனுதியாய்க் கலந்துள்ளானுதலால் பிரிக்கப்படானெனவும், கூடுதலுக்கும் கலத்தற்கும் வேற்றுமை உண்டெனவும் அறிக.

காட்டும் உபகாரமேயன்றிக் காணும் உபகாரமும் உயிர்க்கு வேண்டப்படுமென்பதை கண்ணொளியினிடத்துக் கலந்திருக்கின்ற விளக்கொளியில் வைத்தும் அறியலாம். அதாவது கண் ஒரு விடயத்தைக் காணவேண்டுமாயின் அக்கண்ணினிடத் திருக்கின்ற இருளை விளக்கொளி மாற்றுவதோடு பார்க்கப்படும் பொருளினிட

த்தும் இருளை மாற்றல் வேண்டும். அவ்வாறின்றி கண்விளக்கொளி யோடு கூடினும் பொருள் இருளில் இருக்குமாயின் பொருளை அறிய முடியாது. ஒளியோடு கூடிய பொருளை இருளிலிருக்கின்ற கண் பார்க்கின்றதே எனின், அவ்விருளிலிருக்கின்ற கண்ணொளி பொருளிற் கலந்திருக்கின்ற விளக்கொளியோடு சென்று கலந்து பொருளை அறிவதே யன்றி பிறிதில்லை என அறிக. இதனால் கண்ணொளிக்கு காணுந்தன்மையுஞ் செல்லுந்தன்மையும் உண்டெனவும் அவற்றுள் கண்ணோடுகூடிய இருள் காணுந் தன்மையைத் தடுக்குமேயன்றிச் செல்லுந் தன்மையைத் தடுக்காதாதலின் கண் இருளோடு கூடியிருப் பினும் ஒளியோடுகூடிய பொருளை அறிதல் கூடுமெனவும் அறிக. ()

முதலதிகரணம் முடிந்தது.

---

# இரண்டாமதிகரணம்.

---

இத்தை ஆயுமறிவுடையனாய்.................இருப்பன் என்பது.

இறைவன் அத்துவிதமாய் நின்று காட்டிக் காணும் உபகாரத் தைச் செய்யினும் அவ்வாறு செய்கின்றானென்பதை அறிவுடைய பக்குவரே யன்றி அபக்குவர் அறியாரெனக் கூறுகின்றது.

எங்குந்தா னிறைந்துசிவ னின்றா னாகி
　　லெல்லாருங் காணவே வேண்டுந்தா னென்னி
லிங்குந்தா னந்தகருக் கிரவியிரு ளாகு
　　மீசனருட் கண்ணில்லார்க் கொளியாயே யிருளாம்
பங்கந்தா னெழும்பதுமம் பக்குவத்தை யடையப்
　　பரிதியலர்த் திடுவதுபோல் பருவஞ்சே ருயிர்க்குத்
துங்கவரன் ஞானக்கண் கொடுத்தருளி னாலே
　　சோதிக்குட் சோதியாய்த் தோன்றிடுவன் காணே.

(கொ-டு) சிவன் எங்குந்தான் நிறைந்து நின்றானாகில் எனவும் இரவி அந்தகருக்கு இருளாகும் எனவும் ஈசன் ஒளியாயே அருட்கண் இல்லார்க்கு

இருளாம் எனவும் ஞானக்கண் அரன் தங்க அருளினாலே கொடுத்து எனவுங் கூட்டுக.

(பொ-ரை) மேற்கூறியவாறு முதல்வன் எங்கும் நிறைந்து நின்று உபகரித்து வரின் யாவரும் என் அறியவில்லை எனின், ஆதித்தன் எங்கும் விளக்கமாயிருப்பினும் அந்தகருக்கு அறியவாராது இருளாயிருப்பது போல முதல்வன் உபகாரம் விளக்கமாயிருப்பினும் அருட்கண்ணுடையார்க்கன்றி எனையோர்க்கறியவாராது. சேற்றிற்றோன்றிய தாமரை மலர்களுள் பக்குவமுடைய தாமரை மலரைமட்டும் ஆதித்தன் விரியச் செய்தல் போல அவ்வருட்கண்ணும் பக்குவமுடையார்க்கன்றி கிடைக்கப் பெறாது. பக்குவமுடையார்க்கும் அவ்வருட்கண் முதல்வன் பெருங்கருணையால் கொடுக்கப்பெற வேண்டுமே யன்றி தானே பெறமுடியாது. ஆதலால் முதல்வன் அருளால் அவ்வருட்கண்ணைப் பெற்றுடையார்க்கே அவ்விறைவன் அறிவிற்கறிவாய் நின்று உபகரித்து வரும் அத்துவித நிலை இனிது விளங்கும். (எ-று) (அ)

முத்திநிலையை வேறு வேறு கூறும் ஈசுவர அவிகாரவாதி, பரிணாமவாதி, ஐக்கியவாதிகளை மறுத்துரைக்கின்றது.

சென்றணையு நிழல்போலச் சிவனிற்ப னென்னிற்
 சென்றணையு மவன்முதலி சிவத்தையணைந் தொன்றாய்
நின்றதுயிர் கெட்டென்னாற் கெட்டதனை யின்றா
 நின்றதேற் கேடில்லை யணைந்துகெட்ட தென்னிற்
பொன்றினதேன் முத்தியினைப் பெற்றவரார் புகனீ
 பொன்றுகையே முத்தியெனிற் புருடனித்த னன்றா
மொன்றியிடு நீரொடுநீர் சேர்ந்தாற்போ லென்னி
 னொருபொருளா மதிபதியோ டுயிர்பொருளொன் றன்றே.

(கொ-டு) உயிர்கெட்டு சிவத்தை அணைந்து ஒன்றாய் நின்றதென்னின் எனவும் நீரோடுநீர் சேர்ந்தாற்போல் ஒன்றியிடும் என்னின் எனவுங்கூட்டுக.

(பொ-ரை) அருட்கண் இறைவன் கொடுக்கப்பெற்று அக்கண்ணிற்கு இறைவன் தோன்றுவானென்று கூறல் வேண்டாம். மரத்தினிழல்போல் முதல்வன் விகாரமின்றி நிற்ப அந்நிழலைச் சென்றணையும் வழிச்செல்வோரைப் போல் உயிர்களுக்குப் பருவம் வந்தவிடத்து தாமே ஞானக் கண்ணைப்பெற்று அம்முதல்வனைக் கூடுதல் அமையுமென ஈசுவர அவிகாரவாதிகள் கூறுவர். இவ்வுவமையில் மரநிழலிற்கு வழிச் செல்வோரை அணையச் செய்யும் சுதந்தரமின்மையும் சென்றவனுக்கு அணையுஞ் சுதந்திரஉண்மையுங் காணப்படுதல் போல ஈசுவரனுக்கு சுதந்தர மின்மையும் உயிருக்கு சுதந்தர வுண்மையும் காண

ப்படுதலின் இது பொருந்தாது. இனி பரிணாம வாதிகள் உயிர்கெட்டுக்கூடி முதல்வனடியில் ஒன்றாய்ப் போமென்பர். கெட்டபின் கூடுமாறின்று, கெடாது நின்று கூடுமெனின், கேடின்மையினால் ஒன்றுதல் பெறப்படாது, கூடியபின் கெட்டதெனின், கெட்ட விடத்து முத்தியினைப் பெற்றவர் யாவரென்னும் வினாவிற்கு விடையின்று. கேடே முத்தி எனின், உயிர் நித்தமாதல் செல்லாது. ஆதலால் அவர் கூற்றும் வழுவாம். இனி ஐக்கியவாதிகள் நீரிலே நீர் சேர்ந்தாற் போல உயிர் முதல்வன் திருவடியைச் சேர்ந்து ஒன்றுமென்பர். உவமானப் பொருளி சமமானாற் போல முதல்வனும் உயிரும் தம்முள் சமப் பொருளாதல் செல்லாமையின் அதுவும் பொருந்தாது. (எ-று) (கூ)

சிவசமவாதி கூறும் முத்தியை மறுத்துரைக்கின்றது.

செம்பிரத குளிகையினாற் களிம்பற்றுப் பொன்னாய்ச்
செம்பொனுடன் சேருமலஞ் சிதைந்தாற் சிவ
னம்பனுடன் கூடுமெனிற் பொன்போ லல்ல
னற்குளிகை போலவர னணுகுமலம் போக்கி
யம்பொனடிக் கீழ்வைப்ப னருங்களங்க மறுக்கு
மக்குளிகை தானும்பொன் னாகா தாகு
மும்பர்பிரா னுற்பத்தி யாதிகளுக் குரிய
னுயிர்தானுஞ் சிவானுபவ மொன்றினுக்கு முரித்தே.

(கொ-டு) நற்குளிகை போல அரன் பொன் போல் அல்லன் அருங்களங்கம் அறுக்கும் அக்குளிகை பொன்றானும் ஆகாது உயிர்தானும் சிவாநுபவம் ஒன்றினுக்குமே உரித்து உம்பர்பிரான் உற்பத்தி யாதிகளுக்குரியனாதும் அணுகும் மலம்போக்கி அம்பொன் அடிக்கீழ் வைப்பன்.

(பொ-ரை) இனி சிவசமவாதிகள் செம்பினிடத்துக் களிம்புள்ள அளவும் பொன்னுடன் ஒத்து ஒன்றாதலில்லையாயினும் இரத குளிகையினால் களிம்பு நீங்கிய விடத்து செம்பு பொன்னாகி யேனைப் பொன்னுடன் ஒத்து ஒன்றாகும். அது போல மல நீங்கியவிடத்து உயிர் முதல்வனோடு ஒத்து ஒன்றாகுமென்பர். களிம்பை நீக்கும் ஆற்றல் பொன்னுக்கு இல்லாமையால் அவ்வாற்றலையுடைய இரத குளிகையை முதல்வனோடு ஒப்பிடுவதன்றி பொன்னை முதல்வனோடு ஒப்பிடுதல் இவ்விடத்துப் பொருந்தாது. அன்றியும் களிம்பு நீங்கிய பொன் குளிகையைப் போல் களிம்பை நீக்காது. அதுபோல மல நீங்கிய உயிர் சிவானுபவத்திற்கு உரித்தாதலன்றி ஐந்தொழிற்கு உரித்தாதல் செல்லாது. முதல்வனே ஐந்தொழில் செய்தற்கு உரிமையுடையவனாவன். அம்முதல்வன் உயிர்களிடத்துப் பொருந்திய மலத்தை நீக்கி பொன்போலும் தனது திருவடிக்கீழ்

வைப்பன். இதனால் பொன்னுக்கு ஒப்பாக திருவடியைக் கூறினதேயன்றி இறைவனைக் கூறியதன்று. திருவடிக்கீழ் வைப்பன் என்றதனால் அடக்கி வைப்பனெனப்பட்டு அவன் செய்யும் ஐந்தொழிலை உயிர் செய்ய முடியாதென்பதும் விளங்கும். ஆதலால் சிவசமவாதம் கூறும் அவர் மதமும் அடாது. (எ...று) (கo)

இறைவனுக்கும் ஆன்மாவிற்கும் உள்ள அந்தரங்க பேதங்களை யெடுத்துக் காட்டி ஆன்மா இறைவனோடு சமமாகா தென்பதைவலி யுறுத்துகின்றது.

சிவன்சீவ னென்றிரண்டுஞ் சித்தொன்று மென்னிற்
சிவனருட்சித் திவனருளைச் சேருஞ்சித் தவன்றான்
பவங்கெடு புத்திமுத்தி பண்ணுஞ்சித் தவற்றிற்
படியுஞ்சித் தறிவிக்கப் படுஞ்சித்து மிவன்றா
னவன்றானே யறியுஞ்சித் தாதலினா லிரண்டு
மணைந்தாலு மொன்றாகா தநந்நியமா யிருக்கு
மிவன்றானும் புத்தியுஞ்சித் திவனாமோ புத்தி
யிதுவசித்தென் றிடிலவனுக் கிவனுமசித் தாமே.

(கொ-டு) (இவன்) அவற்றிற் படியுஞ் சித்து அவன்தானே அறியுஞ் சித்து இவன்றான் அறிவிக்கப்படும் சித்தும் இரண்டும் அணைந்தாலும் அநந்நியமாயிருக்கும் ஒன்றாகாது ஆதலினால்.

(பொ-ரை) முதல்வனும் உயிரும் சித்துப் பொருள் ஆதலால் ஒத்து ஒன்றாகும் என்றலே பொருந்தும். அவ்வாறன்றி உயிர் சிவானுபவம் ஒன்றற்கே உரித்தென்று கூறுதல் பொருந்தாது எனின், சிவன் அருளாகிய சித்து. உயிர் அவ்வருளைச் சேரும் சித்து. சிவன் பிறப்பினைக் கெடுத்து போகமோட்சம் தரும் சித்து. உயிர் அவைகளில் அழுந்தும் சித்து. இவன் தானே அறியும் சித்து. உயிர் அறிவிக்க அறியும் சித்து. இவ்வாறு சித்து இரண்டிற்கும் வேற்றுமை யிருப்பது எதுபோல எனின், கண்ணொளியும் சூரியன் ஒளியும் போலவாம். எவ்வாறெனின், அவ்விருவொளிகளும் ஒளி யென்கின்ற பொதுமையால் சமமாயிருப்பினும் கண்ணொளியானது சூரியனொளியின் துணையையின்றி ஒரு பொருளையும் காணமாட்டாது. சூரிய னொளி துணை வேண்டாது தானே விளக்கும். இவ்வாறே சிவனுக்கு ம் உயிருக்கும் வேற்றுமை பெரிதும் உண்மையால் சிவனோடு உயிர்கூடிய விடத்தும் அத்துவிதமாய் (கலந்து) நிற்றலே யன்றி ஒன்றாய்ப் போமாறில்லை. அன்றியும் உயிரும் புத்தி தத்துவமும் உணரும் ஒப்புமை பற்றி சித்தெனக்கூறப்படினும் புத்தி தத்துவம் உயிராதலில்

லாதது போலவுமறிக. அப்புத்தி தத்துவம் சடமும் உயிர் சித்துமாகிய வேற்றுமை யுடைமையால் ஒன்றாகாமை ஒக்கும். முதல்வனும் உயிரும் சித்தேயாதலின் ஒன்றாகு மென்பதே பொருத்த மெனின், உயிரும் ஏனைத் தத்துவங்களை நோக்க சித்தேயாயினும் முதல்வனை நோக்க சடமேயாம். ஆதலால் ஒன்றுமாறில்லை. (எ...று) (கக)

ஈசுவர அவிகாரவாதி பரிணாமவாதி அய்க்கியவாதி சிவ சமவாதிகள் கூறும் ஆசங்கைகளை மறுத்து வேறு வேறு உவமையெடுத்துக் காட்டி சித்தாந்தத்தை வலி யுறுத்துகின்றது.

இரும்பைக்காந் தம்வலித்தாற் போலியைந்தங் குயிரை
யெரியிரும்பைச் செய்வதுபோ லிவனைத்தா னாக்கி
யரும்பித்திந் தனத்தைபன லழிப்பதுபோன் மலத்தை
யறுத்தமல னப்பணைந்த வுப்பேபோ லணைந்து
விரும்பிப்பொன் னினைக்குளிகை யொளிப்பதுபோ லடக்கி
மேளித்துத் தானெல்லாம் வேதிப்பா னாகிக்
கரும்பைத்தே னைப்பாலைக் கனிய முதைக் கண்டைக்
கட்டியைபொத் திருப்பனந்த முத்தியினிற் கலந்தே.

(கொ-டு) காந்தம் இரும்பை வலித்தாற்போல் (அமலன்) அங்கு உயிரை இயைந்து எரிஇரும்பைச் செய்வதுபோல் அனல் இத்து அரும்பு இந்தனத்தை அழிப்பதுபோல் (அமலன்) இவனைத்தானாக்கி மலத்தை அறுத்து அப்பு அணைந்த உப்பேபோல் விரும்பி அமலன் அணைந்து குளிகை (மேளித்து) பொன்னினை ஒளிப்பதுபோல் தான் எல்லாம் மேளித்துவேதிப்பானாகி அடக்கி கரும்பைத் தேனைப் பாலைக் கனியமுதைக் கண்டைக் கட்டியைக் கலந்தே ஒத்து (அமலன்) அந்த முத்தியினில் இருப்பன்.

(பொ-ரை) ஈசுவர அவிகார வாதிகள் இறைவன் விகாரமின்றி நிர்விகாரியாய் நிற்பன் ஆதலால் மரநிழலுவமையைமறுத்தது செல்லாதென்பரெனின், காந்தமானது விகாரமின்றி நின்றே இரும்பை இழுப்பதும் கண்டாம். அதுபோல இறைவனும் விகாரமின்றியே உயிரைத்தன் வழிப்படுத்தி நிற்பன். ஆதலின் மரநிழல்போல சிவன் இல்லையென்றது பற்றி சிவன் நிர்விகாரியாதற்கு இழுக்கில்லை யென்க. பரிணாமவாதிகள் முத்தியில் இறைவனும் உயிரும் ஒன்றுமாதலால் கேடே முத்தி யென்றதை மறுத்தது பொருந்தாதென்பரெனின், தீயானது இரும்பைக் கெடுக்காமல் தன் வண்ணமாக்கி அவ்விரும்பின் கண் உடன்றோன்றி நிற்கின்ற கறைமாத்திரம் கெடச்செய்யும். அதுபோல இறைவனும் உயிரைத் தன் வண்ணமாகச் செய்து அவ்வுயிரின் கண் உடன்றோன்றி

நிற்கின்ற மலமாத்திரம் கெடச் செய்வனுதலால் கெடுதல் முத்தியாகாது என்றது பற்றி ஒன்ருதற் கிழுக்கில்லை யென்க. அயிக்கியவாதிகள் முத்தியில் உயிர் சிவனேடு சமமாதலால் நீரொடு நீர் சேர்ந்தாற்போலென்றஉவமையைமறுத்தது செல்லாதென்பர் எனின், நீரோடுசேர்ந்த உப்பானது தன் சுவை முழுவதும் அந்நீர்க்காக்கி தன்னேடொப்ப சமன்செய்து நிற்கும். அதுபோல உயிரைச் சேர்ந்த இறைவனும் தனக்குரிய எண்குணங்களையும் அவ்வுயிரின்கட் பதிப்பித்து தன்னேடு ஒப்பச்செய்து நிற்பன். ஆதலால் நீரோடு "நீர்சேர்ந்தாற்போல் என்பதை மறுத்ததுபற்றி சிவசமமாவதற் கிழுக்கில்லை யென்க. சிவசமவாதிகள் உப்புடன் கூடிய நீர் உப்பாதல் போல சிவனுடன் சேர்ந்த உயிர் சிவமாகி சிவன் செய்யும் பஞ்சகிருத்தியங்களைச் செய்யுமாதலின் உயிர் பஞ்சகிருத்தியம் செய்யாதென்றது பொருந்தாதென்பர் எனின், இரத குளிகை செம்பை யுருக்கி தன்னேடு கூட்டிப் பொன்னுகச் செய்தும் அக்குளிகை தன்னிடத்துள்ள பொன்னியல்பை அப்பொன்னுக்குக் காட்டாதுதன்னுளடக்கி நிற்குமாறு போல இறைவன் உயிருக்கு எண் குணங்களெல்லாம் பதியச்செய்தும் பதிந்த அவ்வெண் குணங்களினியல்பு சிறிதும் தோன்ருது அறிவிறந்து நிற்குமாறு தனது வியாபகத்துள்ளடக்கி நிற்குமாதலால் உம்பர் பிரான் ஒருவனே உற்பத்தியாதிகளுக் குரியனுதற் கிழுக்கில்லை யென்க. சுத்தசைவர் அறிவிறந்து நிற்கும் முத்திநிலையில் அனுபவங்கூடாதாதலின் சிவாநுபவத்திற்கு உரித்தென்றல் பொருந்தாதென்பர் எனின், கருப்பஞ்சாறு, தேன், பால், கனி, இரதம், கற்கண்டு, சருக்கரை முதலிய சுவைப்பொருளெல்லாம் ஒன்ருகக் கலந்தவிடத்து உளதாகிய சுவை இத்தன்மைத்தெனப் பிரித்தறியவாராது. அது போல இறைவனும் பரமுத்தியில் உயிரோடு கலந்தவிடத்து இத்தன்மைத்தெனப்பிரித்தறிய முடியாத ஆனந்த சொரூபமாய் நிற்பனுதலால் அறிவிறந்து நிற்பன் என்பது பற்றி சிவாநுபவத்திற் குரித்தாதற்கிழுக்கில்லை யென்க. அறிவிறந்து நிற்றலென்பதற்கு பிரித்தறியாது நிற்றலென்பது பொருளாம். (எ...று)

எட்டாம் சூத்திரத்தில் மலரடிக் கீழ்வைப்பன் என்றதை இச்செய்யுளில் நிர்விகாரியாய் தன் வண்ணமாகச் செய்து எனக் கூறினர். இது சிவரூபம். ஒன்பதாம் சூத்திரத்தில் பாதநிழற் கீழ் நிற்க என்றதை இச்செய்யுளில் தன்னேடொப்பச் செய்தெனக் கூறினர். இது சிவ தரிசனம். பத்தாம் சூத்திரத்தில் ஏகனுகிநின்றிட வென்றதை இச்செய்யுளில் உயிரினியல்பு சிறிதும் தோன்ருது நிற்குமாறு அடக்கி நிற்குமெனக் கூறினர். இது சிவயோகம். இப்பதினென்ரும் சூத்திரத்தில் அரன்மலரடிக் கீழிருப்பனென்றதை இச்செய்யுளில் பிரிந்தறியவராது ஆனந்த சொரூபமாய் நிற்பனெனக்

கூறினர். இது சிவபோகம். இவ்வாறு நான்கு சூத்திரங்களுக்கும் பேதம் உண்டென்பதை இச்செய்யுளிற் கூறியவாறறிக. இன்னும் நிர்விகாரி யாக்கல் நின்மல சாக்கிரம். தன் வண்ணமாகச் செய்தல் நின்மல சொப்பனம். தன்னோடொப்பச் செய்தல் நின்மல சுழுத்தி. அடங்கி நிற்கச்செய்தல் நின்மல துரியம். ஆனந்த சொரூபமாய் நிற்கச் செய்தல் நின்மல துரியாதீதம் எனவும் அறிக. (கஉ)

இரண்டாமதிகரணம் முடிந்தது.

பதினொன்றாம் சூத்திரம் முடிந்தது.

ஆகத் திருவிருத்தம்—௩உக.

## பன்னிரண்டாம் சூத்திரம்.

மேல் பத்தாஞ்சூத்திரத்தால் பாச நீக்கமும் பதினொன்றாம் சூத்திரத்தால் சிவப்பேறும் கூறினமையால் அப்பயனைப் பெற்ற முத்தர் உடம்புள்ள அளவும் எவ்வாறிருப்பர் என்னும் ஆசங்கை நிகழுமன்றே? அந்நிகழ்ச்சி பற்றி சீவன் முத்தி நிலையில் நிகழும் இயல்பினை வகுத்துக் கூறுதற்கு எழுந்தது பன்னிரண்டாம் சூத்திரம். மேல் ஆசங்கை யின்மையின் இச்சூத்திரத்தோடு நூல் முடிகின்றது.

சீவன் முத்தரியல்பு இவ்வாறெனச் சூத்திரப்பொருளைத் தொகுத்துக் கூறுகின்றது.

செங்கமலத் தாளிணைகள் சேர லொட்டாத்
திரிமலங்க ளறுத்தீச னேசரொடுஞ் செறிந்திட்
டங்கவர்தந் திருவேட மாலயங்க ளெல்லா
மரனெனவே தொழுதிறைஞ்சி யாடிப்பாடி
யெங்குமியா மொருவர்க்கு மெளியோ மல்லோம்
யாவர்க்கு மேலானோ மென்றிறுமாப் பெய்தித்
திங்கண்முடி யாரடியா ரடியோ மென்று
திரிந்திடுவர் சிவஞானச் செய்தியுடை யோரே.

(பொ-ரை) மேற்கூறியவாறு சிவப்பேறெய்திய முத்தர்களுக்கு கன்மத்துக் கீடான சரீரம் உள்ள அளவும் இறைவன்றிருவடியை அடைய ஒட்டாது முன் மறைத்தலைச் செய்துநின்று பின்பற்றறக் கழிந்த மும்மலங்கள் விளக்கற்றம் பார்க்கும் இருள்போல அறிவற்றம் பார்த்து நிற்பனவாம். ஆதலால் அம்முத்தர் அவற்றை அஞ்சாது நிட்டையினாற் பரிகரித்தும், அங்ஙனம்நிட்டைசாதித்தற்குத் துணையாகிய மெய்யன்பரோடு பழகியும், அப்பழக்கம் நிலைபெறும்படி அவரது திருவேடத்தையும் சிவாலயத்தையும் சிவனெனக் கண்டு வழிபாடியற்றி ஆனந்த மேலீட்டால் ஆடல் பாடல்களைச் செய்தும், இப்பேறு பெறமாட்டாதவர் சிறுமையை நோக்கி யாவர்க்கும் மேலானேமென்று ஆனந்த மெய்தியும், இப்பேறு பெற்றார் பெருமையை நோக்கி அவர்க்கு அடிமையென வாழுமியல்பினையும் உடையராவர். இவர் சீவன்முத்தரெனப்படுவர். (எ...று)

இச்செய்யுள் முதனூல் போல் முக்கூற்றை யுடையது. அவற்றுள்

முதற்கூறு—செங்கமலத்தாளிணைகள் சேரலொட்டாத் திரிமலங்க ளறுத்து.

இரண்டாங் கூறு—ஈசனேசரொடும் செறிந்திட்டு.

மூன்றாங் கூறு—அங்கவர் தம் திருவேடம் ஆலயங்களெல்லாம் அரனெனவே தொழு திறைஞ்சி ஆடிப்பாடி............................................................செய்தியுடையோரே.

இவற்றுள் முதற்கூறு இச் செய்யுளிலேயே செங்கமலத்தாளிணைகள் சேரலொட்டா வெனக்கூறி மலத்தை எதற்காக நீக்கவேண்டும் என்னும் ஆசங்கையை நீக்கினமையின் வேறு கூறாது விடுத்தனர். (க)

---

# இரண்டாம் அதிகாரம்.

---

ஈசனேசரொடும் செறிந்திட்டு என்பது.

சீவன் முத்தன் சிவனடியாரிடத்து அன்புடையனாகவும் ஏனைய அறிவில்லாரிடத்து வெறுப்புடையனாகவும் இருக்கவேண்டுமெனக் கூறுகின்றது.

ஈசனுக்கன் பில்லா ரடியவர்க்கன் பில்லா
 ரெவ்வுயிர்க்கு மன்பில்லார் தமக்குமன் பில்லார்
பேசுவதென் னறிவில்லாப் பிணங்களோநா மிணங்கிற்
 பிறப்பினிலு மிறப்பினிலும் பிணங்கிடுவர் விடுநீ
யாசையொடு மரனடியா ரடியாரை யடைந்திட்
 டவர்கரும முன்கரும மாகச் செய்து
கூசிமொழிந் தருண்ஞானக் குறியி னின்று
 கும்பிட்டுத் தட்டமிட்டுக் கூத்தாடித் திரியே.

(கொ-டு) நாம்பேசுவது என் நீ அரன் அடியார் அடியாரை அடைந்திட்டு அவர்கருமம் உன் கருமமாக அருண்ஞானக்குறியில் நின்று ஆசையொடுஞ்செய்து அறிவில்லாப் பிணங்களை இணங்கில் பிறப்பினிலும் இறப்பினிலும் பிணங்கிடுவர்விடு கூசி மொழிந்து கும்பிட்டுத் தட்டமிட்டுக் கூத்தாடித் திரியே.

(பொ-ரை) காமுகனுவா னொருவன் ஒரு பெண்ணிடத்து அன்புடையனுகில் அவ்வன்புடைமையை அப் பெண்ணினுடைய சுற்றத்தைக் கண்டவிடத்து நிகழும்அன்பினளவாகத் தெளியப்படும். அதுபோல ஈசனுக்கன்புடையனுகில் அவ்வன்புடைமை அவனடியவரைக் கண்ட விடத்து நிகழும் அன்பினளவாகத் தெளியப்படும். ஆதலால் அடியவரிடத்து அன்பில்லாதார் ஈசனிடத்தும் அன்பில்லாதாரே ஆவர். அவர் ஈசனுக்கன்புடையவர் போல் ஒழுகுதல் நாடக மாத்திரையே யன்றிப் பிறிதில்லை. அன்றியும் ஈசன் எவ்வுயிரிடத்தும் உளனுதலால் அத் தொடர்பு பற்றி எவ்வுயிர்க்கும் அன்புடையராதல் கூடும். ஈசனிடத்து அன்பில்லாதவிடத்து எவ்வுயிரிடத்தும் அன்பில்லாதவரே யாவர். இவ்வாறு சிவனடியாரிடத்தும் ஏனைய உயிர்களிடத்தும் அன்பில்லாதார் தம்முயிர்க்குநிலை.த்த இன்பத்தைச் செய்து கொள்ளாதவ ராதலின், அவரைப் பற்றி நாம் என்ன சொல்வது! காமம் மிகுதியுடையவர்க்கு அத்தொடர்புடையாருடைய இணக்கம் அக்காமப் பயிரை வளர்க்கும் நீராதலால் அவ் விணக்கத்தில் மிகுந்த உவகையுண்டாவதுபோல அரன் மலரடிக்கீழிருக்கப் பெற்ற நீ அவ்வனுபவத்தை வளர்க்கும் தன்மையாகிய அடியாரோ டிணங்கி அவர் பணியை உன் பணியாக அகங்காரமுனைப் பின்றி உவகை மிகுதியுடன் செய்து காமுகரல்லாதா ரிணக்கம் காமப் பயிரைக் கெடுக்கும் களை யென்றெண்ணி காமுகர் வெறுப்பதுபோல சிவாநுபவத்தைக் கெடுக்குந் தன்மையாகிய அறிவில்லாப் பிணம்போன்றவரோடு இணங்கில் பிறப் பிறப்பாகிய துன்பத்தை உண்டுபண்ணுவ ராதலின், அவரிணக்கத்தை விட்டு நீங்கி அடியாரது உயர்வையும் உனது இழிவையும் நோக்கி நாணி அடியாரிடத்துத் தாழ்ந்த மொழி கூறி உவகை மிகுதியால் கும்பிட்டு கைகொட்டி கூத்துமாடித் திரிவாயாக. (எ...று)

அநுபவ நிலையை விதியாகக் கூற வேண்டுவதின் ருகவும் அந்நிலை அனுபவமாய் ஆனந்தம் விளைத்தலே யன்றி சாதனமாய் மலம் அறுத்தலும் செய்தலின் விதி முகமாகக் கூறினர்.

உயிர்களிடத்து அன்பில்லாதவர் தமக்கும் அன்பில்லாதவரென்ற இக் கருத்து "அன்பிலா ரெல்லாந் தமக்குரியர்" என்ற திருக்குறளோடு முரணுதோ எனின், தம் என்னுஞ் சொல்லிற்கு இவ்விடத்து உயிரும் குறளில் உடம்புமாதலில் முரணுமை யறிக. (உ)

இரண்டாமதிகரணம் முடிந்தது.

---

# மூன்றாமதிகரணம்.

---

ஈச னேசரோடும் சேறிந்திட்டு என்பது.

பாசப்பற்றுடையார் பற்று விடுதற்கு சிவனடியாரை சிவனெனவே துணிந்து வழிபட வேண்டுமெனக் கூறுகின்றது.

அறிவரியான் றனையறிய யாக்கை யாக்கி
யங்கங்கே யுயிர்க்குயிரா யறிவுகொடுத் தருளாற்
செறிதலினுற் றிருவேடஞ் சிவனுருவே யாகுஞ்
சிவோகம்பா விக்குமத்தாற் சிவனு மாவர்
குறியதனு லிதயத்தே யரனைக் கூடுங்
கொள்கையினு லரனுவர் குறியொடுதா மழியு
நெறியதனாற் சிவமேயாய் நின்றிடுவ ரென்று
னேசத்தாற் றொழுதிடுநீ பாசத்தார் விடவே.

(கொ-டு) பாசத்தார் விடவே நேசத்தால் நீ தொழுதிடு என்பதை முன்னுக வைத்துரைக்க.

(பொ-ரை) மேற்கூறியவாறு அறிவில்லாதாருடைய இணக்கத்தை விடுதற் பொருட்டு யாது செய்யவேண்டுமெனின், சிவனடியாரை சிவனெனவே தேறி அன்புடன் வழிபடல் வேண்டும். சிவனடியார் சிவமாவது எவ்வாறெனின்,சிந்தனைக்கு அதீதனுகிய பரம்பொருள் உலகத்தில் உள்ளார் தன்னை யறிதற் பொருட்டு திருநீறு கண்டிகைமுதலிய திருவேடமாகிய தனது வடிவத்தை

தன் அன்பர்க்குக்கொடுத்து உயிர்க்குயிராய் நின்று அவ்வன்பர் அறிவினை விளக்கி அருளினால் அவரோடு கலத்தலால் அத் திருவேடமுடைய மெய்யன்பர் சிவமே யாவர். சிவோகம் பாவனையானும் அவர் சிவமே யாவர். இருதயத் தானத்தில் ஒரு குறியின்கண் வைத்து முதல்வனைக் கூடும் செயலானும் அவர் சிவமே யாவர். அவ்வாறு கூடும் காலத்து குறியும் குறிக்கின்ற தாமு மின்றி நின்ற தன்மையானும் சிவமே யாவர். (எ...று) (ரு)

சிவாலயத்தை சிவனெனக் கண்டு வழிபடும் முறையைவகுத்துக் கூறுகின்றது.

திருக் கோயி லுள்ளிருக்குந் திருமேனி தன்னைச்
சிவனெனவே கண்டவர்க்குச் சிவனுறைவ னங்கே
யுருக்கோலி மந்திரத்தா லெனநினையு மவர்க்கு
முளனெங்கு மிலனிங்கு முளனென் பார்க்கும்
விருப்பாய வடிவாகி யிந்தனத்தி னெரிபோன்
மந்திரத்தில் வந்துதித்து மிகுஞ்சுரபிக் கெங்கு
முருக்காண வொண்ணாத பான்முலைப்பால் விம்மி
யொழுகுவது போல்வெளிப்பட் டருளுவனன் பர்க்கே.

(கொ-டு) திருக்கோயிலுள் இருக்கும் திருமேனிதன்னையே சிவனெனக் கண்டவர்க்கு சிவன் அங்கே உறைவன் மந்திரத்தால்உருக்கோலியெனநினையுமவர்க்கும் உளன் எங்கும் இலன் இங்கும் உளன் என்பார்க்கும் இந்தனத்தின் எரிபோல் மந்திரத்தில் விருப்பாய வடிவாகி (அங்கே) வந்து உதித்தும் அன்பர்க்கேமிகும் உருஎங்குங்காண ஒண்ணாத பால் சுரபிக்கு முலை பால் விம்மி ஒழுகுவது போல் அங்கே வெளிப் பட்டருளுவன்.

(பொ-ரை) மேற்கூறியவாறு சிவனடியாரை வழிபடுதலோடு சிவாலயத்தையும் சிவமெனக் கண்டு வழிபட வேண்டும். சிவாலய வழிபாடு நான்குவிதப்படும். அவை வருமாறு—சிவாலயத்துள் எழுந்தருளி யிருக்கும் சிவலிங்க முதலிய திருமேனிகளையே சிவம் வேறு இவ் வுருவம் வேறு என்னும் பேதமின்றி சிவம் எனக்கண்டு வழிபடுபவர் சரியையாளர். இவர்க்கு சிவபிரான் அத் திருமேனிகளில் வெளிப்படாது நின்று அருள் செய்வன். ஈசானாதி மந்திரங்களினால் அருவப் பொருளாகிய சிவபிரான் சிவலிங்க முதலியதிருவுருக்கொண்டான் எனக் கருதி மந்திரக் கிரியையால் வழிபடுவர் கிரியையாளர். இவர்க்கு விறகைக் கடந்த விடத்துத் தோன்றும் அக்கினி போல பிரயாசையின் பேரில் சிவபிரான் அத்திருமேனிகளில் வெளிப்பட்டுத் தோன்றி யருள் செய்வன். உள்ளம் எங்கணும் இல்லமாக வாழும் சிவபிரான் இத்திருமேனியிலும் வீற்

நிருந்து பூசை கொண்டருளுவ னெனக் கருதி சிவலிங்க முதலிய திருமேனி களை வழிபடுவர் யோகிகள். இவர்க்கு கறந்த விடத்துத் தோன்றும் பால் போல இலகுவில் வெளிப்பட்டுத் தோன்றி யருள் செய்வன். கிரியையாளர் யோகி கள் இருவர்க்கும் வெளிப்பட்டுத் தோன்றினும் அப்போ தப்போது தோன்று வதே யன்றி எப்போதும் தோன்றுவதில்லை. அவர்போல் ஏகதேசமாய் வழிபடாமல் நீங்காத அன்பினால் சிவலிங்க முதலியதிருமேனிகளை சிவமே யெ னக் கண்டு வழிபடுவர் ஞானிகள். இவர்க்கு மேம்பட்ட பசுவின் வடிவ முழு தும் காணப்படாத பால் தன் கன்றை நினைந்த மாத்திரையில் அதன் முலையில் விம்மி ஒழுகுவதுபோல் கருணை மிகுதியால் சிவபிரான் அவ்வன்பே தானாய் எப்போதும்அத்திருமேனிகளில் வெளிப்பட்டு நின்று அருள் செய்வன். ஆத லால் அவ்வன்பின் வழியே வழிபடுக. (ஏ-று)

திருவேடத்தையும் சிவாலயத்தையும் சிவனென வழி படினும் திருவேடத்தை வழிபடுதல் அவ்வேட முடையார் கருத்து சிவமாயி ருத்தல் பற்றி யெனவும் சிவாலயத்தை வழிபடுதல் வழிபடுபவர் கரு த்து சிவமாயிருத்தல் பற்றி யெனவும் அறிக. (ச)

ஞானிக்கு நால்வகை வழிபாடும் கூடுமெனவும் ஏனையோர்க்கு தன்னிலைமைக்கு மேம்பட்ட வழிபாடு கூடாதெனவும் ஞானியே யாவர்க்கும் குருவாவர் எனவும் சிவலாயமும் சிவனடியாரும் அக் குருவின் வேறல்ல எனவும் கூறுகின்றது.

ஞானயோ கக்கிரியா சரியை நான்கு
நாதன்றன் பணிஞானி நாலினுக்கு முரிய
னூனமிலா யோகமுதன் மூன்றினுக்கு முரியன்
யோகிகிரி யாவான்று ணெண்கிரியை யாதி
யானவிரண் டினுக்குரியன் சரியையினி னின்றோ
னச்சரியைக் கேயுரிய னாகலினால் யார்க்கு
மீனமிலா ஞானகுரு வேகுருவு மிவனே
யீசனிவன் றனென்று மிறைஞ்சி யேத்தே.

(பொ-ரை) மேலைச்செய்யுளிற் கூறியவாறு சிவாலயத்தை வழிபடுதல் அவரவர் கருத்துக்கு ஏற்ற வாறு உரித்தாயிருக்க சரியையாளரைப்போல் ஞானியும் அச்சிவாலயத்தை வழிபடுவானே னெனின், சரியை முதல் நான்கும் இறைவனது உண்மைப் பணியாதலால் ஞானி நாலினுக்கும் உரியன். எது போல வெனின், அகத் தொழில் செய்வார் புறத்தொழிற்கும் உரியராத

ல் போலவாம். புறத்தொழில் செய்வோர் அகத் தொழிற் குரியர் அல்லாதது போல் யோகியானவன் யோகம் கிரியை சரியை ஆகிய மூன்றிற்கும் கிரியாவான் கிரியை சரியையிரண்டிற்கும் சரியாவான் அச்சரியையொன்றிற்கும் உரியனுவன். ஆதலினுல் சரியை முதலிய அந்நால் வகைப் பாதத்தினிற்கும் மாணுக்கருக்கு, உபதேசிக்கும் ஆசிரியரும் அவ்வாறேயாவர். அதாவது ஞானகுரு எல்லாருக்கும் குருவாவரென்பதும் ஏனைய குரு தன்னின் மேம்பட்ட மாணுக்கருக்கு குருவாகாரென்பதுமாம். ஆதலால் ஞானகுருவே மேலான குருவென்றும் மேற்கூறிய சிவாலயங்களும் சிவனடியார்களும் இக்குருவேயென்றுந்துணிந்து சிவாலயம் சிவனடியார் ஆகிய அவ்விரண்டினும் வழிபடுக. (எ...று)(ரு)

ஞான குருவின் அருளாலன்றி சிவபிரான் திருவடியை அடைதல் கூடாதெனக் கூறுகின்றது.

மந்திரத்தான் மருந்துகளால் வாய்த்தவியோ கத்தான்
மணிபிரத குளிகையினுன் மற்று மற்றுந்
தந்திரத்தே சொன்னமுறை செய்ய வேத
சகலகலை ஞானங்க டிரிகால ஞான
மந்தமிலா வணிமாதி ஞானங்க ளெல்லா
மடைந்திடுமா சானருளா லடிசேர் ஞானம்
வந்திடுமற்றென்றாலும் வாரா தாகு
மற்றவையு மவனருளான் மருவு மன்றே.

(பொ-ரை) மந்திரங்களாலும் மருந்துகளாலும் சிறந்தயோகத்தாலும் மணியாகிய இரத குளிகையினுலும் இன்னும் சாத்திரங்களிலே கூறியவாறு செய்தலாலும் வருகின்ற சித்திஞானங்களும் வேதாகமம் முதலிய கலைஞானங்களும் மூன்றுகாலங்களையும் அறியும் ஞானங்களும் அளவில்லாத அணிமா முதலிய அட்டசித்தி ஞானங்களும் ஆகிய அனைத்தும் ஞானுசிரியன் இல்லாமலும் கூடும். சிவபெருமான் திருவடியை அடையும் ஞானம் ஞானுசிரியன் திருவருளால் கூடுதலே யன்றி வேறெவற்றானும் கூடாது. அக்குருவருளால் மேற்கூறிய சித்திமுதலிய ஞானங்களும் கூடும். ஆதலால் இக்குருவே ஈசன் என்று வழிபட்டுத்துதிக்க. (எ...று) (சு)

ஞானகுருவை வழிபட்டவர்க் குண்டாம் பயன் இதுவெனக் கூறுகின்றது.

பரம்பிரம மிவனென்றும் பரசிவன்று னென்றும்
பரஞான மிவனென்றும் பராபரன்று னென்று
மரன்றருஞ்சீர் நிலையெல்லா மிவனே யென்று
மருட்குருவை வழிபடவே யவனிவன்று னாயே
யிரங்கிபவா ரணம்யாமை மீனண்டஞ் சினையை
யியல்பினொடும் பரிசித்து நினைந்தும் பார்த்தும்
பரிந்திவைதா மாக்குமா போற்சிவமே யாக்கும்
பரிசித்தும் சிந்தித்தும் பார்த்துந் தானே.

(கொ-டு) இரங்கிய வாரணம் யாமை மீன் இவைஎனவும் சிவமேயாக்குந்தானே எனவுங் கூட்டுக.

(பொ-ரை) சொரூப சிவமும், தடத்த சிவமும், பர ஞானத்தையுடையாரும், சிவலிங்காதி மூர்த்தங்களும் சிவபக்தர் பொருட்டாக அப்போதப்போது வெளிப்பட்டருளி மறையும் மூர்த்தங்களும் ஆகிய வெல்லாம் குரு மூர்த்தமேயெனத்தேறி ஞானகுருவை வழி படுக. அவ்வாறு வழிபடின் சிவபெருமான் இக்குருவை ஆவேசித்து நின்று கோழியானது தன் முட்டையைப் பரிசித்துக் காத்துச் சிசுஉற்பத்தி செய்வது போல் மாணுக்கன் சிரசில் கையைவைத்தலாகிய பரிசதீட்சை செய்தும் ஆமையானது தன்முட்டையைக் கருதி சிசு உற்பத்தி செய்வது போல சிந்தித்தலாகிய பாவனுதீட்சை செய்தும் மீனானது பார்வையினால் சிசு உற்பத்தி செய்வதுபோல் பார்த்தலாகிய சட்சு தீட்சை செய்தும் சிவமாகச் செய்தருளுவன். (எ...று) (எ)

## மூன்று மதிகரணம் முடிந்தது.

## பன்னிரண்டாம் சூத்திரம் முடிந்தது.

ஆகத் திரு விருத்தம்-௩உஅ.

## சிவஞானசித்தியார் சுபக்கம் முற்றுப்பெற்றது.

மெய்கண்ட தேவன் திருவடி வாழ்க.

சிவஞானயோகிகள் திருவடி வாழ்க.

---

திருச்சிற்றம்பலம்.

# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 10 | 13 | சிவபக்தி | சிவகதி |
| 11 | 9 | இரிக்காலாகும் | இரிக்கலாகும் |
| 12 | 2 | போலென்பது | போஉவனென்பது |
| 13 | 14 | விகற்பமின்றி | விகற்பமின்றிய |
| 15 | 18 | க்கொடுப்பது | செய்து கொடுப்பது |
| ,, | 26 | உயிர்கண் | உயிர்க்கண் |
| 19 | 10 | என்பதை | என்பதற்கு |
| 25 | 5 | காரியப்பெரு | காரியப்பொரு |
| 28 | 4 | தருபவன் ஒருவன் வேண்டும் | வந்து நின்று போவது |
| 29 | 28 | அம்மீமாம்சகர் | தார்க்கிகர் |
| 32 | 12 | சோடு | கோடு |
| ,, | 19 | சித்தாந்தாந்த | சித்தாந்த |
| 33 | 18 | மீமாம்சகர் | சாங்கியர் |
| 34 | 27 | பிபஞ்ச | பிரபஞ்ச |
| 37 | 11 | சவிகர்ப்ப | சவிகற்ப |
| ,, | 33 | அக்கரங்கள் | அக்கரங்களின் |
| 40 | 25 | சவிகர்ப்ப | சவிகற்ப |
| 41 | 25 | அதவது | அதாவது |
| 42 | 15 | அவ்வகாயத்தின் | அவ்வாகாயத்தின் |
| 43 | 10 | மயை | மாயை |
| 56 | 16 | கடத்து | கடந்து |
| 63 | 9 | வென்றுமே | வொன்றுமே |
| 66 | 5 | ஞானசத்தியால் | ஞானசத்தியாவது |
| ,, | 6 | அறிவன் | அறியும் அறிவாம் |
| ,, | 7 | கிரியா சத்தியால் | கிரியாசத்தியாவது |
| ,, | 8 | செய்வன் | செய்யுந் திறம் |
| 68 | 11 | எதுவாக | ஏதுவாக |
| 70 | 17 | பொருள்களையும் | பொருளின்றன்மைகளையும் |
| 76 | 25 | செய்தி | செய்து |
| 82 | 23 | யகிதங் | யகிதஞ் |
| 83 | 1 | சிக்கிரகமாகி இரண்ய | சிக்கிரகமாகிய இரண் |
| 86 | 25 | எவல் | ஏவல் |
| 92 | 1 | அன்பிலார் | அன்பிலாது |
| ,, | 22 | ரென | னென |
| 93 | 24 | குறிபிப் | குறிப்பி |
| 94 | 31 | யாபினும் | யாயினும் |
| 98 | 6 | தாகித் | தாகிக் |
| 101 | 1 | தேவரும் மனிதரும் | தேவருக்கும் மனிதருக்கும் |
| 112 | 24 | வாயல் | வாயில் |

# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ,, | 26 | வாயல் | வாயில் |
| 113 | 22 | முனமுறை | [illegible] |
| 114 | 18 | குணமாக | விடயமாக |
| 145 | 13 | உசுழுத்தி | சுழுத்தி |
| 149 | 30 | கூறதாகும் | கூற்றதாகும் |
| 151 | 27 | பயிர்ச்சி | பயிற்சி |
| 152 | 13 | பயிர்ச்சி | பயிற்சி |
| 155 | 24 | ஞுழையு | ஞுழையு |
| 175 | 27 | நுந்து | [illegible]ந்து |
| ,, | 32 | கண்டதான | கண்டத்தான |
| 181 | 12 | சிவதை | சிவத்தை |
| 184 | 18 | விட | விடய |
| 188 | 15 | அறிதல் | அறிந்து துன்பந்தோற்றுவித்தல் |
| 232 | 29 | சைஞ | சைன |
| 233 | 24 | அறைந்திடிற் பூரணநிறைவு | அறிந்திடில் நிர்க்குண நிறைவு |
| 238 | 31 | படு மவும் | படுமெனவும் |
| 266 | 31 | ரணங்கள் | சரணங்கள் |
| 267 | 35 | அடிகூட்டி | அடிகாட்டி |
| 271 | 2 | உள | உள் |
| 272 | 8 | பறறு | பற்று |
| 276 | 25 | யாரம் | யாம் |